# அன்னமாச்சார்யரின் கீர்த்தனைகள்



எஸ். ஜெயப்பிரகாஷ்
ஆ. சோமசுந்தரம்

# அன்னமாச்சார்யரின் கீர்த்தனைகள்

தமிழாக்கம்

பேராசிரியர் எஸ். ஜெயப்பிரகாஷ்
தெலுங்குத்துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை - 625 021

&

ஆய்வாளர் ஆ. சோமசுந்தரம்
தமிழியற்புலம்
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை - 625 021

# BIBLIOGRAPHICAL DATA

TITLE : ANNAMACHARYARIN KEERTHANAIGAL

AUTHORS : DR. S. JAYAPRAKASH
PROFESSOR
DEPT. OF TELUGU & COMPARATIVE LITERATURE
MADURAI KAMARAJ UNIVERSITY
MADURAI - 625 021.

THIRU. A. SOMASUNDARAM
RESEARCH SCHOLAR
SCHOOL OF TAMIL STUDIES
MADURAI KAMARAJAR UNIVERSITY
MADURAI - 625 021.

EDITION : FIRST EDITION 2006



NO OF COPIES : 1000

PUBLISHERS : SRI DIVYA PUBLICATIONS
67-B, KAMBAR STREET
NAGAMALAI
MADURAI - 625 019
PHONE : 0452 - 2458906

PAGES : 1 - 236

PRICE : STUDENT EDITION : Rs. 80/-
LIBRARY EDITION : Rs. 150/-

PRINTERS : AJANTHAA ATCHAGAM
VADIPATTI - 625 218
PHONE : 9344116411

# DEDICATED
# TO
# THE LORD OF SEVEN HILLS



This Book is Published

with the Financial Assistance of

**TIRUMALA TIRUPATI DEVASTHANAMS**

Under their Scheme

"Aid to Publish Religious Books"

# அணிந்துரை

*பேராசிரியர். முனைவர்.* **இரா. அரங்கராஜர்** *M.A.,Ph.D.,*

ஸ்ரீ அன்னமாசாரியர் கவியில் கண்கண்ட தெய்வமான திருவேங்கடமுடையான் மேல் பல்லாயிரக்கணக்கான ஸங்கீர்த்தனங்களைப் பாடிப் பரவிய பக்த சிகாமணியாவார்.

இவர் கடப்பை மாவட்டம் ராஜம்பேட்டைக்கு அருகிலிருக்கும் தாளப்பாக்கம் என்ற கிராமத்தில் கி.பி. 1408 ஆம் வருஷம் அவதரித்தார். வைகாசி விசாகத்தில் வியாழக்கிழமையன்று திரு அவதரித்த இவர் சடகோபர்க்கு ஒப்பொருவரானார்; இவர் பாடிய பாடல்கள் அனைத்தும் திருவாய்மொழிக்கு ஒப்பாகச் சொல்லத்தகும். சடகோபரும் திருவேங்கடமுடையான் திருவடிகளையே பற்றிச் சரணம் புகுந்தார். அன்னபுகழ் அன்னமாசார்யரும்

இல சதூவுலு ராணீ இடுராக மானனீ
தலபு நீ பாதமுல தகுலே சாலு
எலமி ஸ்ரீவேங்கடேசா! நவிதிவி நன்னு நிட்டே
சலபட்டி நாகு நீ சரணமே சாலு (பாடல் 7)

(நான் கற்றாலும் கற்காமல் இருந்தாலும் என்னுடைய சிந்தனை உன்னுடைய திருவடிகளிலிருந்து அகலாதிருக்க வேண்டும்.

திருவேங்கடமுடையானே! அன்புடன் என்னை நீ ஏற்றுக்கொண்டாய். உன்னைச் சரணடைவதே எனக்குப் போதுமானது)

அவ்வாறே வேங்கடவனையே சரணாகப்பற்றி அகலகில்லேன் என்று கூடியிருந்தார்.

திருவேங்கடமுடையானே இவர் கவிகளுக்குப் பொருளாகவும் மூலமாகவும் திகழ்ந்தான். வேங்கடத்துறைவானை முப்பத்தீராயிரம் கீர்த்தனைகளில் பாடிப்பரவி பக்தி பாரவச்யத்தாலே பிரபற்றரானார்

கோஷ்டியில் எண்ணத்தக்கவரானார். இவருடைய பாடல்களில் இன்று கிடைத்திருப்பது 12,000 பாடல்களேயாகும். இவையாவும் செப்பேடுகளில் பொறிக்கப்பட்டுத் திருவேங்கடவன் பாதுகாப்பில் சேமிக்கப்பட்டிருந்தன. அவ்வாறு சேமிக்கப்பட்டவற்றை அண்மைக்காலத்தில் தேவஸ்தானத்தார் ஓர் அறையிலிருந்து வெளிக்கொணர்ந்து நல்கினர்.

முதல் செப்பேட்டில் பொறிக்கப்பட்ட செய்தியிலிருந்து அருளாளர் அன்னமாசார்யர் தம்முடைய 16வது பிராயத்தில் வேங்கடவனின் புகழைப் பாடத்தொடங்கி 94 ஆவது பிராயத்தில் திருவேங்கடவன் திருவடிகளிலே அடிக்கீழ் அமர்ந்து புகுந்தார் – என்பது அறியப்படுகிறது.

சடகோபரும் தம்முடைய 16ஆவது பிராயத்திலேதான் திருக்கண்கள் மலர்ந்து மதுர கவிகளைக் கண்டதும் திருவாய்மொழி முதலான பிரபந்தங்களைத் திருவாய் மலர்ந்தருளினார் என்பதும் கருதத்தக்கது.

அருட்பெரும் தகையான அன்னமாசார்யர் ஸ்வாமி ராமானுஜர் வழிவந்த ஸம்ப்ரதாயத்தில் மூழ்கித் திளைத்தவர். ஸ்வாமி ராமானுஜரின் சிஷ்யர்களை மனமாரப் போற்றி வாயாரக் கவி பாடியுள்ளார்.

ராமானுஜரின் ஆஜ்ஞையால் திருமலையில் தங்கித்திருந்து வனமும் ஏரியும் அமைத்துப் புஷ்ப கைங்கர்யம் செய்த அனந்தாழ்வானை அன்னமாசார்யர் புகழ்வது மிகவும் போற்றுதற்குரியது. அப்பாடல் வருமாறு:

1 3 1 1 3 3
கொண்டலோ நெலகொன்ன கோனேரி ராயடுவாடு

1 3 1 3 1 4 4
கொண்டலந்த வரமுலு குப்பெடு வாடு

1 3 4 1 1 3
கும்மர தாஸுடைந கருவரதி நம்பி

3
இம்மன்ன வரமுலெல்ல நிச்சினவாடு

3 1 1 3 1
தொம்முலு ஸேசினயட்டி தொண்டமான் சக்ரவர்த்தி

1 1 3
ரம்மன்ன சோடிகி வச்சி நம்மினவாடு (கொண்ட)

3 1 1 3 1 1
அச்சபுவேடுக தோட வனந்தாழ்வாரிகி

1 1 3
முச்சிலி வெட்டிகி மன்னு மோசினவாடு

1 3 3 1 3 1
மச்சிக தொலக திருமலநம்பி தோடுத

1 3 3
இச்ச நிச்ச மாடலாடி நச்சினவாடு (கொண்ட)

1 1 1 3 3
கஞ்சிலோனனுண்ட திருக்கச்சி நம்பி மீதகரு

3 1 1 3
நிஞ்சி தனயெடகு ரப்பிஞ்சினவாடு

1 3
எஞ்சி எக்குடைன வெங்கடேசுடு மனலனு

3 1 3
மஞ்சிவாடை கருண பாலிஞ்சின வாடு (கொண்ட)

(மலைகளின் நிலையான குளத்தின் தலைவன்
மலைகளைப்போல் வரங்களை அள்ளி வீசுபவன்
குயவன் குறுவறுத்த நம்பிதாஸன்
கேட்ட வரங்களையெல்லாம் கொடுத்தவன்
சபதம் செய்த தொண்டமான் சக்ரவர்த்தி
அழைத்த இடத்துக்கெல்லாம் சென்று உதவினவன்
உண்மையான பக்தியுடனுள்ள அனந்தாழ்வாருக்கு
எதிர்பார்ப்பின்றி மண் சுமந்தவன்.
இனிய சொற்களால் திருமலை நம்பியுடன்
உவந்து பேசி மகிழ்வித்தவன்;
காஞ்சியிலுள்ள திருக்கச்சி நம்பியைத் தன்னிடத்தில்
கைங்கர்யத்துக்கு வரவழைத்தவன்;
உயர்ந்தவனான வேங்கடேச்வரன் நம்மை
நல்லவர்களைக் காப்பாற்றும் கருணாகரன்.)

இப்பாடலில் வரும் சரிதங்கள் வைணவ குரும்பரையை நன்கு அறிந்து அன்னமாசார்யர் பாடியவையாம்.

அன்னமாசார்யரின் கீர்த்தனங்களில் ஆண்டாளைக் காண முடிகிறது; குலசேகராழ்வாரின் குரலைக் கேட்க முடிகிறது; பெரியாழ்வாரின் யசோதா பாவமும் நம்மாழ்வாரின் நாயகா பாவமும் இழைந்தோடுவதை உணரமுடிகிறது. இவற்றினூடே மெய்ப்பொருள் செறிவு பொதிந்திருப்பதையும் பார்க்கமுடிகிறது.

ஆண்டாள் * வாரணமாயிரத்தில் கனாக்கண்டாள்; கனாவில் வந்தவன் கோவிந்தன் என்பான் ஓர் காளை; அன்னமாசாரியன் கனவில் திருவேங்கத்துறையும் கோவிந்தன் புகுந்தான்.

அன்னமாசாரியர் கனவில் சேஷாத்ரி சிகரத்திலிருந்து ஓர் ஒளி புறப்பட்டுக் கிரீட மகுட சூடாவதம்ஸங்களோடு பீதாம்பரம் தரித்து இருகரங்களிலும் சங்கு சக்கரங்களை ஏந்தி வேங்கடவனாக நின்றது; உடனே அன்னமாசாரியர் விழித்துக்கொண்டார் (பாடல் 2)

ஆண்டாள் * மாயனை மன்னுவட மதுரை மைந்தனை (திருப்பாவை. 5) என்ற பாசுரத்தில் ஸ்ரீஹரியின் திருநாமத்தை வாயினால் பாடினால் போய பிழையும் புகுதருவான் நின்றனவும் தீயினில் தூசாகும் என்று திருநாம மஹிமையை நிர்த்தாரணம் செய்தான்; அதே ரீதியில் அன்னமாசார்யரும்

* தெவொகடி ஹரிநாம தீப மதி சாலதா
  கலுஷம்பு கடின சீகடி பாரத்ரோலா

(எங்கும் பரவியிருக்கும் பாவம் என்ற இருளை நீக்குவதற்கு ஸ்ரீஹரியின் திருநாமமாகிய விளக்கு ஒன்றே போதுமல்லவா ?)

ஆண்டாளின் திருத்தமப்பனார் பெரியாழ்வார் பரம வைஷ்ணவர்; பட்டர் பிரான்; பரதத்வஸ்தாபனம் செய்தவர். அவர் தாம் திருவிலச்சினை பெற்றுக் குடிகுடி ஆட்செய்த பாங்கினைத் தெரிவிக்கிறார்;

அன்னமாசார்யரும்,

நாலுக ஶ்ரீஹரி நாமம் புன்னது
தூலுக பாரரோ துரிதமுலு
சாறு புஜம்புன சக்கரம் புன்னதுதி
தாமி பவபந்தமு லடுதலரோ (பாடல் 3)

(என் நாக்கில் ஶ்ரீஹரியின் திருநாமம் ஒற்றிக்கொண்டது; ஆதலால் பாவங்களே! என்னை விட்டு விலகுங்கள். என்னுடைய தோள்களின் மேல் சக்கரம் உள்ளதால் பிறப்பு என்ற பந்தமே என்னை விட்டு விலகுவாயாக!)

ஶ்ரீவைஷ்ணவ சின்னங்களான சங்கு சக்கரப் பொறியுடன் திகழ்ந்த திருத்தோள்களோடு விளங்கினார்.

ஶ்ரீ பாகவத பாத தீர்த்தத்தின் பிரபாவத்தை உலகறிய உரைக்கிறார்.. ''தாஸுல சரண தூளி நாங்னானமு'' என்பார் அன்னமாசாரியர். அடியார்கள் உண்டு வைத்த மீதி உணவை போக்யமாகக் கருதினார். * ''வாஸீ தேவுனி பக்தவருல தாஸுலு மூன்று ரோகின எங்கிருகி கொன்ன ஜாலு'' என்பது அவர் திருவாக்கு. இதனையே ''போனகம் செய்த சேடம் தருவரேல் புனிதமன்றே'' என்று அருளிச் செய்தார் தொண்டரடிப் பொடியாழ்வார்.

இவ்வாறு அன்னமாசார்யரின் ஸங்கீர்த்தனங்களை ஆராய்ந்தால் ஆழ்வார்களின் திருவாக்குகளையே அவை அடியொற்றிச் செல்வதைக் காணலாம்.

அன்னமாசார்யரின் அரிய கீர்த்தனங்களைத் தமிழ்ப் பெருமக்கள் கற்றுணரத்தக்கதோர் நல்வாய்ப்பு இப்போது ஏற்பட்டிருக்கிறது.

மதுரை காமராசர் பல்கலைக்கழகம் தெலுங்கு மொழித்துறையில் பேராசிரியராகப் பணியாற்றிவரும் தகைசால் அன்பர் திருவாளர். Dr. S. ஜெயப்ரகாஷ் அவர்கள் வைணவ நூல்களில் நன்கு பரிசயம் பெற்றவர். ஆண்டாள் அருளிய திருப்பாவைக்கு முன்னோர் மொழிந்த வியாக்கியானங்களைத் தழுவித் தெலுங்கு மொழியில் விரிவுரை எழுதி வெளியிட்டிருக்கிறார். ஆழ்வார் ஆசார்யர்களை மையமாகக் கொண்ட

கருத்தரங்குகளைக் கல்லூரிகளில் அமைத்துத் தொண்டாற்றி வருகிறார்.

அன்னமாசார்யரின் அரிய நூறு பாடல்களைத் தமிழில் சுவை குன்றாது பெயர்த்து இன்று வெளியிட்டிருக்கும் பேராசிரியரின் ஆர்வத்துக்குப் பல்லாண்டு பாடுகிறேன். மொழிபெயர்ப்பும் இனிய எளிய நடையில் படிக்கத் தூண்டும் பாங்கினில் அமைந்துள்ளது; அன்னாரது தமிழ்த் தொண்டிற்கும் பல்லாண்டு கூறி வாழ்த்துகிறேன்.

கலையிலங்கு மொழியாளர்
ஐப்பசி மாதப்பிறப்பு 2006 பேராசிரியர் ***Dr. இரா. அரங்கராஜர்***
M.A.,Ph.D.,

# நன்றியுரை

தெலுங்கு கீர்த்தனை இலக்கிய உலகின் முன்னோடிக் கவிஞர்களில் ஒருவராகத் திகழ்ந்தவர் அன்னமாச்சார்யார். இவர் 32,000க்கும் மேற்பட்ட கவிதைகளை யாத்துள்ளார். அத்தனைக் கவிதைகளிலும் திருவேங்கடவன் பற்றிக் குறிப்பிட்டுள்ளார். திருவேங்கடவன் மீது எவ்வளவு ஈடுபாடு கொண்டவர் என்பதற்கு அவரது கீர்த்தனைகளே சான்று. அவரின் ஒவ்வொரு பாடலும் பக்திச்சுரங்கமாக அமைந்துள்ளது.

தமிழ்வேதமான நாலாயிரதிவ்விய பிரபந்தத்திலுள்ள அனைத்து வைணவக் கருத்துக்களையும் உள்ளடக்கும் விதமாக கீர்த்தனை வடிவில் அமைத்துத் தந்துள்ளார். இவரது பாடல்களைத் தமிழிலுள்ள ஆழ்வார்களின் பாடல்களோடு ஒப்பிடலாம். அன்னமையாவின் பாடல்கள் முழுவதையும் தமிழில் இன்றும் எங்களுக்குத் தெரிந்தவரையில் வெளிக் கொணரவில்லை. அந்தக் குறையினைப் போக்கும் பொருட்டு தேர்ந்தெடுக்கப்பட்ட சில பாடல்களைத் தமிழில் எங்களால் இயன்ற அளவு மொழிபெயர்த்துத் தந்துள்ளோம்.

அன்னமாச்சார்யரின் பாடல்கள் *"ராயலசீமா"* வட்டார மொழியில் அமைந்துள்ளதால் இவர் பயன்படுத்திய பலசொற்கள் அகராதியில் இடம் பெறவில்லை. பல சொற்கள் வழக்கிழந்துவிட்டன. ஆதலால் அதன் பொருளைப் புரிந்துகொள்வதற்குப் பண்டிதர்களுக்கும் மிகவும் அரிதாகவே இருக்கிறது. இவரது மற்ற சில கீர்த்தனைகளும் தமிழிலே மொழி பெயர்ப்புகளாக வெளிவருவதற்கு இந்நூல் ஒரு வழிகாட்டியாக இருக்கும் என்று நம்புகின்றோம்.

இந்நூல் வெளிவருவதற்கு நிதி உதவி புரிந்த திருப்பதி தேவஸ்தானத்திற்கு நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

மொழிபெயர்ப்பில் எங்களுக்கு உதவிய 'அன்னமாச்சார்ய சங்கீர்த்தனமு' என்ற நூலை எழுதிய சமுத்திரால லட்சுமணய்யா அவர்களுக்கு எங்கள் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றோம். மேலும் இந்நூல் வெளிவருவதற்கு எங்களை ஊக்கப்படுத்திய தமிழியற்புல இலக்கணத்துறைத் தலைவர் பேராசிரியர் தூ. சேதுபாண்டியன் அவர்களுக்கும் ஒப்பிலக்கியத்துறைத் தலைவர் பேராசிரியர் இரா. மோகன் அவர்களுக்கும் இக்கால இலக்கியத்துறைத் தலைவர் பேராசிரியர் சு. வேங்கடராமன் அவர்களுக்கும் இந்நூல் எழுதுவதற்கு உறுதுணையாக இருந்த டாக்டர் சத்தியவதி அவர்களுக்கும், செல்வி ஸ்ரீபாத திவ்யா அவர்களுக்கும் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறோம். மேலும் இந்நூலுக்கு பெருமை தரக்கூடிய அணிந்துரை நல்கிய பேராசிரியர் ஐயா, அரங்கராஜன் அவர்களுக்கும் நன்றியினைத் தெரிவித்துக் கொள்ள கடமைப்பட்டிருக்கின்றோம்.

இப்புத்தகம் சிறப்பாக வெளிவருவதற்கு உதவிய திருமதி. ஜி. சங்கரம்மாள் அவர்களுக்கும் திருமதி. கே. அஞ்சலா அவர்களுக்கும் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றோம். மேலும் அஜந்தா அச்சகத்தின் உரிமையாளர் திரு. B. ராஜகோபால் அவர்களுக்கும் அச்சகப் பணியாளர்களுக்கும் மிகுந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

*எஸ். ஜெயப்பிரகாஷ்*

*ஆ. சோமசுந்தரம்*

## அன்னமாச்சார்யார் - ஓர் அறிமுகம்

தெலுங்கில் கீர்த்தனை இலக்கியத்தை முதன் முதலாக அறிமுகப்படுத்தியவர் அன்னமாச்சார்யார் ஆவார். இவர் திருவேங்கட மலையிலிருந்து நூறு கிலோ மீட்டர் தொலைவில் உள்ள கடப்பா மாவட்டத்தைச் சார்ந்த தாள்ளப்பாக்கம் என்ற ஊரில் கி.பி. 1408ல் பிறந்தார். இலக்கமாம்பா, நாராயணசூரி என்போர் இவருடைய பெற்றோர் ஆவர். இவர்களுக்கு நீண்ட நாட்கள் குழந்தையில்லாத காரணத்தினால் திருவேங்கடமுடையானிடம் குழந்தை வரம் தருமாறு வேண்டினார்கள். அன்றிரவு அவர்களின் கனவில் திருவேங்கடமுடையான் தன்னுடைய நந்தகம் என்று அழைக்கப்படுகின்ற வாளைக் கொடுத்து அவர்களை ஆசீர்வதித்து மறைந்தார். பின்னர் சில நாட்கள் கழித்து இலக்கமாம்பா கருவுற்று வைகாசி மாதத்தில் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள். அக்குழந்தைக்கு 'அன்னமையா' என்று பெயர் சூட்டினர். அன்னமையா சிறுவயதிலிருந்தே தெய்வீகப் பாடல்களைக் கேட்பதிலும், பாடுவதிலும் ஆர்வம் உடையவராய் இருந்தார். ஒரு நாள் இவர் மாட்டின் உணவிற்காகப் புல் அறுக்கச் சென்ற போது கையில் காயம் ஏற்பட்டுவிட்டது. அக்காயத்தைப் பார்த்ததும் அவருக்கு இந்த உலகின்மேல் விரக்தி உண்டாகி வீட்டிற்குத் தெரியாமல் திருமலைக்குச் செல்லும் பக்தர்களுடன் தாமும் திருமலைக்குச் சென்றார். அங்கு கோவில் அருகில் உள்ள புஷ்கர்ணையில் நீராடி சங்கு சக்கரத்தைக் கொண்ட, பட்டுப்பீதாம்பரத்தை அணிந்த திருவேங்கடமுடையானின் திவ்ய மங்கல ரூபத்தைக் கண்டு மெய்மறந்து அவரது புகழைப் பாடினார். அன்று முதல் அவர் அந்தக் கோவிலையே தன்னுடைய வீடாகக் கொண்டு தங்கினார். ஒரு நாள் அன்னமையார் வேங்கமுடையானைத் தரிசிக்கக் கோவிலுக்குள் சென்றார். அப்பொழுது கோவிற் கதவுகள் மூடப்பட்டிருந்தன. அவரைத் தரிசிக்க வேண்டும் என்ற ஆர்வத்தில்

அன்னமையா ஒரு கீர்த்தனையைப் பாடினார். உடனே மூடப்பட்ட கதவுகள் திறந்தன. அப்பொழுது அங்கு கூடியிருந்த மக்கள் அன்னமாச்சார்யார் கடவுளின் மீது கொண்டிருந்த பக்தியைப் பாராட்டினர்.

அன்னமையாவின் பெற்றோர்கள் தமது மகனைக் காணவில்லை என்று தேடி அலைந்த வருத்தத்துடன் திருமலை சென்றனர். அங்கு, பக்தர்கள் புடைசூழ அன்னமையா பாடிக் கொண்டிருந்த காட்சியை அவர்கள் கண்டனர். பின்னர் தம் மகனைத் தங்களுடன் வருமாறு அழைத்தார்கள். ஆனால் அன்னமையா தன் பெற்றோருடன் சேர்ந்து செல்ல மறுத்துவிட்டார். பின்னர் கனவிஷ்ணு என்று குருவும் பெற்றோருடன் சேர்ந்து செல்ல அன்னமையாவை வற்புறுத்தியதால் தனது பெற்றோருடன் சென்றார். அன்னமையா இளைஞன் ஆனவுடன் திம்மக்கா, அக்கலம்மா என்று இரண்டு பெண்களை மணந்து இல்லறத்தில் ஈடுபட்டார். அவர் குடும்ப வாழ்வில் ஈடுபட்டாலும் அவரிடம் இருந்த பக்தி மாறவில்லை. இவர் வேங்கடமலையானைப் பற்றி எழுதிய ஏராளமான கீர்த்தனைகள் மக்களைக் கவர்ந்தன. விஷ்ணு பக்தியை மக்களிடையே பரப்புவதற்காகவும் "சரணாகதி" போன்ற வைஷ்ணவ தத்துவங்கள் மக்களிடையே அறிமுகப்படுத்துவதற்காகவும் அன்னமாச்சார்யார் தம்முடைய கீர்த்தனைகளைப் பயன்படுத்தினார். தமது கருத்துக்கள் மக்களிடம் சேர்வதற்கு மக்கள் பயன்படுத்திய மொழியையேப் பயன்படுத்தினார். நாட்டுப்புறப்பாடல் வடிவிலும் இவரது கீர்த்தனைகள் அமைந்தன. இவருடைய கீர்த்தனைகளைச் சிருங்காரப் பாடல்கள் என்றும் தத்துவப் பாடல்கள் என்றும் பிரிக்கலாம். தன்னைத் தலைவியாகவும் திருவேங்கடமுடையானைத் தலைவனாகவும் பாவித்து பல கீர்த்தனைகளைப் பாடியுள்ளார். இவர் 32,000 கீர்த்தனைகளை எழுதியதாகத் தெரிய வருகின்றது.

அன்னமாச்சார்யரின் புகழைக் கேள்விப்பட்டு நரசிங்கராயர் என்ற அரசர் இவரைத் தன்னுடைய அவைக்கு அழைத்து சிறப்பு செய்தார். ஒருநாள் நரசிங்கராயர் தன்மேல் ஒருபால் பாட வேண்டும் என்று

கட்டளையிட்டார். அதற்கு அன்னமாச்சார்யார் கடவுளைப் பாடிய நாவினால் உன்னைப் பாடமாட்டேன் என்று அரசரிடம் கூறினார். அரசன் அன்னமாச்சார்யார் மேல் கோபம் கொண்டு அவருக்கு கைவிலங்கிட்டு சிறையில் அடைத்தார். அன்னமையார் திருவேங்கடமுடையானைப் பற்றி ஆகடி வேளல நலபைன வேளலநு (கீர்த்தனை-3) என்ற கீர்த்தனை பாடியதும் கைவிலங்குகள் அறுந்தன. சிறைக்கதவுகள் உடைந்தன. இந்த அதிசயத்தைப் பார்த்ததும் அரசன் தன்னை மன்னிக்குமாறு வேண்டி அன்னமையாவின் கால்களில் விழுந்தான்.

அன்னமையார், கீர்த்தனைகள் மட்டுமின்றி சதகங்களும் எழுதியுள்ளார். இவர் பன்னிரெண்டு சதகங்கள் இயற்றப்பட்டதாகக் கூறினாலும் "ஸ்ரீ வெங்கடேஸ்வர சதகம்" என்ற ஒன்றே கிடைத்துள்ளது. இவருடைய கீர்த்தனைகள் அனைத்தும் செப்பேடுகளில் பதிவு செய்யப்பட்டு வேங்கடமுடையானின் சந்நிதி அறையின் பக்கத்தில் பாதுகாப்பாக வைக்கப்பட்டுள்ளன. சில செப்பேடுகள் அஹோபிலம், ஸ்ரீரங்கம் போன்ற திவ்விய தேசங்களிலும் பாதுகாக்கப்பட்டன. இவர் 32,000 கீர்த்தனைகள் எழுதியிருந்தாலும் தற்பொழுது 12,000 கீர்த்தனைகள் மட்டுமே கிடைக்கின்றன.

அன்னமாச்சார்யார் நாலாயிர திவ்விய பிரபந்தத்தை முறையாகக் கற்றவர். அதனால்தான் இவரின் கீர்த்தனைகளில் ஆழ்வார்களின் தாக்கம் அதிகமாகக் காணப்படுகிறது. புரந்தரதாசர், தியாகராசர் போன்ற பிற்காலத்துக் கவிஞர்களுக்கும் இவர் ஒரு வழிகாட்டியாகத் திகழ்ந்தார்.

# KEY TO PRONUNCIATION

| Telugu | Roman | Tamil |
|---|---|---|
| అ | a | அ |
| ఆ | aa | ஆ |
| ఇ | i | இ |
| ఈ | ii | ஈ |
| ఉ | u | உ |
| ఊ | uu | ஊ |
| ఎ | e | எ |
| ఏ | ee | ஏ |
| ఐ | ai | ஐ |
| ఒ | o | ஒ |
| ఓ | oo | ஓ |
| ఔ | au | ஔ |
| క | k | க1 |
| ఖ | kh | க2 |
| గ | g | க3 |
| ఘ | gh | க4 |
| చ | c | ச1 |
| ఛ | ch | ச2 |
| జ | j | ஜ1 |
| ఝ | jh | ஜ2 |
| ట | T | ட1 |
| ఠ | Th | ட2 |
| డ | D | ட3 |
| ఢ | Dh | ட4 |
| ణ | N | ண |
| త | t | த1 |
| థ | th | த2 |
| ద | d | த3 |
| ధ | dh | த4 |
| న | n | ந |
| ప | p | ப1 |
| ఫ | ph | ப2 |
| బ | b | ப3 |
| భ | bh | ப4 |
| మ | m | ம |
| య | y | ய |
| ర | r | ர |
| ల | l | ல |
| ళ | L | ள |
| వ | v | வ |
| శ | s | ஸ |
| ష | sh | ஷ |
| హ | h | ஹ |

## கீர்த்தனை - 1

### *ராகம் : முகாரி*

3 1 3 1 3
ப்ரம்ஹா கடிகின பாதமு

3 1 1 3
ப்ரம்ஹ்மு தானே நீ பாதமு (பல்லவி)

1 3 4 3 1 1 3
செலகி வஸுத கொலிசின நீ பாதமு

3 1 1 1 3
பலி தல மோபின பாதமு

1 1 1 3 3 1 1 3
தலகக ககனமு தன்னின பாதமு

3 3 1 3
பலரிபு காசின பாதமு (1)

1 1 1 1 3 3 1 3
காமினி பாபமு கடிகின பாதமு

1 1 3 1 3
பாமு தலநிடின பாதமு

1 1 1 1 1 1 3
பிரேமபு ஸ்ரீஸதி பிஸிகெடி பாதமு

1 3 1 3 1 3
பாமிடி துறகபு பாதமு (2)

1 3 1 1 1 4
பரம யோகுலகு பரிபரி விதமுல

3 3 1 3
வரமொஸகெடி நீ பாதமு

1 1 3 1
திருவேங்கட கிரி திறமனி சூபின

1 1 3 1 3
பரம பாதமு நீ பாதமு (3)

திருவேங்கடவனே! உன்னுடைய அழகிய பாதங்கள் பிரம்மதேவரால் அபிஷேகம் செய்யப்படுகின்றன. உன்னுடைய பாதங்கள் அனைத்து உயிர்களையும் காக்கும் பரம்பொருளாகவும் விளங்குகிறன.

உலகத்தை அளந்த உன்னுடைய திருப்பாதமானது மாபலிச்சக்கரவர்த்தியின் தலையின்மேல் வைக்கப்பட்டது. அது எந்தத் தயக்கமுமின்று வானத்தை உதைத்தது. இத்தகைய அழகிய உன்னுடைய பாதமே தெய்வேந்திரனையும் காத்தது.

அகலிகையின் பாவத்தை நீக்கியது உன்னுடைய பாதமே. காளி என்னும் பாம்பின் தலையின் மேல் நடனமாடியதும் உன்னுடைய திருப்பாதமே. அன்பே வடிவமாகக் கொண்ட பெரியபிராட்டி வருடியது உன்னுடைய பாதமாகும். கட்டுப்பாடற்று திரிகின்ற குதிரையின் மீது ஏறியதும் உன்னுடைய பாதமாகும்.

சிறந்த முனிவர்களுக்குப் பற்பல விதமாக மோட்சத்தைக் கொடுக்கக்கூடிய உன்னுடைய பாதமானது திருவேங்கடமலையே நிலையானது என்று பக்தர்களுக்குக் காட்டுகின்றது. உன்னுடைய பாதமே எங்களுக்குப் பரமபதம் போன்றது.

இந்தக் கீர்த்தனையில் அன்னமாச்சாரியார் வாமன, ஸ்ரீராமகிருஷ்ண, கல்கி அவதாரங்களைக் குறிப்பிடுகின்றார். வாமன அவதாரத்தில் பலிச்சக்கரவர்த்தியிடம் மூன்று அடிகேட்டு ஒரு பாதத்தினைப் பூமியிலும் மற்றொரு பாதத்தை வானத்திலும் வைத்து மூன்றாவது பாதத்தை மாவலித் தலைமேல் வைத்து அவனைப் பாதாளத்திற்கு அழுத்தி இந்திரனுக்கு அருள்கின்றார்.

வாமன அவதாரத்தில் பெருமான் தன்னுடைய பாதத்தினால் ஆகாயத்தை தொட்டபோது பிரம்மதேவன் அந்தப் பாதத்தை அபிஷேகம் செய்தான். பிரம்மதேவன் அபிஷேகம் செய்த நீரே ஆகாய கங்கையாக மாறியது என்ற செய்தி பாகவதத்தில் கூறப்படுகின்றது.

இராமாவதாரத்தில் இராமபிரானுடைய பாதம்பட்டு அகலிகைக்கு சாபவிமோசனம் கிடைத்தது என்ற இராமாயணக் கதையினையும், கிருஷ்ணவதாரத்தில் காளியன் என்ற கொடிய பாம்பின் தலைமேல் கண்ணன் நடனமாடினான் என்ற பாகவத கதையினையும், கலியுக முடிவில் பெருமான் கொடியவர்களை அழிப்பதற்காகக் குதிரையின் மேல் ஏறி வருவார் என்ற புராணக்கதையையும் இந்தக் கீர்த்தனையில் அன்னமாச்சார்யார் குறிப்பிடுகின்றார்.

# கீர்த்தனை - 2

## *ராகம் : பூபாளம்*

1 1 3 1 1 1 1 1 1
இப்புடிடு கலகண்டி நெல்ல லோகமுலகு

1 1 3 3 1 1 1 3 3
நப்படகு திருவேங்க டாத்ரீஸு கண்டி (பல்லவி)

1 3 1 2 3 1
அதிஸயம்பைன ஸேஷாத்ரி ஸிகரமு கண்டி

1 1 3 1 1 4 3 1
ப்ரதிலேனி கோபுர ப்ரபலு கண்டி

1 1 1 1 3 3 3 1
ஸதகோடி சூர்யதேஜமுலு வெலுகக கண்டி

1 1 3 3 1 1 1
சதுராஸ்யு பொடகண்டி சய்யன மேல்கண்டி (1)

1 1 1 1 1 1 3 3 3
கனகரத்ன கவாட கான்து லிருகட கண்டி

4 3 2 3 1
கனமைன தீப ஸங்கமுலு கண்டி

1 3 1 1 3 1
அநுபம மணிமயம்மகு கிரீடமு கண்டி

1 1 3 3 1 3 1 1 1 1
கனகாம்பரமு கண்டி க்ரக்கன மேல்கண்டி (2)

3 2 1 3 3 3 3 1
அருதைன ஸங்கசக்ராது லிருகட கண்டி

4 1 3 1
சரிலேனி யபய ஹஸ்தமு கண்டி

1 1 1 4 1 3 3
திருவேங்கடாசலாதிபுனி சூடக கண்டி

3 3 3 1 1 1 1
ஹரிகண்டி குருகண்டி நந்த மேல்கண்டி (3)

அன்னமையா தன்னுடைய பதினாறாவது வயதில் திருமலை சென்று வேங்கடமுடையானைத் தரிசித்தார். அன்று முதல் அவருடைய அழகிய திருமேனியானது அவரின் கண்களிலிருந்து நீங்கவில்லை. அவரது கனவிலும் அந்த அழகிய காட்சியானது தொடர்ந்தது. அவர் கனவில் கண்ட திருவேங்கடமுடையானின் திருமேனியை இந்தக் கீர்த்தனையுள் இவ்வாறு வர்ணிக்கிறார்.

இப்போது நான் ஒரு கனாக் கண்டேன்; அந்தக் கனவில் எல்லா உலகங்களுக்கும் தந்தையான திருவேங்கடமுடையானைப் பார்த்தேன்.

மகிமை வாய்ந்த அதிசயமான சேஷாத்ரி சிகரத்தைப் பார்த்தேன். இணையில்லாத கோபுரத்தின் ஒளியைப் பார்த்தேன். நூறு கோடி சூரியன்கள் பிரகாசிப்பதைப் போன்ற ஒளியைப் பார்த்தேன். நான்கு முகம் கொண்ட பிரம்ம தேவனைப் பார்த்தேன். உடனே தூக்கத்திலிருந்து எழுந்தேன்.

இரண்டு பக்கங்களிலும் இரத்தினக்கற்கள் பதித்த பொன்னால் செய்யப்பட்ட கதவினுடைய ஒளியைப் பார்த்தேன். எண்ணற்ற விளக்குகளைப் பார்த்தேன். இணையில்லாத மணிகளால் செய்யப்பட்ட கிரீடத்தைப் பார்த்தேன். பெருமாள் அணிந்த பொன்னால் செய்த ஆடையைப் பார்த்தேன். உடனே நான் தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டேன்.

வலிமை வாய்ந்த சங்குச் சக்கரங்களைப் பெருமாளின் இருபுறமும் கண்டேன். இணையில்லாத அபயஹஸ்தத்தைப் பார்த்தேன். ஸ்ரீவேங்கடமுடையானை காண்கின்ற பேறு பெற்றேன். அந்த ஸ்ரீஹரியைக் கண்டேன். ஆச்சார்யரைக் கண்டேன். உடனே நான் தூக்கத்திலிருந்து விழித்துக் கொண்டேன்.

## கீர்த்தனை - 3

*ராகம் : முகாரி*

1 1 1
ஆகடி வேளல நலபைன வேளலநு

1 1 3 1 1 3
தேகுவ ஹரிநாமமே திக்கு மரிலேது (பல்லவி)

1 1 3
கொரமாலி யுன்ன வேள குலமு செடின வேள

3 1 1
செரவடி யொருலசே ஜிக்கின வேள

1 1 1 3 1 3 1
ஓரபைன ஹரிநாம மொக்கடே கதி காக

1 1 1 3 1 3
மரசி தப்பின நைன மரிலேது தெரகு (1)

1 3 3 1 3
ஆபத வச்சின வேள ஆரடி படின வேள

1 1 1 4 1 3
பாபபு வேளல பயபடின வேளல

1 1 1 1 1 3 1 3 1
ஒபினந்த ஹரிநாம மொக்கடே கதி காகா

1 3 1 3 1 3
மாபுதாகா பொரலின மரிலேது தெரகு (2)

1 3 1 1 1 3
ஸங்கெல பெட்டின வேள சம்ப பிலிச்சின வேள

1 3 1 1 3
அங்கிலிகா நப்புலவா ராகின வேள

1 1 3 3 1 3 1
வேங்கடேஸு நாமமே – விடிபிஞ்ச் கதிகாக

1 3 4 3 1 3
மங்கு புத்தி பொரலின – மரிலேது தெரகு (3)

நாராயணனைப் பாடும் நாவினால் மற்றவர்களைப் பாட மாட்டேன் என்ற கொள்கை கொண்ட அன்னமையாவை அரசன் தன்னைப் பாடுமாறு வற்புறுத்தினான். அப்போது பாட மறுத்த அன்னமையாவை அரசன் சிறையில் வைத்தபோது இப்பாடலைப் பாடியதாகக் கூறப்படுகிறது.

பசியெடுத்த பொழுதும் சோர்வடைந்த வேளையிலும் நமக்குத் தைரியத்தைக் கொடுத்துக் காப்பாற்றுவது ஸ்ரீஹரியின் நாமம் ஒன்று மட்டுமே. அதைத் தவிர வேறொன்றுமில்லை.

எதற்கும் உதவாத பயனற்ற நிலையிலும் சமூகத்திலிருந்து ஒதுக்கி வைத்த நிலையிலும் பிறரால் சிறையில் அடைக்கப்பட்டு வருந்துகின்ற நேரத்திலும் வலுவான ஸ்ரீஹரி நாமம் ஒன்று தான் நம்மைக் காக்கக் கூடியது. அதை மறந்தால் மற்றொரு வழியில்லை.

தீங்கு வந்த காலத்திலும் பிறர் தம்மீது பழி சுமத்தின பொழுதும் பாவம் செய்த நேரத்திலும் அச்சம் கொள்கின்ற நேரத்திலும் ஸ்ரீஹரி நாமம் ஒன்றுதான் நம்மைக் காக்கக் கூடியது. ஸ்ரீஹரி நாமத்தைத் தவிர்த்து எத்துணை முயற்சி செய்தாலும் துன்பங்களிலிருந்து நம்மைக் காப்பாற்றுவதற்கு வேறு எவற்றாலும் இயலாது.

பகைவர்கள் விலங்கிட்டு நம்மை அடைத்து வைத்த சமயத்திலும் நம்மைக் கொலை செய்யத் தூண்டும் சமயத்திலும் கடன் கொடுத்தவர்களிடமிருந்து நம்மை விடுவிப்பதற்கும் திருவேங்கடமுடையானின் நாமம் ஒன்றுதான் ஒரே வழி. இதைத் தவிர கடுமையாக எவ்வளவு தான் முயற்சி செய்தாலும் மற்றொரு வழி இல்லவே இல்லை.

## கீர்த்தனை - 4

*ராகம் : ஸாளங்க நாட்டா*

எட்டி வாரிகி நெல்ல நிட்டி கர்மமுலு, மா
யட்டி வாரிகி நிங்க நேதி தோவய்யா! (பல்லவி)

பாமு ஜம்பின யட்டி பாதகமுன, பெத்த
பாமு மீத நீகு பவளிஞ்ச வலஸெ
கோமலி ஜம்பின கொரதவல்ல நொக்க
கோமலி நெத பெட்டுகொனி யுண்ட வலஸெ (1)

பண்டி விரிசி நட்டி பாதகமுன, பெத்த
பண்டி போயடவை பனி சேய வலஸெ
கொண்ட வெரிகினட்டி குணமுன திருமல
கொண்ட மீத நீகு கூச்சுண்ட வலஸெ (2)

இக்கீர்த்தனையானது வெளித்தோற்றத்திற்கு இறைவனைப் பழிப்பதாக அமைந்தாலும் உள்ளே ஆராய்ந்து பார்க்கும்பொழுது கடவுளைப் பக்தியோடு துதிக்கின்ற நிலையில் அமைந்துள்ளது.

பெருமாளே! எத்தகைய உயர்ந்த பதவியில் வகித்தாலும் அவர்கள் செய்த செயல்களுக்கு ஏற்பக் கர்ம பலனை அவர்கள் அனுபவித்தே ஆகவேண்டும்.

பாம்பினைக் கொன்றதன் காரணமாக வந்த பாவத்தினால் ஒரு பெரிய பாம்பின் மேலே நீ துயில் கொள்ள வேண்டிய நிலை உண்டாயிற்று. ஒரு பெண்ணைக் கொன்ற செயலினால் நீ ஒரு பெண்ணை இதயத்தின் மேல் வைத்திருக்கும் நிலை உண்டாயிற்று. (ஸ்ரீ ராமாயணத்தில் அரக்கியான தாடகையை ஸ்ரீ ராமர் வதம் செய்த நிகழ்ச்சியை இது நினைவூட்டுகிறது.)

ஒரு வண்டியை உடைத்த பாவத்தினால் நீ ஒரு பெரிய வண்டிக்கு சாரதியாக இருக்க வேண்டிய நிலை ஏற்பட்டது.

(கிருஷ்ணர் சிறுவனாக இருந்தபோது வண்டி உருவில் வந்த சகடாசுரனைத் தன் காலால் உதைத்துக் கொன்ற நிகழ்ச்சியைக் கவிஞர் நினைவூட்டுகிறார்.)

ஒரு மலையைப் பிடுங்கி எடுத்த காரணத்தினால் நீ திருமலை மேல் அமர வேண்டிய நிலை வந்தது. (கிருஷ்ணர் சிறுவனாக இருந்தபோது ஆயர்களையும் பசுக்களையும் காப்பாற்றுவதற்காகக் கோவர்த்தன–கிரியைக் கையில் தாங்கின நிகழ்ச்சியை இது நினைவூட்டுகிறது.)

## கீர்த்தனை - 5

### *ராகம் : ஸாமந்தம்*

3 1 4 3
இந்தரிகி நபயம்பு லிச்சு சேயி

1 3 3 3 3
கந்துவலகு மஞ்சி பங்காரு சேயி (பல்லவி)

3 3 1 1
வெலலேனி வேதமுலு வெதகி தெச்சின சேயி

1 3 3 3 1 3
சிலுகு குப்பலி க்ரிந்து சேர்ச்சு சேயி

1 1 3 4 1 1 1 3
கலிகி யகு பூகாந்த் கௌகிலிஞ்சின சேயி

1 3 3
வலனைன கொன கோள்ள வாடி சேயி (1)

1 1 3 1 3 3 1
தனிவோக பலிசேத தான மடிகின சேயி

1 3 4 3 3
தனரக பூதான மொசகு சேயி

4 1 3
மொனஸி ஜலநிதி யம்மு மொனகு தெச்சின சேயி

3 4
எனய நாகேலு தரியிஞ்சு சேயி (2)

1 1 1
புரஸதுல மானமுலு கொல்ல சேஸின சேயி

1 3 3 1 1 1 3 3 3
துரகம்பு பரபேடி தொட்ட சேயி

1 1 4 3
திருவேங்கடாசலா தீஸுடை மோட்சம்பு

1 1 1 1 1
தெருவு ப்ராணுல கெல்ல தெலிபே நீ சேயி (3)

இக்கீர்த்தனையில் அன்னமாச்சார்யார் திருவேங்கடமுடையானின் திருக்கையினை வர்ணிக்கின்றார். இவர் இதில் மகாவிஷ்ணுவின் தசாவதாரங்களையும் குறிப்பிடுகின்றார்.

பெருமானே! உன்னுடைய திருக்கையானது அனைத்து உயிர்களுக்கும் பாதுகாப்பு அளிக்கக்கூடியதாய் இருக்கிறது. உன்னுடைய பொற்கையானது அழகுடையது, சிறப்பு வாய்ந்தது.

விலை மதிப்பற்ற வேதங்களைத் தேடிக் கொண்டு வந்தது உன்னுடைய கை. மச்சாவதாரத்தில் கடலில் மூழ்கியிருந்த வேதங்களை வெளிக்கொணர்ந்த நிகழ்ச்சியை இது நினைவூட்டுகிறது.

கூர்மாவதாரத்தில் அரக்கர்களும் தேவர்களும் சேர்ந்து மந்திரமலையை மத்தாகக் கொண்டு பாற்கடலைக் கடையும் பொழுது மந்திரமலை கீழே மூழ்கிய சமயத்தில் பெருமாள் தன் திருக்கையினால் அதனைத் தாங்கினார்.

பூமாதேவி கடலில் மூழ்கியபோது பெருமாள் வராகவதாரத்தில் தோன்றிப் பிராட்டியைத் தன் திருக்கையினால் அணைத்தார்.

உன்னுடைய கை கூர்மை வாய்ந்த நகங்களை உடையது. நரசிம்மாவதாரத்தில் மிகக் கொடும் அரக்கரான இரண்யகசிபுவை கூர்மை வாய்ந்த நகங்களைக் கொண்டு கொன்ற செய்தியை நினைவூட்டுகிறது.

உன்னுடைய கை பலிச்சக்கரவர்த்தியிடம் தானம் கேட்டது. வாமனாவதாரத்தில் தேவர்களைக் காப்பாற்றுவதற்காகப் பெருமாள் பலியிடம் சென்று மூன்றடி நிலம் கேட்டார் என்ற செய்தியை இது நினைவூட்டுகிறது.

உன்னுடைய கை பூமியைத் தானம் செய்தது. பரசுராமவதாரத்தில் பெருமாள் அரசர்களைக் கொன்று அவர்களின் நிலத்தைப் பிராமணர்களுக்குத் தானம் செய்தார்.

வில்முனையில் கடலினைக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்தது உன்னுடைய கை.

இது இலங்கை செல்வதற்காகப் பாலம் கட்டும் சமயத்தில் கடலினை இராமன் தமது வில்லால் வணங்கச் செய்த நிகழ்ச்சியை நினைவூட்டுகிறது.

பலராமவதாரத்தில் உன்னுடைய கையானது கலப்பையை ஆயுதமாகக் கொண்டது. கிருஷ்ணாவதாரத்தில் கோபியர்களுடைய ஆடைகளைத் திருடியதும் உன்னுடைய திருக்கை.

கல்கியவதாரத்தில் குதிரையை ஓட்டியதும் உன்னுடைய திருக்கை. திருவேங்கடமலையில் திருவேங்கடவனாகக் காட்சியளித்து எல்லா உயிர்களுக்கும் மோட்சத்திற்கு வழிகாட்டிக் கொண்டிருப்பதும் உன்னுடைய திருக்கை.

# கீர்த்தனை - 6

## *ராகம் : ராமக்ரியா*

1 1 1 3 1 2 1 1 3
கட்டெதுர வைகுண்டமு காணாசைன கொண்ட

1 1 1 1 1 3
தெட்டெலாய மஹிமலே திருமல கொண்ட (பல்லவி)

3 3 1 3
வேதமுலே ஸிலலை வெலஸிநதி கொண்ட

3 3 1 3
ஏதெஸ புண்யராஸுலே ஏருலைநதி கொண்ட

3 3 3 3 1 1 1 3
காதிலி பிரம்ஹாதி லோகமுல காவல கொண்ட

3 3 3 1 3 1 3
ஸ்ரீதேவுடுண்டேடி சேஷாத்ரி ஈ கொண்ட (1)

3 1 3 1 1 3
ஸர்வ தேவதலு ம்ருகஜாதுலை சரிஞ்சே கொண்ட

4 1 1 1 3
நிர்வஹிஞ்சி ஜலதுலே நிட்ட சருலைன கொண்ட

1 1 1 3
உர்வி தபசுலே தருவுலை நிலிசின கொண்ட

1 1 1 3 1 3 1 1 3
பூர்வபு டஞ்ஜனாத்ரி ஈ பொடவாடி கொண்ட (2)

1 1 3 1 1 1 3
வரமுலு கொடாருகா வக்கணிஞ்சி பெஞ்சே கொண்ட

1 3 1 1 4 1 1 3
பரகு லட்சுமிகாந்து ஸோபனபு கொண்ட

1 1 3 3 3 1 3
குரிஸி ஸம்பதலெல்ல குஹல நிண்டின கொண்ட

3 3 1 1 1 3
விரிவைன திதிவோ ஸ்ரீவேங்கடபு கொண்ட (3)

அன்னமாச்சார்யார் இக்கீர்த்தனையில் திருவேங்கடமுடையானின் மகிமைகளை விவரிக்கின்றார்.

திருவேங்கடமலை கண்ணெதிரே தோன்றுகின்ற ஒரு வைகுண்டமாகவும் அவருடைய அற்புதங்கள் அனைத்தும் அந்த மலையைப் போன்றும் தோன்றுகின்றன.

இத்திருமலையில் வேதங்கள் எல்லாம் சிலைகள் போன்று காட்சியளிக்கின்றன. புண்ணியத்தின் வடிவங்கள் அனைத்தும் எங்கு பார்த்தாலும் அருவிகள் போன்றுக் காட்சியளிக்கின்றன. பிரம்மா போன்ற தேவர்கள் வசிக்கும் உலகிற்கும் மேல் அமைந்திருக்கிறது இத்திருமலை. ஸ்ரீலட்சுமியின் கணவரான பெருமாள் வசிக்கின்ற சேஷாத்திரிதான் இம்மலை.

தேவர்கள் அனைவரும் விலங்குகள் வடிவம் எடுத்து இம்மலையில் திரிகின்றனர். முனிவர்கள் அனைவரும் இத்திருமலையில் மரவடிவில் இறைவனைத் தரிசிக்கின்றனர். முற்காலத்தில் இந்த மலையே அஞ்சனாத்திரி என்ற பெயரில் புகழ் பெற்றிருந்தது.

வரங்கள் தருவதற்கு இருப்பிடமாக அமைந்தது இம்மலை. லட்சுமியும் திருமாலும் மகிழ்ச்சியாகத் திரிகின்ற மலை இந்த மலையே. இம்மலையில் உள்ள குகைகள் அனைத்தும் செல்வ வளத்துடன் காட்சியளிக்கின்றன. விரிந்த பூக்களின் பிரகாசத்தைப் போன்று அழகாகக் காட்சியளிக்கின்ற இந்த மலையில் திருவேங்கடமுடையான் காட்சியளிக்கின்றான்.

## கீர்த்தனை - 7

### *ராகம் : லலிதா*

1 1 1
இஹமே கானி இக பரமே கானி
3 1 4 1 1
பஹூளமை ஹரி நீபை பக்தே சாலு (பல்லவி)

3 1
எந்து ஜனிஞ்சின நேமி எச்சோட நுன்ன நேமி
1 3 3 1 3 1
கந்துவ நீ தாஸ்யமு கலிகிதே சாலு
3 3 1 1 1
அந்தி ஸ்வர்க்மே கானி அல நரகமே கானி
3 1 3 1
அந்தபு நீ நாமமு நா கப்புதே சாலு (1)

3 1 3 1 1 3 1
தொரயைன சாலு கடு துச்சபு பண்டைன சாலு
1 3 1 3 1
கரகி நின்னு தலசகலிதே சாலு
1 1 3
பருலு மெச்சின மேலு பம்மி தூஷிஞ்சின மேலு
1 3 1
ஹரி நீ சேவாபரு டவுடே சாலு (2)

3 1 1
இல சதூவுலு ராணீ இடுராக மானனீ
1 1 1 3 1 3
தலபு நீ பாதமுல தகுலே சாலு
1 1 1 1 1
எலமி ஸ்ரீவேங்கடேஸா! ஏலிதிவி நன்னு நிட்டே
1 1 1 1
சலபட்டி நாகு நீ ஸரணமே சாலு (3)

ஆழ்வார்களைப் போன்று தனக்கு விஷ்ணு பக்தியே வேண்டும். சொர்க்கத்தில் நிலைபெற்றிருக்கும் இன்பம், இல்வாழ்வின்கண் இருக்கின்ற இன்பங்களைத் தான் விரும்பவில்லை என்பதை அன்னமாச்சார்யார் இந்தக் கீர்த்தனையில் வெளிப்படுத்துகின்றார்.

இவ்வுலகத்தில் இருந்தாலும், பரலோகத்தில் இருந்தாலும் எனக்கு உன்மேல் உள்ள பக்தியானது நிறைவானதாக இருத்தல் வேண்டும். இதைத் தவிர மற்றொன்றை நான் விரும்பவில்லை.

எங்கு பிறந்தால் என்ன? எந்த இடத்தில் இருந்தால் என்ன? உனக்குத் தொண்டு செய்கின்றப் பாக்கியம் கிடைத்தால் அதுவே போதுமானது. சொர்க்கத்தில் இருந்தாலும், நரகத்தில் இருந்தாலும் எனக்கு அழகான உன்னுடைய நாமத்தைச் சொல்கின்ற வாய்ப்புக் கிடைத்தால் அதுவே எனக்குப் பெருமை வாய்ந்தது.

அரசனாக இருந்தாலும் அடிமையாக இருந்தாலும் பக்தியுடன் உன்னை நினைக்கின்ற வாய்ப்புக் கிடைத்தால் அதுவே எனக்கு இன்பம். மற்றவர்கள் என்னைப் புகழ்ந்தாலும் பரவாயில்லை. இகழ்ந்தாலும் பரவாயில்லை. நான் உனக்குச் சேவை செய்தால் அதுவே போதுமானது.

நான் கற்றாலும், கற்காமல் இருந்தாலும் என்னுடைய சிந்தனை உன்னுடைய திருப்பாதங்களில் இருந்து அகலாமல் இருக்க வேண்டும். திருவேங்கடமுடையானே! அன்புடன் என்னை நீ ஏற்றுக் கொண்டாய். உன்னைச் சரணடைவதே எனக்குப் போதுமானது.

# கீர்த்தனை - 8

## *ராகம் : பௌளி*

எந்த மாத்ரமுன எவ்வரு தலசின அந்த மாத்ரமே நீவு
அந்த ராந்தரமு லெஞ்சி சூட பிண்டந்தே நிப்படி யன்னட்லு
(பல்லவி)

கொலுதுரு மிமு வைஷ்ணவுலு கூறிமிதோ விஷ்ணுடனி
பலுகுதுறு மிழு வேதாந்துலு பரபிரம்ஹம் பநுசு
தலதுறு மிமு சைவுலு தகின பக்துலுனு சிவுடனுசு
அலரி பொகடுதுறு காபாலிகுலு ஆதி பைரவுடனுசு
(1)

ஸரி நென்னுதுரு ஸாக்தேயுலு ஸக்தி ரூபு நீவனுசு
தரிஸனமுலு மிமு நானா விதுலனு தலபுல பஜிந்துரு
ஸிருல மிம்மு நே யல்ப புத்தி தலசின வாரிகி நல்பம் பவுதுவு
கரிமல மிமு நே கணமணி தல்சின கன புத்துலகு கனுடவு
(2)

நீவலன கொரதேவேது மரி நீரு கொலதி தாமரவு
ஆவல பாகீரதி தரிபாவுல ஆஜலமே ஊரினயட்லு
ஸ்ரீவேங்கடபதி நீவைதே மமு ஜேகொனி உன்ன தைவமனி
ஈவல நேநீ ஸரணனியெதனு இதியே பரதத்வமு நாகு (3)

திருமலையில் இருக்கின்ற பெருமாளைப் பலர் பல வடிவங்களில் இருக்கின்ற தெய்வமாக வழிபடுகின்றனர். ஆனால் அன்னமாச்சார்யார் பெருமாளைத் திருவேங்கடமுடையான் எனப் பாவித்து சரணடைகின்றார் என்ற கருத்து இக்கீர்த்தனையில் கூறப்படுகிறது.

எந்த அளவிற்கு உன்னை நினைக்கிறார்களோ அந்த அளவிற்கு நீ அவர்களுக்குக் காட்சியளிக்கின்றாய். உள்ளுக்குள் நினைத்துப் பார்த்தால் எந்த அளவிற்கு மாவுள்ளதோ அந்த அளவிற்கு அதிரசம் என்பது போல்.

வைணவர்கள் உன்னை அன்புடன் விஷ்ணு என்று பாவித்து வழிபடுகிறார்கள். வேதம் அறிந்தவர்கள் உன்னை பரப்பிரம்மம் என்று அழைக்கிறார்கள். சைவர்கள் உன்னை சிவன் என்று பாவிக்கிறார்கள். காபாலிகர்கள் உன்னை மகிழ்ச்சியுடன் ஆதிபைரவன் என்று போற்றுகிறார்கள்.

சக்தியை வழிபடுபவர்கள் உன்னைச் சக்தி வடிவம் என்று பாவிக்கிறார்கள். வெவ்வேறு சமய நூல்கள் உன்னைப் பலவிதமாக எண்ணி அதற்குத் தகுந்தவாறு வழிபடுகின்றன. செல்வ வளத்துடன் இருக்கின்ற உன்னை ஒருவர் அற்பப் புத்தியில் நினைத்தால் அவனுக்கு நீ அற்பமாகவே காட்சியளிக்கின்றாய். உன்னை உயர்ந்தவன் என்று நினைக்கின்ற உயர்ந்தவர்களுக்கு உயர்ந்தவனாய் காட்சியளிக்கிறாய்.

பெருமானே உன்னிடத்தில் எனக்கு ஒரு குறையும் இல்லை. நீ எப்படி என்றால், தண்ணீர் மட்டம் எந்த அளவிற்கு இருக்கின்றதோ அந்த அளவிற்குத் தாமரை வளரும். அதைப் போல் உன்னை எந்த அளவிற்கு நினைக்கிறார்களோ அந்த அளவிற்கு காட்சியளிக்கின்றாய். கங்கை நதிக்கு அருகில் உள்ள கிணறுகளில் கங்கை நதி நீர் ஊறுவது போல நீ எங்களின் அருகில் இருந்து காக்கின்றாய். என்னைக் காப்பாற்றுகின்ற தெய்வம் என்று உன்னை நான் சரணடைகின்றேன். இதுதான் என்னுடைய மூல தத்துவம்.

## கீர்த்தனை - 9

### *ராகம் : ஸாமன்தம்*

எக்குவ குலஜுடைன ஹீன குலஜுடைன
நிக்க மெரிகின மஹா நித்யுடே கனுடு (பல்லவி)

வேதமுலு சதிவியுனு விமுகுடை ஹரிபக்தி
யாதரிஞ்சனி ஸோமயாஜி கண்டே
ஏதியுனுலேனி குலஹீனுடைனனு விஷ்ணு
பாதமுலு ஸேவிஞ்சு பக்துடே கனுடு (1)

பரமமகு வேதாந்த படன தொரகியு ஸதா
ஹரி பக்தி லேனி ஸந்யாஸி கண்டே
ஸரவிமாலின யந்த்ய குலஜுடைன
நரஸி விஷ்ணு வேதகு நாதடே கனுடு (2)

வினியுனு சதிவியுனு ஸ்ரீவிபுனி தாஸுடு காக
தனுவு வேபுசு நுண்டு தபஸி கண்டே
எனலேனி ஸ்ரீவேங்கடேஸு ப்ரஸாதான்ன
மனுபவிஞ்சு யாத டப்புடே கனுடு (3)

இக்கீர்த்தனையில் உண்மையான வைணவ பக்தர் எவ்வாறு இருக்க வேண்டும் என்பதைத் தெரியப்படுத்துகிறார் அன்னமாச்சார்யார்.

உயர்ந்த சாதியில் பிறந்தால் என்ன? தாழ்ந்த சாதியில் பிறந்தால் என்ன? எவன் உண்மையான நிலையாக இருக்கின்ற கடவுளை அறிந்தவனோ அவனே சிறந்தவன்.

வேதங்கள் அனைத்தையும் கற்றிருந்தாலும் வேள்விகள் செய்திருந்தாலும் விஷ்ணு பக்தியில்லாத ஒருவரைக் காட்டிலும், மேற்சொல்லப்பட்ட எதுவும் செய்யாமலிருக்கும் தாழ்ந்த சாதிக்காரனாக இருப்பினும், விஷ்ணுவின் திருவடிகளுக்குத் தொண்டு செய்தால் அவனே உயர்ந்த பக்தனாவான்.

வேதங்களை ஓதிக்கொண்டிருக்கும் ஹரிபக்தியில்லாத ஒரு துறவியைக் காட்டிலும் கீழ்ச்சாதியான ஒருவன் விஷ்ணுவைக் காண வேண்டும் என்ற ஆர்வத்தில் தேடினால் அந்த பாமரன் தான் சிறந்தவன்.

சாஸ்திரங்களைக் கேட்டும், வேதங்களைப் படித்தும் ஸ்ரீமகா விஷ்ணுவுக்கு அடியவனாகாமல் தன் உடலைப் பாதிப்பிற்குள்ளாக்கும் ஒரு துறவியைக் காட்டிலும் ஈடில்லாத ஸ்ரீ வெங்கடேஸ்வரனின் பிரசாதத்தை எவன் உண்கிறானோ அவன்தான் சிறந்தவன்.

# கீர்த்தனை - 10

## *ராகம் : மாளவிகொளள*

நித்ய பூஜ லிவிவோ நேரிசின நோஹோ

1 1 1 1 1 1 1 1

பிரத்யதட்ச்ய மைனட்டி பரமாத்முனிகி (பல்லவி)

1 3 1 1 2 1

தனுவே குடியடா தலயே ஸிகர மட

1 3 1 2 1

பெனு ஹ்ருதயமே ஹரி பீட மட

1 3 1 4 3 1 1

கனுகொன சூபுலே கன தீபமு லட

1 1 1 1

தனலோபலி யந்தர்யாமிகினி (1)

1 1 1 1 1 3 1

பலுகே மந்த்ரமட பாதைன நாலுகே

1 1 1 3 3 1 1

கலகல மனு பைடி கண்ட யட

3 1

நலுவைன ருசுலே நைவேத்யமு லட

1 1 3 1

தலபு லோபல நுன்ன தெய்வமுனகு (2)

3 3 1 3 3 3 1

கமன சேஷ்டலே யங்கரங்க கதியடா

1 3 3 3 3 1

தமிகல ஜீவுடே தாஸுடட

1 1

அமரின ஊர்புலே யாலவட்டமு லட

1 1 1 1

கிரமமுதோ ஸ்ரீவேங்கட ராயனிகினி (3)

நீ செய்கின்ற ஒவ்வொரு செயலும் பெருமாளுக்குச் செய்கின்ற தொண்டாகவே நினைப்பவன்தான் உண்மையான பக்தனாவான் என்று இந்தக் கீர்த்தனையில் அன்னமாச்சார்யார் வெளிப்படுத்துகின்றார்.

உண்மையை அறிந்தவன், காட்சியளிக்கின்ற திருவேங்கடமுடையானுக்குச் செய்கின்ற வழிபாட்டின் முறை இதுதான்.

சிறந்த பக்தன் ஒருவன் தன் உள்ளத்தில் இருக்கின்ற இறைவனுக்குத் தன் உடலைக் கோவிலாகவும் தன் தலையைக் கோபுரமாகவும் தன் இதயத்தை விஷ்ணு அமர்கின்ற பீடமாகவும் தன்னுடைய பார்வையைப் பெரிய ஜோதியாகவும் வைத்துப் பாவிப்பான்.

தனது சிந்தனையில் குடிகொண்டிருக்கும் இறைவனுக்குத் தனது பேச்சையே இறைவனைப் போற்றுகின்ற மந்திரமாகவும் தன்னுடைய நாக்கையே ஒலித்துக் கொண்டிருக்கின்ற பொன்னால் செய்யப்பட்ட மணியாகவும், தான் அனுபவித்துக் கொண்டிருக்கும் சுவையையே கடவுளுக்கு அளிக்கும் பிரசாதமாகவும் கொண்டுப் பாவிக்கிறான்.

அவனது நடையின் செயலே இறைவன் உலாவந்து கொண்டிருக்கும்போது முன்னும் பின்னும் வருகின்ற பரிவாரங்களாகவும், மூச்சே கடவுளுக்கு வீசுகின்ற வெண்சாமரையாகவும் அமைகின்றன. கடவுளை வழிபட வேண்டும் என்ற எண்ணமுடையவனின் சிந்தையானது, திருவேங்கட மலையில் குடிகொண்டிருக்கும் திருவேங்கடமுடையானுக்குத் தினந்தோறும் செய்கின்ற பூஜையாக அமைகிறது.

## கீர்த்தனை - 11

### *ராகம் : தேசாட்சி*

4 3 3
பாவமுலோனா பாஹ்யமு னந்துனு
3 3 3 3 1
கோவிந்த கோவிந்த யனி கொலுவவோ மனஸா!

(பல்லவி)

1 2 3 1
ஹரி யவதாரமுலே யகில தேவதலு
3 3
ஹரி லோனிவே ப்ரம்ஹாண்டமுலு
1
ஹரி நாமமுலே அன்னி மந்த்ரமுலு
ஹரி ஹரி ஹரி ஹரி ஹரி யனவோ மனஸா! (1)

1 1 1
விஷ்ணுனி மஹிமலே விஹித கர்மமுலு
1 3 3 3
விஷ்ணுனி பொகடே வேதமுலு
3 1 1 3 1 1 3
விஷ்ணு டொக்கடே விஸ்வாந்தராத்முடு
3 1
விஷ்ணுவு விஷ்ணுவனி வெதகவோ மனஸா! (2)

1 3 1 3 3 1
அச்யுதுடிதடே ஆதியு நந்த்யமு
1 3 1 1 3
அச்யுதுடே அஸுராந்தகுடு
1 3
அச்யதுடு ஸ்ரீவெங்கடாத்ரி மீத நிதே
1 1
அச்யுத யச்யுத ஸரணனவோ மனஸா! (3)

முக்தியைக் கொடுப்பவர் திருவேங்கடமுடையான் ஒருவர்தான். மனதளவிலும் செயலளவிலும் அவரை முழுமையாக வழிபட்டால் நிச்சயமாக முக்தி தருவார் என்ற கருத்தை இக்கீர்த்தனையில் அன்னமாச்சார்யார் வெளிப்படுத்துகின்றார்.

ஓ மனமே! நீ உள்ளத்திலும் வெளிப்படையாக கோவிந்தா! கோவிந்தா! என்று நினைப்பாயாக.

அனைத்துத் தேவர்களும் ஹரியினுடைய படைப்புகளே. உலக மக்கள் எல்லாம் ஹரியின் உள்ளத்தில் தான் இருக்கின்றனர். ஹரியின் பெயர்களே மந்திரங்களாக உச்சரிக்கப்படுகின்றன. ஆகையால் ஓ மனமே நீ எப்பொழுதுமே ஹரி ஹரி என்று ஜெபித்துக் கொண்டிருப்பாயாக.

உலகில் நடக்கும் அற்புதங்கள் அனைத்தும் விஷ்ணுவின் மகிமையாலே நடக்கின்றன. நான்மறைகளும் விஷ்ணுவை மட்டுந்தான் போற்றுகின்றன. இந்த உலகம் முழுவதும் பரவியிருப்பவர் விஷ்ணு ஒருவரே. ஆகையால் ஓ மனமே விஷ்ணுவைத் தேடுவாயாக.

ஆதியும் அந்தமுமாக விளங்குபவர் விஷ்ணுவே. அரக்கர்களை அழித்தவர் விஷ்ணு ஒருவரே. அந்த விஷ்ணுதான் இந்தத் திருவேங்கட மலையில் குடிகொண்டிருக்கிறார். ஆகையால் ஓ மனமே நீ அவரைச் சரணடைவாயாக.

## கீர்த்தனை - 12

*ராகம் : ஸுத்த வஸந்தம்*

1 3 3 1 3 3 3 1
கடலுடிபி நீராடகா தலசு வாரலகு
1 3 1 3 1 1 3 3
கடலேனி மனஸுனகு கடம யெக்கடிதி? (பல்லவி)

3 3 1 1 1 3 3
தாஹ மணகின வெனக தத்வ மெரிகெத நன்ன
3 3 1 1 1 3
தாஹ மேலணகு தா தத்வ மே மெருகு?
3 3 3 3 1 3 2 1
தேஹம்பு கல யன்னி தினமுலகுனு பதார்த்த
3 3 3 3 1 3
மோஹ மேலுடுகு தா முதமேல கலுகு ? (1)

3 3 1 3 3
முந்த ரெரிகின வெனக மொதலு மரசெத நன்ன
3 3 1 3
முந்தரே மெருகு தா மொதலேல மரசு?
3 3 1 1 1 3
அந்தமுக திருவேங்கடாத்ரீஸு மன்னனல
1 3 3 1 3
கந்துவெரிகின மேலு கலனைன லேது (2)

உலக வாழ்வை இன்பமாக அனுபவித்தபின் கடவுளை அடைவதற்கு முயற்சி செய்வது அறிவற்ற செயல் என்று அன்னமாச்சார்யார் இக்கீர்த்தனையில் குறிப்பிடுகின்றார்.

கடலில் அலைகள் நின்ற பிறகு நீராட நினைக்கின்றவர்களுக்கும் மனதில் உள்ள ஆசைகள் நிறைவேறிய பின்பு கடவுளை நினைப்பவர்களுக்கும் எண்ணங்கள் நிறைவேறுமா ?

உலக இன்பங்களின்மேல் ஆசைகள் மறைந்தபின் பகவத் தத்துவத்தை அறியலாம் என்று நினைத்தால் எப்போது ஆசைகள் மறையும் ? ஆசைகள் மறையாவிட்டால் பகவத் தத்துவத்தை எப்படி அறிய முடியும் ? இந்த உடலின்மேல் விருப்பம் உள்ளவரை மனிதர்களுக்கு இந்த உலகப் பொருட்களின் மீது ஆசை மறையாது. அந்த ஆசை மறையாவிட்டால் எந்த ஆனந்தமும் கிட்டாது.

இனிமேல் பகவத் தத்துவத்தை அறிந்து அதன்பின் இல்லற இன்பத்தை நான் விட்டுவிடுவேன் என்று நினைத்தால் அக்கடவுளை எப்படி அறிவது ? இன்ப வாழ்க்கையிலேயே ஈடுபட்டிருக்கும் மனதை எப்படி மறக்கமுடியும் ? தவறு செய்தபோதும் மன்னிக்கின்ற தன்மையுடைய திருவேங்கடமுடையானின் பெருந்தன்மையை நினைத்தால் அனைத்து நன்மைகளும் உண்டாகும். இல்லையென்றால் கனவிலும் அவருக்கு முக்தி கிடையாது.

# கீர்த்தனை - 13

## *ராகம் : ஸங்கராபரணம்*

கொனரோ கொனரோ – மீரு கூறிமி மந்து
உனிகி மனிகி கெல்ல – நொக்கடே மந்து (பல்லவி)

த்ருவுடு கொனின மந்து – தொல்லியு பிரஹலாதுடு
சவிகா கொனின மந்து – சல்லனி மந்து
பவரோகமுலு வீடி – பாரக பெத்தலு முன்னு
ஜவகட்டி கொனின – நிச்சலமைன மந்து (1)

நிலிசி நாரதுடு கொனின மந்து ஜனகுடு
கெலுபுதோ கொனி ப்ரதிகின யமந்து
மொலசி நாலுகு யுகமுல ராஜுலு கனுலு
கலகாலமு கொனி கடகன்ன மந்து (2)

அஜுனகு ப்ரமாயுவை யொஸகின மந்து
நிஜமை லோகமுலெல்ல நிண்டின மந்து
த்ரிஜகமுலு நெருக திருவேங்கடாத்ரிபை
த்வஜமெத்தெ கோனேடி தரினுன்ன மந்து (3)

இவ்வுலகில் பிறப்பு இறப்பு என்ற நோயின்றி வாழ்வதற்கு பெருமானிடம் நாம் கொண்டுள்ள பக்தியே சிறந்த மருந்து என்று அன்னமையா இப்பாடலில் கூறுகின்றார்.

உலக மாந்தர்களே! அன்பே வடிவான இறைவன் என்ற மருந்தை நீங்கள் உட்கொள்ளுங்கள். இந்த உலகத்தில் இன்பமாக வாழ்வதற்கு இது ஒன்றுதான் சரியான மருந்தாகும்.

முன்னொரு காலத்தில் ஒருவன் இந்த மருந்தை அருந்தினான். பிரகலாதன் இந்த மருந்தை அன்போடு உட்கொண்டான். ஆதலால் மனதிற்கு அமைதிகொடுப்பதாக இந்த மருந்து அமைகிறது. இல்லறம் என்ற நோயை அகற்றுவதற்காக முன்னோர்கள் இந்த மருந்தை கைக்கொண்டார்கள்.

இந்த மருந்தை மிகுந்த பக்தியுடன் நாரதர் அருந்தினார். சீதைப் பிராட்டிக்குத் தந்தையான ஜனகன் இந்த மருந்தையே உட்கொண்டு மிகுந்த இன்பத்துடன் வாழ்ந்தான். அவரென்ன! இவரென்ன! இந்த நான்கு யுகத்தைச் சார்ந்த அரசர்கள், மகான்கள், தங்களின் வாழ்நாள் முழுவதும் இந்த மருந்தையே உட்கொண்டு முக்தி அடைந்தனர்.

இந்த மருந்து பிரம்மதேவனுக்கு நீண்ட வாழ்வினைக் கொடுத்தது. இதுவே உண்மை என்ற வடிவில் உலகம் யாவும் வியாபித்துள்ளது. தெப்பக்குளத்தின் கரையில் இருக்கின்ற இந்த மருந்து மூவுலகங்களும் அறியும்படியாக, என் போன்ற பிறவி என்ற நோயைத் தீர்க்கும் இது போன்ற மருந்து வேறொன்றுமில்லை என்று திருவேங்கடமலையின்மேல் கொடியேற்றி யாவருக்கும் அறிவித்தது.

## கீர்த்தனை - 14

### *ராகம் : பாடி*

1 3 3 3 1 1
ஈதடு பலுவுடவுட கிவியே ஸாட்சி

1 3 3 1 1 1 3
ஈதடு ப்ரம்ஹமவுட கீதடே ஸாட்சி (பல்லவி)

3 4 1
அமருல மொராலிஞ்சி அஸுருல பாதலு மான்பெ

11 1 3 1 1
அமருல கெக்குடவுட கவியே ஸாட்சி

1 1 11 1 3 3 1
அம்ருதமு பஞ்சி பெட்டி ஆதிலட்சுமி கைகொனே

1 4 1 1
அம்ருத மதனமே அன்னிடிகி ஸாட்சி (1)

3 3 3 3 1
இந்தருண்டே பிரம்ஹாண்டாலு இதே குட்சி நிஞ்சு

1
கொனே

1 1 1 3 31 1 3
இந்தரி கெக்கு டகுட கிதியே ஸாட்சி

1 3 13 3 3
கந்துவ வரமு லிச்சு கட நென்னடு செடவு

1 3 1 12
கந்துவ புராணாலலோ கதலே ஸாட்சி (2)

3 3 11 1 3 1 3 1
ஆதி ப்ரம்ஹ புட்டிஞ்சே மர்ராகு மீத துத தேலே

3 1 1 3 1 1 3
ஆதி நந்த்ய மீத் டவுட கதிவோ ஸாட்சி

1 3 3 11 3 1 3
பாதுகா ஸ்ரீவேங்கடாத்திரிபை மஹிம வெதஜல்லெ

1 3 1 1 1 3
பாது கொன்ன ஈதனி ஸ்ரீ பாதமுலே ஸாட்சி (3)

திருவேங்கடவன் ஒருவர்தான் அனைத்துத் தேவர்களுக்கும் உயர்ந்தவர் என்று பல எடுத்துக் காட்டுகளுடன் அன்னமையா இப்பாடலில் நிரூபிக்கின்றார்.

இவர் வலிமை வாய்ந்தவர் என்பதற்கு இவையே சாட்சி. இவர் பரப்பிரம்மம் என்பதற்கும் இவர்தான் சாட்சி.

தேவர்களுடைய கூக்குரலைக் கேட்டு அரக்கர்களின் துன்பத்திலிருந்து அவர்களைக் காப்பாற்றினார். தேவர்களைக் காட்டிலும் உயர்ந்தவர் என்பதற்கு இதுதான் சாட்சி. எல்லோருக்கும் அமுதைப் பங்கிட்டு திருமகளை மணந்தார்; இதற்குப் பாற்கடலில் அமுதைக் கடைந்ததுதான் சாட்சி.

இந்த உலகம் அனைத்தையும் தனது வயிற்றிலே வைத்திருக்கிறார் என்பதற்கும் எல்லோரைக் காட்டிலும் உயர்ந்தவர் என்பதற்கும் இதுதான் சாட்சி. கேட்பவர்களுக்கு வரத்தை அருளி அவர்களைக் காத்தார் என்பதற்குப் புராணங்கள் கூறும் கதையே சாட்சி.

முதன்முதலில் பிரம்மாவைப் படைத்துப் பின்னர் ஆலிலையில் துயில் கொண்டார். ஆதலால் உலகத்தின் தோற்றத்திற்கும் முடிவிற்கும் இவைதான் சாட்சி. திருவேங்கடமலையில் தன்னுடைய மகிமையை உலகம் அறியச் செய்ததற்கும் இவரது திருவடிகளே சாட்சி.

# கீர்த்தனை - 15

## *ராகம் : ஸுத்த வஸந்தம்*

3 1 1 3
சேரி யஸோதகு ஸிஸுவிதடு

4 3 1 3 1 3
தாருணி ப்ரம்ஹகு தன்ட்ரியு நிதடு (பல்லவி)

3
ஸொலஸி சூஸினனு சூரிய சந்துருலனு

3 3 3
லலிவெத சல்லெடு லட்சணுடு

2 3 1
நிலிசின நிலுவுண நிகில தேவதலு

1 3 3 1 3
கலிகிஞ்சு ஸுரல கனிவோ இதடு (1)

1 3 3
மாடலாடினனு மரி யஜாண்டமுலு

1 1 3 1 3
கோடுலு ஒடமேடி குணராஸி

1 3
நீடகு நூர்புல நிகில வேதமுலு

1 1 3 1 3
சாடுவ நூரேடி சமுத்ர மிதடு (2)

3 1 3 1
முங்கிட பொலஸின மோஹன மாத்மல

1 3 4 1 3
பொங்கிஞ்சே கன புருஷுடு

3 1 1 3 1 1
சங்கதி மாவண்டி ஸரணாகதுலகு

3 1 1 4 3 1 3
நங்கமு ஸ்ரீவேங்கடாதிபு டிதடு (3)

இப்பாடலில் அன்னமாச்சார்யார் திருவேங்கடவனை யசோதையின் அன்புக் குழந்தையாகவும், மூவுலகங்களையும் படைத்த பிரம்மாவிற்குத் தந்தையாகவும் வர்ணிக்கின்றார்.

இவன் யசோதைக்கு அன்புக் குழந்தை; மற்றொரு பக்கம் பார்த்தால் இவர் பிரம்மாவிற்குத் தந்தையாகவும் இருக்கின்றார்.

இவருடைய முகம் சூரியனாகவும், சந்திரனாகவும் அடியவர்களுக்குக் காட்சியளிக்கிறது. (ஆண்டாள் திருப்பாவையில் கண்ணனை 'கதிர்மதியம்போல் முகத்தான்' என்று வர்ணித்துள்ளார்). வேண்டியவர்களுக்குச் சந்திரனைப் போன்று குளிர்ச்சி பொருந்தியவனாகவும் அல்லாதவர்களுக்கு சூரியனைப்போல் வெம்மை உடையவன் போலும் இருக்கிறான். முப்பத்து மூன்றுகோடித் தேவர்களையும் படைத்தப் பரம்பொருளாகவும் இவர் விளங்குகிறார்.

உலகில் உள்ள அனைத்து ஜீவராசிகளையும் காப்பாற்றக்கூடிய நற்குணங்களுக்கு இருப்பிடமாக விளங்கிய அவருடைய சுவாசமே வேதங்களாக உருவாக்கப்பட்டவை.

பக்தர்களுடைய ஆத்மாவை ஆனந்த மகிழ்ச்சியூட்டும் பரமாத்மாவாகவும் சரணடைந்தவர்களைக் காப்பாற்றக்கூடிய திருவேங்கடவனாகவும் காட்சியளிக்கின்றார்.

# கீர்த்தனை - 16

## *ராகம் : பைரவி*

3 3 3 1
மொதலுண்ட கொனலகு மோசி நீள்ளு ஓய நேல ?
3 3 3 1
யெதலோ நீவுண்டகா நிதரமு லேலா ? (பல்லவி)

3 3 3 1
நிகம மார்கமுனா நே நட்டசே நன்டே
3
நிகமமு லெல்லனு நீ மஹிமே
3 1 3 3 1
ஜகமு லோகுல ஜூசி ஜரிகெத நன்டே
3 1
ஜகமுலு நீ மாய ஜகைமுலு (1)

3 1 1 1 3 1
மனஸெல்லா நட்டபெட்டி மட்டுன நுண்டே நன்டே
1 1 1 1
மனஸூ கோரிகலு நீ மதகாலு
1 3 1 3 3 1
தனுவு நிந்த்ரியமுலு தக கெலிசே நன்டே
1 3 3
தனுவு நிந்த்ரியமுலு தைவம நீ மஹிமே (2)

1 1 3 3 3
இந்தலோனி பனிகிகா இந்துநந்து ஜொரனேல ?
1 3 3
செந்த நிண்டு செறுவுண்ட செலமலேலா ?
1 1 1 1 1 1
பந்தான ஸ்ரீவேங்கடேஸா பட்டி நீகே ஸரணன்டி ?
1 1 1 4 3 1 1
ஸந்த கூடால தர்மபு ஸங்கதி நாகேலா ? (3)

எல்லாவற்றிற்கும் மூலப்பொருளான ஸ்ரீ ஹரியையே சரணடையவேண்டும். மற்ற உபாயங்களை அனுசரித்தால் எந்தப் பயனும் இல்லை என்ற கருத்தை அன்னமாச்சார்யார் இப்பாடலின் மூலம் வெளிப்படுத்துகின்றார்.

மரத்தின் வேர் இருக்கும்போது அதற்கு தண்ணீர் ஊற்றாமல் மர உச்சியில் தண்ணீர் ஊற்றினால் மரத்திற்கு என்ன பயன்? அதைப்போன்றே என் இதயத்தில் நீ இருக்கும்போது உன்னைவிட்டு மற்றொரு உபாயத்தினால் மோட்சத்தை அடைய வேண்டும் என்று நினைப்பது எவ்வாறு?

வேதங்கள் கூறுகின்ற வழியில் நாம் நடக்க வேண்டும் என்று நினைத்தால் வேதங்கள் அனைத்தும் உன்னுடையதுவே. உலகத்தில் இருக்கின்ற மக்கள் நடந்துகொள்வதைப் பின்பற்ற வேண்டும் என்று நினைத்தால் உலகங்கள் யாவையும் உன்னுடைய மாயையினால் உண்டானவையே.

சஞ்சலமாக இருக்கின்ற மனதைக் கட்டுப்படுத்த வேண்டும் என்று நினைத்தால் மனதில் உண்டாகும் ஆசைகள் அனைத்தும் உன்னுடைய மாயைதான். இந்தச் சரீரத்தையும், இந்திரியங்களையும் வென்று யோக மார்க்கத்தில் போக வேண்டும் என்று நினைத்தால் இந்தச் சரீரமும் இந்திரியங்களும் உன்னுடைய மகிமையாகும்.

அனைத்துமே உன்னுடைய மகிமைக்கு உட்பட்டிருக்கும்போது அங்கும் இங்கும் அலைந்து துன்புறுவது எதற்காக? அருகில் உள்ள ஏரியில் தண்ணீர் இருக்கிறபோது சிறு குழியில் உள்ள நீருக்குச் செல்வது எதற்கு? அனைத்து வரங்களையும் கொடுக்க வல்லவரான உன்னை நான் சரணடைந்தேன். இனிச் சந்தையில் வீணாக அலைந்து திரியும் மக்களின் தொடர்பு நமக்கு எதற்கு?

# கீர்த்தனை - 17

## *ராகம்* : ஸுத்த வஸந்தம்

1 1 3 4 3
புருஷோத்தமுட வீவு – புருஷாதமுட நேனு
4 3 1 3
தரலோ நாயந்து மஞ்சி – தன மேதி? (பல்லவி)

1 4
அனந்தாபராதமுலு – அடு நேமு சேஸேவி
1 3 3 3
அனந்த மைன தயா – அதி நீதி
1 1 3 1 3 3
நினு நேரக குண்டேடி – நீசு குணமு நாதி
3 1 3 3 3
நனு நெடய குண்டே குணமு நீதி (1)

1 1 1 3
ஸகல யாசகமே ஸருஸ நாகு பனி
1 1 1 1
ஸகல ரட்சகத்வமு ஸரி நீ பனி
1 1 1 3 1 1 1 1 3
ப்ரகடிஞ்சி நின்னு தூரே பலுகே நாகெப்புடுனு
1 3 4 3
வெகலி வை நனு காசே விதமு நீதி (2)

நேர மிந்தயுனு நாதி நேருபிந்தயுனு நீதி
1
ஸாரெகு நஞானி நேனு ஞானிவி நீவு
1 1 1 1 1
ஈ ரிதி ஸ்ரீவேங்கடேஸ இட்டே நன்னு நேலிதிவி
4 3 1 1 3
தாருணிலோ நின்டெனு ப்ரதாபமு நீதி (3)

கடவுளுக்கும் தனக்கும் இருக்கின்ற வேறுபாடுகளை விவரித்து இறுதியில் தன்னைக் காப்பாற்றக்கூடியவர் கடவுள் ஒருவர்தான் என்ற கருத்தை இப்பாடலில் அன்னமையா கூறியுள்ளார்.

பெருமானே! மனிதர்களிலே நீ சிறந்தவன். மனிதர்களிலே நான் கீழானவன். இவ்வாறு இருக்கும்பொழுது என்னுள் நற்குணங்கள் எப்படிப் பிறக்கும்.

நான் செய்த தவறுகள் எண்ணற்றவை; உன்னுடைய கருணை, எல்லை இல்லாதது. உன்னுடைய சிறப்பினை அறியாதது எனது மூடத்தனம்; இப்படியிருக்கும் என்னை எப்போதுமே கைவிடாமல் காக்கின்ற மேன்மைக்குணம் பொருந்தியவனாக நீ இருக்கின்றாய்.

எல்லோரிடத்திலும் கைநீட்டி யாசிப்பதுதான் என்னுடைய பணி. ஆனால் அனைவரையும் காப்பாற்றக்கூடியது உன்னுடைய பணியாகும். எப்பொழுதுமே உன்னைக் குறை கூறிக் கொண்டிருப்பதை என்னுடைய வேலையாகக் கொண்டிருக்கிறேன். நான் இவ்வாறு இருந்தும் என்னைக் கைவிடாது காக்கக் கூடியது உனது பெருந்தன்மையாக உள்ளது.

அறியாமைக் குணம் என்னிடம் உள்ளது. எல்லாம் தெரிந்தவனாய் நீ இருக்கின்றாய். நான் ஞானமற்றவன். நீ ஞானி. திருவேங்கடமுடையானே இப்படி இருக்கின்ற என்னை நீ ஏற்று அருள்புரிந்து கொண்டிருக்கிறாய். உலகமெல்லாம் உன்னுடைய சிறப்பு பரவியிருக்கிறது.

## கீர்த்தனை - 18

### *ராகம் : நாட்டா*

எவ்வ ரெவ்வரி வாடோ ஈ ஜீவுடு சூட்
நெவ்வரிகி நே மவுனோ ஈ ஜீவுடு? (பல்லவி)

எந்தரிகி கொடுகு காடீ ஜீவுடு, வெனக
கெந்தரிகி தோபுட்ட டீ ஜீவுடு?
எந்தரினி ப்ரமயிஞ்ச டீ ஜீவுடு, துக்க
மெந்தரிகி காவிம்ப டீ ஜீவுடு? (1)

எக்க டெக்கட திருக டீ ஜீவுடு, வெனக
கெக்கடோ தன ஜென்ம மீ ஜீவுடு?
எக்கடி சுட்டமு தனகு, நீ ஜீவுடு, எப்பு
டெக்கடிகி நேகுனோ ஈ ஜீவுடு? (2)

என்னடு்நு சேடு்லே நீ ஜீவுடு், வெனக்
கென்னி தனுவுலு மோவ டீ ஜீவிடு?
என்கைல திருவேங்கடேஸு மாயல தகிலி
என்னி பதவுல பொந்த டீ ஜீவுடு (3)

பிறப்பு, இறப்பு மற்றும் இல்லற வாழ்வு என்ற வட்டத்தில் அலைந்து கொண்டிருக்கும் உயிரினங்களின் தன்மையை இப்பாடலில் அன்னமையா வர்ணிக்கின்றார்.

இந்த மனிதன் எத்தனையோ பிறவி எடுத்துள்ளான். எவர் எவருக்கோ பிறந்துள்ளான். பிறப்பு இறப்பு என்ற இல்லற வட்டத்தில் சுழன்று கொண்டிருக்கின்றான். இந்த மனிதனின் பிறப்பில் யார் யாருக்கு என்ன என்ன தொடர்பு இருந்தது என்பதை யாரால் நிர்ணயிக்க முடியும். இதனை ஆராய்ந்து பார்த்தால் மனிதர்களிடையே எந்த உறவும் இல்லை.

இந்த மனிதன் எத்தனையோ பிறவிகளில் யார் யாருக்கோ மகனாகப் பிறவி எடுத்தான். அது போலவே யார் யாருக்கோ சகோதரனாகவும் பிறந்தான். எத்தனை பேரையோ மகனாகவும் நண்பனாகவும் மனைவியாகவும் கொண்டு அந்த உறவில் பிரமிக்கச் செய்தான். எத்தனை பேரையோ பலவிதமான துன்பத்திற்கு உள்ளாக்கினான்.

இந்த மனிதன் சுற்றாத இடமே இல்லை. முந்தைய ஜென்மங்களில் பல இடங்களில் பல உருவங்களில் பிறந்து திரிந்துள்ளான். வரும் ஜென்மங்களில் எங்கு பிறவி எடுப்பானோ? இந்தச் ஜென்மத்தில் மட்டும் இந்த மனிதன் நமக்கு எப்படி உறவு உடையவனாக இருக்க முடியும்? இந்த மனிதன் எப்பொழுது எங்கே செல்வான் என்பது தெரியாதல்லவா? இந்த மனிதன் எத்தனைப் பிறவிகள் எடுத்தாலும் எத்தனை தடவை இறக்க நேரிட்டாலும் உண்மையில் இந்த ஜீவாத்மாவுக்கு எந்தத் தீமையும் இல்லை. இந்த ஜீவாத்மா எத்தனையோ உருவங்கள் எடுத்துள்ளது. எடுத்த உருவங்கள் மட்டும் அழிந்து விடுகின்றன. ஆனால் ஜீவாத்மாவிற்கு எந்தத் தீங்கும் நேராது. திருவேங்கடவனுடைய மாயைக்கு உட்பட்டு இந்த ஜீவாத்மா எத்தனையோ உயர்ந்த பதவியை அடைந்து கொண்டிருக்கிறது.

## கீர்த்தனை - 19

*ராகம் : குஜ்ஜரி*

அப்புலேனி ஸம்ஸார மைன பாடே சாலு
தப்புலேனி ஜீத மொக்க தாரமைன சாலு (பல்லவி)

கந்தலேனி குடிஸொக்க கம்பந்தைன சாலு
சிந்தலேனி யம்ப லொக்க சேரெடே சாலு
ஜந்தகானி தருணி ஏ ஜாதைன நதே சாலு
விந்தலேனி ஸம்பதொக்க வீசமே சாலு (1)

திட்டுலேனி ப்ரது கொக்க தினமைன நதே சாலு
முட்டுலேனி கூடொக்க முத்தெடே சாலு
குட்டு செடி மனுகண்டே கொஞ்சபு மேலைன சாலு
வட்டி ஜாலி படுகண்டே வச்சினந்தே சாலு (2)

லம்பட படனி மேலு லவலேஸமே சாலு
ரொம்பி கம்பமவு கண்டே ரோயுடே சாலு
ரம்பு கோரிக கண்டே ரதி வேங்கடபதி
பம்புன நாதனி சேரே பவமே சாலு (3)

தவறான வழியில் ஆடம்பரமாக வாழ்க்கை நடத்துவதைக் காட்டிலும் நேர்மையான வழியில் எளிமையாக வாழ்க்கை நடத்துவதுதான் சிறந்தது என்பதை அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகிறார்.

கடன் பெற்று ஆடம்பரமாகக் குடும்ப வாழ்க்கை நடத்துவதைக் காட்டிலும் கடன் ஒன்றும் இல்லாமல் எளிமையாக வாழ்க்கை நடத்துவதே இனிமையாக இருக்கும். தவறான வழியில் ஈட்டிய நிறைந்த செல்வத்தைக் காட்டிலும் தவறு செய்யாமல் வருகின்ற குறைந்த செல்வங்களே போதுமானது.

வெயிலிலும் மழையிலும் ஏற்படக்கூடிய எந்தத் துன்பமும் இல்லாத பெரிய மாளிகையில் வசிப்பதைக் காட்டிலும் குடிசையில் வாழ்வது சிறந்தது. நிறைய இன்னல்களுக்கு உள்ளாகி அறுசுவை உணவை உண்பதைக் காட்டிலும் எந்தக் கவலையுமின்றி கையளவு கூழைக் குடித்தாலும் அதுவே இனிமையானது. தீய பண்புகளைக் கொண்ட குலப்பெண்ணைக் காட்டிலும் குணம் நிறைந்த கீழ்ச்சாதிப் பெண்ணே சிறந்தவள். எல்லோருமே அதிசயப்படும்படி செல்வத்தைச் சம்பாதிப்பதைக் காட்டிலும் நியாயமான வழியில் சம்பாதிக்கின்ற பணம் சிறியதாக இருந்தாலும் அதுவே சிறந்தது.

மற்றவர்கள் தூற்றி நாம் நூறு வருடங்கள் வாழ்வதைக் காட்டிலும் எந்த ஒரு தூற்றுதலும் இல்லாமல் ஒரு நாள் வாழ்ந்தாலே போதுமானது. சுத்தமற்ற உணவினை வயிறு நிறைய சாப்பிடுவதைக் காட்டிலும் சுத்தமான உணவினை ஒரு பிடி சாப்பிட்டாலும் போதுமானது. பேராசையினால் நிறைய பொருள் பெற்று அவமானப்படுவதைக் காட்டிலும் அது சிறிதளவே இருந்தாலும் மன நிறைவுடன் இருந்தால் அதுவே போதுமானது. அங்கும் இங்கும் அலைந்து அல்லல்படுவதைக் காட்டிலும் கிடைத்த வருமானத்தில் திருப்தி அடைவது மேலானது. பல இன்னல்களுக்கு ஆளாகித் துன்புறுவதைக் காட்டிலும் எந்தப் பாதிப்பும் இல்லாமல் இருப்பது நல்லது. சேற்றில் வைத்த கம்பம் போன்று நிலையற்ற வாழ்க்கை வாழ்வதைக் காட்டிலும் உலக இன்பங்களை வெறுத்து அமைதியாக வாழ்வதே நல்லது.

நமது ஆசைகள் ரம்பம் போன்றது. அந்த ஆசைகளுக்கு உள்ளாகி துன்பமுறுவதைக் காட்டிலும் இறைவனுடைய ஆணையை ஏற்று அவரது திருவடியை சேர்வதற்கு முயற்சி செய்கின்ற மனிதனுடைய பிறவியே சிறந்தது.

## கீர்த்தனை - 20

### *ராகம் : தன்யாஸி*

எந்த விப்வமு கலிகெ நந்தயுனு நாபதனி
சிந்திங்சிதை கதா செடனி ஜீவனமு (பல்லவி)

சலமு கோபம்பு தனு ஜம்பேடி பகதுலனி
தெலிஸினதி யதிகதா தெலிவி
தலகொன்ன பர நிந்த தனபாலி ம்ருத்யூவனி
தொலகினதி யதிகதா துதகன்ன பலமு (1)

மெரயு விஷயமுலே தன மெடனுன்ன யுருலுகா
எரிகினதி யதிகதா யெருக
பரிவோனி யாஸ தனு பட்டு கொனு பூதமணி
வெரசினதி யதி கதர விஞ்ஞான மஹிமா (2)

எனலேனி திருவேங்கடேஸுடே தைவமணி
வினகலிகினதி கதர வினிகி
அனயம்பு நதனி சேவாநந்த பருலை
மனகலிகினதி கதா மனுஜுலகு மனிகி (3)

6) செல்வத்தின் மீது பேராசை கொண்டு கோபம் கொள்ளுதல், பிறரைப் பற்றிப் புறங்கூறுதல் போன்ற தீய எண்ணங்களை நீக்கிவிட்டு இறைவனுக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்று அன்னமையா இப்பாடலில் கூறுகின்றார்.

எவ்வளவு செல்வத்தினை அடைந்தாலும் அது ஆபத்தைத் தான் கொண்டு வரும். உண்மையான செல்வம் இது அல்ல என்று நினைத்து கர்வம் அடையாமல் எவன் இருக்கிறானோ அவனுடைய வாழ்க்கை தான் சிறப்புற்றிருக்கும்.

பொறாமை, கோபம் போன்றவற்றைத் தன்னை அழிக்கின்ற பகைவர்கள் என்று நினைத்து அவற்றைத் தம்மை அடையவிடாமல் தடுப்பது உண்மையான அறிவாகும். மற்றவர்களைக் குறை கூறுவது தமக்கு சிறப்புத் தருவது அல்ல என்று நினைத்து அதிலிருந்து விலகியிருப்பதுதான் சிறந்தது.

நம்மை மயக்குகின்ற ஐம்புலன்களைத் தனக்குத் தூக்குக் கயிறாக நினைத்து அவற்றிலிருந்து விடுபட்டு வாழ்பவன் எவனோ அவனே ஞானியாவான். பேராசையானது தனக்குத் துன்பம் செய்கின்ற பேய் என்று நினைத்து அதற்கு பயந்து விலகியிருப்பவன் அறிவே சிறந்தது.

இணையற்ற திருவேங்கடவனே, உண்மையான கடவுள் என்று எப்பொழுதுமே அவனை கைங்கர்யம் செய்து கொண்டு மகிழ்ச்சியுடன் எவர் வாழ்க்கை நடத்துகிறார்களோ அவர்களுடைய வாழ்க்கை தான் உண்மையான வாழ்க்கை.

# கீர்த்தனை - 21

## *ராகம் : தேவ காந்தாரி*

பாரஞமன வேப் மானு ப்ாலுவோஸி பெஞ்சினானு
தீரனி சேதே காக திய்யநுண்டீனா ? (பல்லவி)

பாயதீஸி குக்கதோக பத்தலுவெட்டி பிகிஸி
சாய கெந்த கட்டிநானு சக்க நுந்டீனா ?
காயபு விகார மிதி கலகாலமு செப்பினா
போயின போகலே காக புத்தி விநீநா ? (1)

முஞ்சி முஞ்சி நீடிலோன மூல நானபெட்டு கொன்னா
மிஞ்சின கொட்டலி நேடு மெத்தனய்யினா ?
பஞ்ச. மஹாபாதகால பாரிபட்ட சித்த மிதி
தஞ்சி தஞ்சி செப்பினானு தாகி வங்கீனா ? (2)

கூரிமிதோ தேலுதெச்சி கோகலோன பெட்டு கொன்னா
ஸாரெ ஸாரெ குட்டுகாக சக்க நுண்டீனா ?
வேறு லேணி மஹிமல வேங்கட விபுனி க்ருப
கோரமைன ஆஸ மேலு கொர ஸோகீனா ? (3)

ஸ்ரீமகாவிஷ்ணுவிடம் சரணாகதி அடைந்தால் மட்டுமே நம்முடைய உடலையும் மனதையும் கட்டுப்படுத்த முடியும் என்று அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகின்றார்.

எவ்வளவு தான் முயற்சி செய்தாலும் இயற்கையாகவே காமத்திற்கு உட்பட்ட நமது உடலானது மனது கூறுகின்ற வழியில் செல்லாது.

பெரிய வேப்ப மரத்திற்குப் பால் ஊற்றி வளர்த்தாலும் அது கசப்பைத்தான் தரும்; அதிலிருந்து இனிப்பினைப் பெற முடியாதல்லவா? நாயினுடைய வால் வளைந்து தான் இருக்கும். அந்த வாலில் மூங்கில் குச்சியினைக் கட்டி எவ்வளவு முயற்சி செய்தாலும் அதனை நேராக மாற்றமுடியாதல்லவா? அது போன்றே இந்த உடலும் காமத்தில் ஈடுபடுவது இயற்கையாகவே உள்ளது. எவ்வளவு காலம் உபதேசித்தாலும் அது செல்லும் வழியிலே செல்லுமேயன்றி நாம் சொல்கின்ற நல்ல சொற்களைக் கேட்காது.

மரத்தை வெட்டுகின்ற கோடாரியை எவ்வளவு ஆழமான நீரில் வைத்தாலும் மிருதுவான தன்மையைப் பெறாதல்லவா? அது போன்றே இந்த மனது பஞ்சமகாபாவத்திற்கு உள்ளாகி இருக்கிறது. எவ்வளவு தான் அழுத்தமாகக் கூறினாலும் அது நல்ல வழிக்கு வராது.

தேளை அன்போடு மடியில் வைத்தாலும் அது கொட்டிக் கொண்டே இருக்குமே தவிர செயலற்று இருக்காது. ஆகையால் நாம் பொருள்மேல் கொள்கின்ற ஆசையை விட்டுவிட்டு திருவேங்கடமுடையானுடைய அன்புக்கு ஆசை கொள்வதுதான் சிறந்தது. அப்படி அன்பு கொண்டிருந்தால் எப்போதுமே எந்தக் குறையும் இருக்காது.

# கீர்த்தனை - 22

## *ராகம் : முகாரி*

1 1 3 1 1
ஸேவிந்துரா இதனி செலகி பரு லிட்லனே
1 1 3 3 1 3
காவிஞ்செ மம்மு நெக்கடி தைவ மிதடு (பல்லவி)

1 1 3 3 1 1 3
பாலசவி இதடெட்ருகு பால பவளிஞ்சே, கோ
1 3 1 4 3
பாலுடனி நேமிதனி பஜியிஞ்சகா
1 1 3 3 1 1 3
பாலுபடி தல்லிபாலு ஸஹிதம்பு நே
1 3 1 1 3 3 1 3
காலமுனு பாபே நெக்கடி தைவ மிதடு (1)

1 1 1 1 1 1 3
புட்டிம்ப தானே மறி புருஷோத்தமுடு, மஞ்சி
1 1 3 1 3
புட்டு வொஸகீ நனுசு பூஜிஞ்சகா
1 1 1 3 3 1 1
பட்டு கொனி மமுதெச்சி பலிமி புட்டுவு லெல்லா
3 1 1 1 1 3 3 1 3
கட்டி பெட்டிஞ்சே நெக்கடி தைவ மிதடு (2)

1 1 1 3 1 3 1
கர்மகர்த்தாருடனி கடலேனி புண்ணியமுல
1 2 3 1 3 1 1 3
கர்மபலமுலு தனகு கைகொலுபகா
1 3 1 1 1 4 3 4
கர்மகதி தெச்சி வேங்கடவிபுடு மா உபய
1 1 3 3 1 3
கர்மமுல ஜெரிசே நெக்கடி தைவ மிதடு (3)

கடவுளை வணங்குவதினால் தான் மோட்சம் அடைய முடியும் என்ற கருத்தை வஞ்சப்புகழ்ச்சியில் அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகின்றார்.

இந்தக் கடவுளை அன்புடன் வணங்கியதால் இவர் இப்படிச் செய்தார். மற்றவர்கள் இவரை விரும்பி எப்படி வணங்குவார்கள்? இவரென்ன கடவுள்?

இவருக்குப்பாலின் சுவை தெரியும். கிருஷ்ணாவதாரத்தில் பாலைத் திருடி உண்டவன் அல்லவா? அது மட்டுமல்லாது, இவன் பாற்கடலில் பள்ளி கொண்டிருப்பவன் அல்லவா? ஆகையால் இவனை வணங்கினால் பாலுக்கு குறைவிருக்காது என்று வணங்கினோம். ஆனால் இவர் எங்களுக்குத் தாய்ப்பால் கூட எப்பொழுதும் இல்லாமல் செய்தார். இவர் என்ன கடவுள் (பிறப்புக்கும் இறப்புக்கும் காரணமான இவரை வணங்கினால் பிறப்பினை இல்லாமல் செய்து மோட்சத்தை அளிப்பார் என்பது உட்கருத்து)

பிறப்பிற்கும் இறப்பிற்கும் காரணமானவர் இவர்தான். இவரை வணங்கினால் எந்தக் குறையும் இன்றி சிறந்த செல்வத்துடன் பிறப்பையும் அளிப்பார் என்று நினைத்து பூஜை செய்தோம். ஆனால், இவர் எங்களுக்கு பிறப்பே இல்லாமல் செய்தார். இவர் என்ன கடவுள்?

நாம் செய்கின்ற செயல்களுக்கெல்லாம் இவர்தான் காரணம். ஆகையால் நல்ல செயல்களிலே இவரை ஆராதனை செய்தால் மறுபிறவியில் நல்ல செயல்களையே அளிப்பார் என்று இவரை வணங்கினோம். ஆனால் திருவேங்கடவன் எங்களைப் பாவம், புண்ணியம் என்ற இரு செயல்களையும் செய்யவிடாமல் செய்தார். இவர் என்ன கடவுள்?

# கீர்த்தனை - 23

## *ராகம் : ஸாமந்தம்*

1 3 1 1 1 3 1 3 1 3 4
அதடே ஸகல வ்யாபகு டதடே யாதுர பந்துவு
3 1 3 3 1 3 1 3 1 3 1
டதடு தலம்புல முங்கிட நப்புட யென்னடொகோ? (பல்லவி)

1 3 4 3
ஸாரெகு ஸம்ஸாரம்பனு ஜலநிது லீதுசு நலஸின
1 1 3 3 1 3 3 1 3 1
வாரிகி நிக தரிதாபகு வாடிக நெவ்வடொகோ?
1 3 1 1 1 1 3 1
பேரின யஞ்ஞானம்பனு பெனு ஜீகடி தனுகப்பின
3 1 1 3 3 3 3 3
சேறுவ வெலுகை தோபெடி தேவுடதெவ்வடொகோ? (1)

3 1 1 1 1 3 1 1
துரிதபு கானநமுலலோ த்ரோவடு தப்பின வாரிகி
1 3 1 1 3 3 3 3 3 1
தெருவிதே கொம்மனி சூபெடி தேவுடதெவ்வடொகோ
1 3 1 1 3 1 3 1 3 1
பெரிகிந யாஸாபாஸமு பெட கேலுக தனுகட்டின
1 3 1 3 4 3 1 3 3 1
வெரவகுமனி விடிபிஞ்செடி விபு டிக டெவ்வடொகோ? (2)

1 3 1 3 3 3 1
தகின யாபத லனியெடி தாவாநலமுலு சுட்டின
3 3 3 1 3 1 3 3 3 1 3 1
பெகடகு மனி வடி நார்ப்பெடி பிருதிக நெவ்வடொகோ?
1 3 1 1 3 3 1 1 1 4 3 1 3
தெகுவயு தெம்புனு கலிகின திருவேங்கட விபுடொக்கடே
3 1 1 1 3 3
ஸொகசி தலஞ்சினவாரிகி ஸுரதருவகுவாடு (3)

எல்லாவிதமான சிக்கல்களிலிருந்தும் நம்மைக் காப்பாற்றக் கூடியவர் இந்தக் கடவுளைத் தவிர மற்றவர் இல்லை என்பதை அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகின்றார்.

திருவேங்கடவன் எல்லா இடங்களிலும் பரவி உள்ளார். ஆபத்து நேரிடும்போது காக்கக்கூடிய உறவினராகவும் இருக்கிறார். அவர் நம் முன்னே எப்போதும் காட்சியளிப்பாரல்லவா?

கடல் போன்ற இல்லற வாழ்வில் நீந்தி சோர்வடைந்த உயிர்களைக் காக்கக் கூடிய இவரைத் தவிர வேறு யார் உளர்? அஞ்ஞானம் என்ற இருட்டில் அலைந்து கொண்டிருக்கும் உயிரினங்களுக்கு விளக்காகத் தோன்றி அவர்களுக்கு வழிகாட்டியாக இருக்கின்ற இறைவனாக யார் உளர்?

பாவம் என்ற காட்டில் வழிதவறி செல்பவர்களுக்கு இது தான் சரியான வழி என்று காட்டுகின்ற இறைவனாக யார் உளர்? பேராசை என்ற பாசக்கயிற்றினால் தன்னைக் கட்டி வைத்த போது இதிலிருந்து விடுவிக்கின்ற இறைவனாக யார் உளர்?

ஆபத்து என்ற காட்டுத்தீ தன்னைச் சுற்றிப் பரவிய போது அஞ்சாதே என்றே கூறி காட்டுத்தீயை அணைக்கின்ற வல்லமை உடைய இறைவனாக யார் உளர்? வீரத்தினைக் கொண்டிருப்பதும், கருணையே வடிவமாக கொண்டவனுமாகிய திருவேங்கடவன் ஒருவன் தான் இறைவன். அந்தப் பொருமானை பக்தியால் யார் வணங்குகிறார்களோ அவர்களுக்குக் கற்பகவிருட்சகம் போன்று ஆசைகளை நிறைவேற்றுவான்.

# கீர்த்தனை - 24

*ராகம் : குண்டக்ரியா*

1 1 3 3 3 1 1
ப்ராணுல நேரமி காதிதி பஹு ஜன்ம பரம்பரசே

1 1 1 1 1 2 3
ப்ராணுலு சேஸின தம தம பாப பலமு கானி (பல்லவி)

1 3
ஹறி ஸகல வியாபகுடனி அந்தரு ஜெப்ப நெறிகியு

1 3 3 3 1 1
பர தைவம்புல கொலுவக பாயரு மானவுலு

1 1 4 3 4 4 1 3 1
நரபதி பூமேலக பூவரு பஜியிம்பக நொல்லக

1 1 3 3 1 1
பரிஸர வர்த்துல வெம்படி பனி ஸேஸினயட்லு (1)

1 3 3 1 1 1 1 3 1
பொந்துக தமதம சேஸின பூஜலு ம்ொரக்குலு கைகொன

3 3 1 3 1 3 1 3
அந்தமுகா புருஷோத்தமுடாதடே கலடனியு

3 3 1
அந்தரு நெறிகியு நிதருல ஜெந்துதுருன்னத ஸைலமு

3 1 1 3 1 1
நந்தக சேருவ தருவுல நந்து கொனின யட்லு (2)

1 1 1 1 1 3 1 1 3 1
ஸ்ரீவேங்கடபதி யொக்கடே செப்பக ஜகமுல கெல்லனு

3 1 1 4 3
தைவமு நாதும லோபலி தனமனகா வினியு

1 3 4 3 1
ஸேவிம்பரு பாமரு லீ தேவுனி மதுரம் பொல்லக

3 3 1
வாவிரி புலுஸலுசேதுலு வலெனனி கொனுனட்லு (3)

திருவேங்கடவனே அனைவருக்கும் உயர்ந்தவன் என்று தெரிந்தும் முற்பிறப்பில் செய்த பாவத்தின் காரணமாக மக்கள் அவரை வணங்குவது இல்லை என்று அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகின்றார்.

திருவேங்கடவனை உயிர்கள் பூஜை செய்யாதிருப்பதற்குக் காரணம் அவர்களுடைய அறிவற்ற தன்மையினால் ஏற்பட்ட தவறல்ல. முற்பிறப்புகளில் அவர்கள் செய்த பாவத்தின் பலன்தான் அவர்களை இறைவனை வணங்காதபடி செய்துகொண்டிருக்கிறது.

ஸ்ரீஹரி எல்லாவற்றிலும் பரவி உயர்ந்தவராய் இருக்கிறார் என்று பெரியோர்கள் கூறியுள்ளார்கள். இந்தச் செய்தியைத் தெரிந்தும் மக்கள் பிற தெய்வங்களை வணங்குவதை விடவில்லை. இது எப்படி இருக்கிறதென்றால், நாட்டை ஆளும் அரசனை வணங்குவதை விட்டுவிட்டு அவர் அருகில் உள்ள வேலையாட்களை வணங்குவது போன்று உள்ளது.

நாம் செய்கின்ற பூஜைகளை அன்புடன் ஏற்றுக்கொண்டு அருள் புரிவதற்கு திருவேங்கடவன் காத்துக் கொண்டிருக்கிறான் என்று தெரிந்தும் அவரை விட்டுவிட்டு மற்றவர்களை வணங்குகிறார்கள். இது எவ்வாறு உள்ளது என்றால் உயர்ந்த மலை, அருகில் இருந்தாலும் அதில் ஏறாமல் எங்கோ உள்ள சின்னச் செடிகளில் ஏறுவதற்கு ஆசைப்படும்படியாக அமைந்துள்ளது.

திருவேங்கடவன் ஒருவர் தான் இந்த உலகைக் காக்கும் கடவுள் என்றும் உயிர்களில் ஒளிந்து கொண்டிருக்கின்ற செல்வமாகவும் அமைந்திருக்கிறான் என்றும் முன்னோர்கள் கூறியும் கேட்காமல் அவரை வணங்கவில்லை. இது எவ்வாறு உள்ளது என்றால் இனிப்பு வேண்டாம் என்று கூறி அதற்குப் பதிலாக புளிப்பு, கசப்பு வேண்டும் என்று கூறிக்கொள்வதைப் போன்றது.

# கீர்த்தனை - 25

## ராகம் : ஸங்கராபரணம்

2 2 3 1
சீசீ நறு லதேடி ஜீவனமு

1 1 1 1 3 1
காசுக ஸ்ரீஹரி நீவே கருணிந்து காக (பல்லவி)

அடவிலோ ம்ருகஜாதி யயினா காவச்சு காக

3 1 1 3
வடி நிதருல கொலுவக வச்சுனா ?

3 1 3 3 1
உடிவோனி பட்சியை உண்டனனை வச்சு காகா

3 1 3
விடுவ கெவ்வரி நைனா வேட வச்சுனா ? (1)

1 1 1 3 3 1
பஸுரமை வெதலேனி பாடு படவச்சு காக

1 1 3 3 3
கஸிவோ நொறுல பொகடகா வச்சுனா ?

1 1 3 3 1
உஸுரு மானை புட்டி உன்டனைன வச்சு காகா

1
விசுவக வீரி வாரி வேஸரிஞ்ச வச்சுனா ? (2)

எம்மெல புண்யாலு சேஸி இல ஏல வச்சு காக

1 3 3 1
கம்மி ஹரிதாஸுடு காவச்சுனா ?

3 1 1 1 1 3 1
நெம்மதி ஸ்ரீவேங்கடேஸ நீ சித்தமே காக

1 1 1
தொம்முல கர்மமுலிவி தோய வச்சுனா ? (3)

அந்நியர்களுக்குத் தொண்டு செய்வதும் அவர்களுக்கு யாசிப்பதும் அவர்களைப் புகழ்வதும் போன்ற இழிசெயல்கள் கூடாது என்று அன்னமையா இப்பாடலில் கூறுகின்றார்.

ச்சீ! ச்சீ! இந்த மனிதர்களது வாழ்க்கை எவ்வளவு இழிவானது. ஸ்ரீஹரி நீ தான் எங்களை அருட்தன்மையுடன் காப்பாற்றுவாயாக.

காட்டில் ஒரு விலங்காய்ப் பிறந்து காட்டு வாழ்க்கையினைக் கூட வாழலாம். ஆனால் கேவலமான வாழ்க்கைக்காக மற்ற மாணவர்களுக்குத் தொண்டு செய்வது தவறு. எப்பொழுதும் பறவையாகக் கூட வாழலாம். ஆனால், பிறரிடம் யாசிப்பது தவறு.

மாடாகப் பிறந்து துன்பமாகிய வாழ்க்கையினை நடத்தலாம். ஆனால், மற்றவர்களை மிகைப்படுத்தித் துதிக்கின்ற செயலானது தவறு. ஒரு மரமாகப் பிறந்து வாழ்க்கை நடத்தலாம்; ஆனால் மற்றவர்களுக்குத் தீங்கு செய்வது தவறு.

மிகப்பெரிய தர்மம் செய்து அரசனாகப் பிறந்து இந்த உலகை ஆள்வது எளிது. ஆனால் ஸ்ரீஹரிக்கு அடிமை புரிந்து அதன்படி நடப்பது கடினமானது. ஆகையால் வேங்கடவா! நீ உன்னுடைய எண்ணம் போல் எங்களைக் காப்பாற்றுவாயாக. வெள்ளம் போல் எங்களைத் தாக்க வரும் பாவங்களை எங்களால் நீக்க இயலாது.

# கீர்த்தனை - 26

## *ராகம் : நாட்டா*

1 13 3 1 13 1
தனகேட சதுவுலு தனகேட ஸாஸ்திராலு

3 4
மனஸு சஞ்சல புத்தி மாநினா ? (பல்லவி)

3 3 3 3
ஜட்டு மானவுடு சதுவ சதுவ நாஸ

3 3 1 3
வட்டி வாருகாக வதலீனா ?

3 3 1 1 1 1 3 1 3
குட்டி குக்க ஸந்தகு போயி திரிகினா

3 3 1 1 1 1 3 1
துட்டு பெட்டே காக தொரகீனா ? (1)

3 3 1 3 1 31 1
தேவதூஷகுடை திரிகேடி வானிகி

தேவதாந்தரமு தெலிஸீனா ?

1 1 1 3 3 1
ஸ்ரீவேங்கடேஸ்வரு ஸேவா பருடு காக

1 1 1 3
பாவன மதியை பரகீனா ? (2)

அறிவில்லாதவன் எவ்வளவு படித்தாலும் அவனை ஆசையானது விடாது என்ற கருத்தினை அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகிறார்.

அறிவற்றவன் எவ்வளவு சாஸ்திரங்கள் கற்றாலும் எவ்வளவு படித்தாலும் அவனது மனதிலிருந்து சஞ்சலம் அகலாது.

ஒரு மூடன் எவ்வளவு தான் படித்தாலும் அவனுக்குப் பேராசையானது அதிகரித்துக் கொண்டே தான் இருக்குமே தவிர, அவனை விட்டு நீங்காது. குருட்டு நாய் சாப்பிட வேண்டும் என்று சந்தையில் அலைந்தாலும் அதற்கு அடியைத் தவிர உண்ணுவதற்கு எதுவும் கிடைக்காதல்லவா ?

இந்தக் கடவுள் அந்தக் கடவுள் என்று வேறுபாடில்லாத எல்லாக் கடவுளையும் தூற்றிக் கொண்டிருப்பவன் அக்கடவுளர்களின் சிறப்பினை அறியமாட்டான். தேவர்களிலே சிறந்தவரான தேவாதி தேவனான திருவேங்கடவனுக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்ற எண்ணம் இல்லாதவன் சிறந்தவனாக மாட்டான்.

# கீர்த்தனை - 27

## *ராகம் : பைரவி*

3 31 3 1 1 1 3
ஸடி பெட்டே கட கடா ஸம்ஸாரமு கூட
34 1 1
ஜடதி லோபலி ஈத ஸம்ஸாரமு (பல்லவி)

3 3 1 3
ஜமு நோரிலோ ப்ரதுகு ஸம்ஸாரமு, கூட
3 3
சமுரு தீஸின திவ்வே ஸம்ஸாரமு
3 3 3
ஸமயிஞ்சு பெனு தெவுலு ஸம்ஸாரமு, கூட
3 1
ஸமரம்புலொ நுணிகி ஸம்ஸாரமு (1)

3 311 1 3 3
ஸந்தி கட்டின தாடு ஸம்ஸாரமு, கூட
3 1 1 1
ஸந்தி கந்தல த்ரொவ ஸம்ஸாரமு
3
சந்துருனி ஜீவனமு ஸம்ஸாரமு, கூட
3 3
சந்தமே வலெ நுண்டு ஸம்ஸாரமு (2)

1 3 3
சலுவ லோபலி வேடி ஸம்ஸாரமு, கூட
1 1 3 3
ஜலபூத பங்காரு ஸம்ஸாரமு
1 1 3 1
இலலோன திருவேங்கடேஸ நீ தாஸலகு
1 33
சலுவலகு கடு சலுவ ஸம்ஸாரமு (3)

இல்லறவாழ்க்கைத் துன்பம் கொடுக்கக் கூடியது. ஆனால், கடவுளுக்குத் தொண்டு செய்பவர்களுக்கு மட்டும் இல்லற வாழ்க்கையில் துன்பம் கிடையாது என்ற கருத்தினை அன்னமையா இப்பாடலில் புலப்படுத்துகிறார்.

இல்லறமானது மிகவும் துன்பந்தரக்கூடியது. எண்ணிப்பார்த்தால் இது பரந்த கடலில் நீந்துவதைப் போன்றது.

இந்த இல்லறமானது எமனின் வாயில் வாழ்க்கை நடத்துவது போன்றது. இல்லறம் என்பது எண்ணெய் வற்றிய விளக்கு போன்றது. இந்த இல்லறமானது நம்மைக் கொல்லக் கூடிய கொடிய வியாதி போன்றது. இல்லறம் என்பது போர்க்களத்தில் இருப்பதைப் போன்றது.

இந்த இல்லறமானது அசையாமல் கட்டிப் போடுகின்ற கயிறு போன்றது. இந்த வாழ்க்கையானது கரடு முரடான பாதையில் செல்லும் பயணம் போன்றது. இது சந்திரனின் வாழ்க்கை போன்றது. ஏற்றத்தாழ்வினைக் கொண்டது.

இல்லற வாழ்க்கையானது பச்சைக் கற்பூரம் போன்றது. எப்படியிருந்தாலும் ஸ்ரீ வேங்கடமுடையானின் அடியார்களுக்கு மட்டும் இந்த இல்லற வாழ்க்கை மிகக் குளிர்ச்சி வாய்ந்து மிகுந்த இன்பத்தை அளிக்கின்றது. திருவேங்கடவனின் அருளுக்கு ஆட்பட்டவர்கள் இல்லறவாழ்வில் எந்தத் துன்பத்தினையும் அடையமாட்டார்கள் என்பது திண்ணம்.

# கீர்த்தனை - 28

## *ராகம் : தன்யாஸி*

1 3 3 3 2
ஸாமான்யமா பூர்வ ஸங்க்ரஹம்பகு பலமு

3 3 3 1
நேமமுன பெனகொனியே நேடு நீ வனக (பல்லவி)

3 1 1 1 3 4 3
ஜகதி ப்ராணுல கெல்ல ஸம்ஸார பந்தம்பு

1 3 3 4 3 1 1 1
தகுல பந்திஞ்சு துரிதம்பு கர்மமுன

3 3 1 3 1
மகுட மாருகு மாரு மகுவ நீ யுரமுபை

1 3 1 1 3 3 1
தெகி கட்டி ரெவ்வரோ தேவுண்ட வனகா (1)

1 1 4 3 3
பனிலேக ஜீவுலனு பவ ஸாகரம்பூலோ

3 3 3
முனுக லேவக ஜேயு மோஹ தோஷமுன

1 1 4 1 3 3 1 1
பனிபூனி ஜலதிலோ பண்டபெட்டிரி நின்னு

1 3 1 1
வெனகெவ்வரோ மொதலி வேலுபனகா (2)

உண்டநீயக் ஜீவனோபாயமுன மம்மு

1 3 3 3 1 1 3 1 1 2
கொண்டலனு கொபல ததி கொனி த்ரிப்பு பலமு

1 3 1 1 1 1 1 3
கொண்டலனு நெலகொன்ன கோனேட்டி பதிவனக

3 1 1 1
நுண்டவலஸெனு நீகு நோபலேனனகா (3)

தீம் செய்த கர்மபலனை கடவுளானாலும் அனுபவித்தே ஆக வேண்டும் என்று அன்னமையார் நகைச்சுவை இழையோடக் கூறுகின்றார்.

பெருமானே! முற்பிறவியில் செய்த கர்மபலத்தைத் தவிர்க்க யாராலும் இயலாது. தேவாதி தேவனான உன்னைக் கூட ஆட்கொள்ளக் கூடியது.

நீ இந்த உலகத்தில் வாழும் உயிர்கள் அனைத்தையும் இல்லறம் என்ற பாசத்தில் கட்டியணைத்துள்ளாய். இந்தப் பாவகர்மத்தின் விளைவாக உன்னைக் கடவுள் என்று கூட எண்ணாத யாரோ ஒருவர் இந்த இல்லறத்திற்கே காரணமான ஒரு பெண்ணை உன்னுடைய மார்பில் கட்டினார்.

பிறவி என்ற கடலிலே உயிர்களை அழுத்தவும் வெளிப்படுத்தவும் செய்த இந்தப் பாவத்தின் விளைவாக யாரோ ஒருவர் உன்னை முதன்மையான கடவுள் என்று கூட நினைக்காமல் உன்னைக் கடல் மேல் படுக்க வைத்தார்.

நீ எங்களை நிலையான வாழ்க்கை வாழ விடாமல் பிழைப்பிற்காக மலைகளிலும் குகைகளிலும் அலைந்து திரியும்படி செய்தாய். இந்தப் பாவமானது உன்னைத் தொடர்ந்தது. இந்தப் பாவத்திலிருந்து மீள முடியாதபடி திருவேங்கடவன் என்ற பெயரில் அந்த மலையில் உனக்கு நிலையாக இருக்கின்ற நிலை வந்தது.

## கீர்த்தனை - 29

### *ராகம் : ஸங்கராபரணம்*

3 3 3 3
நீவு ஸர்வஸமுட்வு நீவு தேவதேவுட்வு

3 3 1
ஈவல நா குண தோஷா லெஞ்ச நிகு நேலா ? (பல்லவி)

1 1 3 3 3 1 3
பூவுலபை காஸீ பொறி முண்ட்லபை காஸீனி

1
ஆவல வென்னெல கேமி ஹானி வச்சீனா ?

1 1 3 1 1 1
பாவனுல நடுகாசி பாப புஞ்ஜமைன நன்னு

3 3 1 1 1 3 3
காவகா நீ க்ருபகுனு கடமைய்யீனா ? (1)

3 3 1 1 3
கோவு மீத வீஸறி குக்கமீத விஸறீநி

1 1 3 1 1 1 1
பாவனபு காலிகினி பாபமண்டீனா ?

3 1 3 3 1
தேவதல ரட்சிஞ்சி தீனுடனைன நாகு

3 1 1 3
தோவ சூபி ரட்சிஞ்சிதே தோஸமய்யீனா ? (2)

1 1 3 1 1 3
குலஜீனி இன்டநுண்டீ குலஹீனுனி இண்ட நுண்டீ

3
இலலோ நெண்டகு நேமி ஹீன மய்யீனா ?

1 1 3
வலஸி ஸ்ரீவேங்கடாத்ரி வரமுலு இச்சி நாலோ

3 1
நிலிசி வரமுலிச்சி நேடு காவவே (3)

அனைவரையும் சரிசமமாகப் பார்க்கக்கூடிய அந்தப் பெருமான் தன்னுடைய குற்றங்களை எண்ணாது காப்பாற்ற வேண்டும் என்று அன்னமையா வேண்டுகோள் விடுக்கிறார்.

பெருமானே! நீ எல்லா இடங்களிலும் எல்லாரையும் சரிசமமாகப் பார்க்கக்கூடிய தன்மை உடையவன். இவ்வாறு இருக்கும்போது என்னுடைய மேன்மையையும் தவற்றினையும், நீ ஆராய்வது எங்ஙனம் சரியாக இருக்கமுடியும்?

நிலவின் ஒளி பூவின் மேலும் விழுகிறது, முள்ளின் மீதும் விழுகிறது. இதனால் நிலவிற்கு என்ன குறை வந்தது? பெருமானே! உன்னுடைய அருளானது நல்லவர்களைக் காப்பாற்றுகிறது. நான் அறியாமல் நிறையப் பாவங்களைச் செய்துள்ளேன்; அப்படிப்பட்ட என்னைக் காப்பாற்றுவதால் உன் அருளுக்கு என்ன குறை நேரிடும்?

புனிதமான காற்று பசு மேலும் வீசுகிறது; நாய் மேலும் வீசுகிறது. நாயின் மேல் வீசியதால் அந்தக் காற்றுக்கு பாவம் ஏதேனும் நேர்ந்ததா? பெருமானே! நீ தேவர்களைக் காப்பாற்றினாய். ஆதரவற்றவனாகிய என்னை நல்வழி காட்டி காப்பாற்றினால் உனக்குப் பாவம் நேர்ந்திடுமா?

உயர்குடியில் பிறந்தவனது வீட்டிலும் சூரிய ஒளி விழுகிறது. தாழ்ந்த குலத்தில் பிறந்தவனது வீட்டிலும் சூரியஒளி விழுகிறது. அதனால் சூரிய ஒளிக்கு ஏதேனும் இழிவு வந்ததா? பெருமானே! நீ திருவேங்கடமலையில் அமர்ந்து எண்ணற்ற பக்தர்களுக்கு வரங்களை அள்ளித்தந்தாய். என் மேலும் அருளினைச் செய்து என்னையும் காப்பாயாக.

# கீர்த்தனை - 30

## *ராகம் : ஸாமந்தம்*

1 1 3 1 1 3
ஊரகைதே நின்னு கான மொக காரணான கானி

1 1 1 3
பூரி ஜீவுலமு நீவு புருஷோத்தமுடவு (பல்லவி)

4 3 1 1 1 3 1 1
அஸுரலு புவி புட்டு டதி உபகாரமே

3 4 1
அஸுரலு பாதிந்து ரமருலனு

1 3 1 3 1 1
பொஸக வாரிகி கானு பூனுக வச்சி நீவு

4 1 3 3 3
வசுத ஜனிஞ்சி தேனு வடி நின்னு கந்துமு (1)

அட்ரி தர்மமு செடி யதர்ம மைனா மேலு

3 3 1 1
வெடகு முனுலு வின்னவிந்துரு நீகு

3 4 4 3 1 1 3
தடவி தர்மமு நில்ப தரணி புட்டுது நீவு

3 3 3 3 1 3 1 3
படி நின்னு ஸேவிஞ்சி ப்ரதுகுது மபுடே (2)

நீ க்ண்டே மாகு ஜுட நீ தாஸுலே மேலு

1 1 1 3 1 3
பைகொனி வாருன்னா சோட பாய குந்துவு

1 1 1 3 1
சேகொனி ஸ்ரீவேங்கடேஸ செப்பகானே வாரிசேதா

1 2 3 1
நீ கதலு வினி வினி நே மீடேரிதிமி (3)

தர்மம் அழியும் நேரத்தில் தீயவர்களை அழிப்பதற்காகப் பகவான் அவதரிப்பார் என்ற பகவத்கீதையின் கருத்தினை அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகிறார்.

பெருமானே! ஏதாவது ஒரு காரணத்தைக் கொண்டே நாங்கள் உன்னைப் பார்க்க முடியும். நாங்கள் துரும்பினைப் போல ஜீவாத்மாக்கள். நீயோ உலகமெல்லாம் பரவியிருக்கின்ற பரம்பொருள்.

இந்த உலகில் அரக்கர்கள் பிறவி எடுப்பது நல்லது. ஏனென்றால், அவர்கள் தேவர்களை துன்புறுத்துவார்கள். தேவர்களைக் காக்கும்பொருட்டு நீ இவ்வுலகில் அவதரிப்பாய் அப்பொழுது நான் உன்னைக் கண்கூடாகத் தரிசிக்க முடியும்.

தர்மம் அழிந்து அதர்மம் தலைதூக்குவது நல்லதுதான். அந்நிலையில் முனிவர்கள் உன்னை வணங்கி தங்களுடைய துன்பங்களைப் போக்க வேண்டும் என்று உன்னை வேண்டுவர். அப்போது அதர்மத்தைப் போக்கி தர்மத்தை நிலைநாட்டுவதற்காக நீ இவ்வுலகில் பிறப்பெடுப்பாய். அப்போது நான் உனக்கு தொண்டு செய்து முக்தியடைவேன்.

உன்னைக் காட்டிலும் உன் தொண்டர்கள் சிறந்தவர்களாக இருக்கிறார்கள். ஏனென்றால் அவர்கள் இருக்கின்ற இடத்தில் அவர்களுடன் நீ இருக்கின்றாய். திருவேங்கடமுடையானே! அவர்கள் உன்னுடைய மகிமையை விளக்கும் கதையினைக் கூறுவதால் அதனைக் கேட்டு நாங்கள் முக்தியடைகிறோம்.

## கீர்த்தனை - 31

### *ராகம் : ஸ்ரீராகம்*

அதிவோ அல்லதிவோ ஹரிவாஸமு
பதிவேல ஸேஷுல படகல மயமு (பல்லவி)

அதெ வேங்கடாசலா மகிலோன்னதமு
அதிவோ பிரம்ஹாதுல கபுரூபமு
அதிவோ நித்யநிவாஸ மகில முனுலகுனு
நதே சூடு டதே ம்ரொக்கு டானந்த மயமு (1)

செங்கட நல்லதிவோ ஸேஷாசலமு
நீங்கி னுன்ன தேவதல நிஜவாஸமு
முங்கிட நல்லதிவோ மூல நுன்ன தனமு
பங்காரு ஸிகரால பஹுு பிரம்ஹ மயமு (2)

கைவல்ய பதமு வேங்கட நக மதிவோ
ஸ்ரீவேங்கடபதிகி ஸிறுலைநதி
பாவிம்ப ஸகல ஸம்பதல ரூப மதிவோ
பாவனமுல கெல்ல பாவன மயமு (3)

இப்பாடலில் அன்னமையா திருவேங்கடமலையின் சிறப்பினை வர்ணிக்கின்றார்.

மிக அருகில் இருக்கின்ற திருமலையில் தான் ஸ்ரீஹரி குடிகொண்டிருக்கிறார். இத்திருமலை ஆதிசேடனின் பத்தாயிரம் தலையாலே உருவெடுத்துள்ளது.

திருவேங்கடமலை மிக உயர்ந்தது. பிரம்மா போன்ற தேவர்களாலும் எளிமையாகப் பார்க்க முடியாத ஓர் அரிய மலை. முனிவர்கள் அனைவரும் இம்மலையில் தான் தவம் செய்கிறார்கள். அந்த மலையைப் பாருங்கள். அதனை வணங்குங்கள். அது உங்களைக் களிப்படையச் செய்யும்.

திருமலையின் அருகில் இருப்பதுதான் சேஷாச்சலம். வானத்தில் உள்ள தேவர்கள் அனைவரும் இங்கு குடிகொண்டுள்ளனர். நாம் சேர்த்து வைத்த செல்வங்கள் அனைத்தும் இத்திருமலையின் முன் குடிகொண்டிருக்கின்றன. மலையின் சிகரம் பொன்னால் செய்யப்பட்டது போன்று அழகாகக் காட்சியளிக்கின்றது.

திருமலை மோட்சத்தை அளிக்கக்கூடிய பரமபதமாய் விளங்குகிறது. நினைத்துப் பார்த்தால் செல்வங்கள் அனைத்தும் உருவமெடுத்தால் எவ்வாறு காட்சியளிக்குமோ அவ்வாறு காட்சியளிக்கின்ற திருவேங்கடமுடையான் இருக்கின்ற இம்மலை புனிதங்கள் அனைத்திற்கும் புனிதமாய்த் திகழ்கிறது.

## கீர்த்தனை - 32

*ராகம் : வராளி*

1 3 3 3 1 1 4 1 1 3
புடமி நிந்தரி பட்டெ பூதமு கடு

1 3 4 1
பொடவைன நல்லனி பூதமு (பல்லவி)

3 3 4 1
கினிஸி ஒட மிங்கெடி பூதமு

1 1 1 3 4 1
புனுக வீபு பெத்த பூதமு

1 1 1 1 1 4 1
கனலி கவியு சீகடி பூதமு

1 3 1 4 1
பொனுகு ஸோமபு மோமு பூதமு (1)

1 1 4 1
சேட காள்ள மிஞ்சின பூதமு

1 1 3 1 3 4 1
போடு தாரல பெத்த பூதமு

3 1 3 3 1 4 1
காடபு ஜடல பிங்கபு பூதமு

3 3 4 1
ஜூடரி நல்ல முஸூகு பூதமு (2)

1 4 1 1 3 1 4 1
கெலஸி பித்தலே திரிகேடி பூதமு

1 1 3 1 1 3 4 1
பொலுபு தான்ட்ல பெத்த பூதமு

3 1 1 1 3 1 3 1
பலுபு வேங்கடகிரி பை பூதமு

1 3 3 4 1
புலுகு மீதி மஹா பூதமு (3)

பெருமானை ஒரு பெரிய பூதமாகக் கருதி வர்ணிக்கின்ற அதே சமயத்தில் அவருடைய தசாவதாரங்களையும் இப்பாடலில் அன்னமையா புகழ்கின்றார்.

இது ஒரு உயர்ந்த பெரிய கருமை நிறமுடைய பூதம். இந்த உலகில் வேறுபாடு இல்லாமல் அனைவரையும் இது பிடித்திருக்கிறது.

இப்பூதம் கோபத்தினால் பெரிய ஓடத்தை அப்படியே விழுங்கி விடும் தன்மை கொண்டது (மச்சாவதாரம்). இந்த பூதத்தின் முதுகில் எலும்பால் செய்யப்பட்ட ஓடு இருக்கிறது (கூர்மாவதாரம்). இருளைப் போன்ற கரிய நிறைமுடைய இப்பூதம் அனைவரின் மேலும் பாய்கின்ற தன்மையினைக் கொண்டுள்ளது (வராஹ அவதாரம்). இந்தப் பூதமானது தீப்பொறி போன்ற கண்களையும் அஞ்சத்தக்க முகத்தினையும் கொண்டது (நரசிம்மவதாரம்).

முறத்தினைப் போன்ற நீளமான கால்களையும் கொண்டுள்ளது இப்பூதம் (வாமன அவதாரம்). இது போரில் சிறந்ததாக விளங்கியது (பரசுராமவதாரம்). அகன்ற சடையினைக் கொண்டது இந்தப்பூதம் (இராமவதாரம்). இந்தப்பூதம் கருமையான நிறத்தில் ஆடை அணிந்துள்ளது (பலராம அவதாரம்).

இந்தப்பூதம் ஆடையில்லாமல் இஷ்டம்போல் அலைந்து கொண்டிருக்கிறது (புத்தாவதாரம்). இந்தப் பூதம் அங்கும் இங்கும் குதிக்கின்ற தன்மை கொண்டது (கல்கியவதாரம்). ஒரு பெரிய பறவையின் மேல் (கருடன்) பறக்கும் இப்பூதம் திருவேங்கடமலையின் மேல் குடிகொண்டிருக்கிறது.

# கீர்த்தனை - 33

## *ராகம் : தேசாளம்*

4 3 1 1
தரணி நெந்த ரென்னி தப்முலு சேஸினானு

1 1 3 1 1 3
ஹரி க்ருப கலவாடே அன்னிடா பூஜ்யுடு (பல்லவி)

1 1 3 1
மிதிலேனி வித்து லென்னி மேதினிபை ஜல்லினானு

1 1 1 1 1 3 3 3
ததிதோ வித்தினவே தக பண்டுனு

1 1 1 3 3 3
இதர காந்தலு மறியெந்தரு கலிகினானு

1 1 3 1 1 3
பதி மன்னிஞ்சினதே பட்டபு தேவுலு (1)

1 1 3 1 1 3 3 1
பாலுபடி நறுலென்னி பாட்ல படி கொலசினா

1 1 3 1 3 3 1
நேலிக சேபட்டின வாடே யெக்குடு பண்டு

1 4 3 4
மூல நெந்தா தனமுன்னா முஞ்சி தான தர்மமுலு

1 1 3 3 1
தாலிமிதோ நிச்சினதே தாபுறமை நில்சுனு (2)

1 1 3 3 1 3 3 3
என்னிகசு கொடுகுலு எந்தரு கலிகினானு

1 4 1 3 3
இன்னிடா தர்மபருடே ஈடேருனு

1 1 3 3 1 1
உன்னதி சதுவுலெண்ணி உண்டினா ஸ்ரீவேங்கடேஸு

1 1 1 2
ஸன்னுதிஞ்சின மந்த்ரமே ஸதமை பலிஞ்சினு (3)

யார் எந்த முயற்சி செய்தாலும் ஸ்ரீஹரியினுடைய அருளுக்கு யார் உட்பட்டிருக்கிறார்களோ அவர்கள் தான் சிறந்தவர்கள்.

இந்த உலகினிலே பலர் பலவிதமான தவங்களைச் செய்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் அனைவருமே ஏற்றுக்கொள்ளப்படமாட்டார்கள். திருவேங்கடமலையானின் அருளினைப் பெறுகின்றவர்கள் மட்டும்தான் எல்லா இடங்களிலும் உயர்ந்தவர்களாகக் கருதப்படுவார்கள்.

பருவம் தவறி எத்தனை விதை விதைத்தாலும் முளைப்பதில்லை. பருவத்தில் விதைப்பது தான் நல்ல பலனை அளிக்கும். ஒரு ராஜாவிற்கு எத்தனைப் பெண்கள் இருந்தாலும் அவரால் சிறப்பிக்கப்படுபவர் பட்டத்துராணி மட்டுமே.

ஒரு அரசனுக்குப் பணியாட்கள் பலர் இருந்தாலும் அவர்கள் அனைவரும் முதன்மையான தொண்டர்களாக ஆக முடியாது. யார் ஒருவன் அரசனின் நம்பிக்கைக்கு உட்படுகிறானோ அவனே முதன்மையானவனாகக் கருதப்படுவான். ஒருவன் வீட்டில் மிகுதியான செல்வங்கள் இருந்தாலும் அது அவனுக்குத் துணையாக இருக்காது. ஒருவன் அன்போடு வழங்கிய செல்வம் தான் அவனுக்கு மறுபிறவியில் துணையாக நிற்கும்.

ஒருவனுக்குப் பிள்ளைகள் பல இருந்தாலும் அவர்கள் அனைவருமே முக்தியடையமாட்டார்கள். எவன் ஒருவன் தர்ம மார்க்கத்தில் செல்கின்றானோ அவன்தான் முக்தியடைந்து தன் பெற்றோரையும் முக்தியடையச் செய்கிறான். இந்த உலகில் எத்தனை வகையான கல்வியிருந்தாலும் அக்கல்வியினால் பலன் ஏதும் இல்லை. திருவேங்கடமுடையானத் துதிக்கின்ற அந்த மந்திரமே நிலையான கல்வியாக அமைந்து நமக்கு வேண்டுகின்ற வரங்களை அளிக்கின்றது.

# கீர்த்தனை - 34

*ராகம் : வராளி*

3 3 3 1 3
ளிகீ நெரகது ஏமிஸேது மதி

3 3 3 2
ஹரி தாஸ்யம் பதியே ஸுகமு (பல்லவி)

1 3 4 4 1 1
வெதல பொரலே கன விபவமு கண்டே

1 1 3 1 3 2
அதி பேதரிக மதி ஸுகமு

3 1 3 1 1
கதி நெரவுல ஸிங்காரமு கண்டெனு

1 3 1 2
ஸதமகு தன நிச்சலமே ஸுகமு (1)

1 3 1 3 1 3 1 1 1
பலு பாமுல படு பகடி கண்டே

1 3 1 2
தெலிஸி நித்ரிஞ்சு ராத்திரி ஸுகமு

1 3 1 1 1
அலமட கடிஞ்சு நம்ருதமு கண்டே

1 1 1 1 1 3 2
கலபாடி தனகு கஞ்ஜே ஸுகமு (2)

1 1 3 3 4 1 1
பரபீட லொஸகு பவமுன கண்டே

4 1 3 3 2
தர பொடமணி சந்தமு ஸுகமு

3 1 1 1 1 1
கரிமல ஸ்ரீவேங்கடபதி நீகே

3 2
ஸரணனியெடி நா ஜன்மமே ஸுகமு (3)

உண்மையான மகிழ்ச்சியானது பெருமானுக்குத் தொண்டு செய்வதில் தான் உள்ளது என்று அன்னமையா இப்பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

திருவேங்கடமுடையானுக்குத் தொண்டு செய்தால் மனம் மகிழ்ச்சியடையும் என்று தெரிந்தும் எனது மனது அதன்படி நடக்கவில்லை. இதற்கு நான் என்ன செய்வது?

பெரிய துன்பங்களுக்கு உள்ளாகிச் சேர்த்த செல்வத்தைக் காட்டிலும் எந்தத் துன்பமும் இல்லாத வறுமையில் இருப்பதுதான் சுகம். பிறரிடம் இரவலாக நகைகளை வாங்கி அலங்கரித்துக் கொண்டு ஆடம்பர வாழ்வினை வாழ்வதைக் காட்டிலும் எதுவும் இல்லாமல் வாழ்கின்ற வாழ்வே சிறந்தது.

மிக்கத் துன்பங்கள் உண்டாகும் பகலைக் காட்டிலும் எந்தத் துன்பமுமில்லாது நிம்மதியாகத் தூங்குகின்ற இரவுதான் சிறந்தது. மிகவும் துன்பப்பட்டுச் சேர்க்கின்ற அமிர்தத்தைக் காட்டிலும் எந்தச் சிரமமுமின்றி கிடைக்கின்ற கஞ்சியே சிறந்தது.

பிறரைத் துன்புறுத்தி நடத்துகின்ற வாழ்வினைக் காட்டிலும் பிறப்பில்லாத வாழ்க்கை தான் சிறந்தது. தேவர்களுக்கெல்லாம் சிறந்தவரான பெருமானே உன்னைச் சரணடைந்த என் வாழ்க்கை தான் மகிழ்ச்சி வாய்ந்தது.

# கீர்த்தனை - 35

3 2 1 1 1
சாலதா ஹரிநாம ஸவுக்யாம்ருதமு தமகு

3 1 3
சாலதா ஹிதவைன சவுலெல்லா நொஸகா (பல்லவி)

3 1 1 1 3
இதியொகடி ஹரிநாம மின்தைன சாலதா

3 1 3 1
செதர கீ ஜன்மமுல செரலு விடிபிஞ்ச

3 1 1 1 3 3
மதி நொகடே ஹரிநாம மந்த்ர மதெ சாலதா

1 3 1 1 1 3
பதிவேல நரக கூபமுல வெடலிஞ்சா (1)

1 3 1 1 1 1 3 3
கலதொகடி ஹரிநாம கனகாத்ரி சாலதா

1 3 3 3 3 3
தொலகுமனி தாரித்ரய தோஷம்பூ செருச

1 1 1 3 1 3 3
தெலிவொகடி ஹரிநாம தீப மதி சாலதா

1 3 1 2 1 1 3 3
கலுஷம்பு கடின சீகடி பார த்ரோலா (2)

1 3 1 1 1 1 1 1 3
தகு வேங்கடேஸ கீர்த்தன மொகடி சாலதா

3 1 1 4 3 3
ஜகமுலோ கல்ப பூஜம்பு வலெ நுண்ட

3 4 3 1 3
ஸொகஸி ஈ விபுனி தாஸுல கருண சாலதா

3 1 1 1 3 1
நகவு சூபுனு நுன்னத மெபுடு சூப (3)

பெருமானின் திருநாமங்களை உச்சரிப்பதினால் கிடைக்கும் பலன்களை அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகிறார்.

பெருமானின் திருநாமம் என்ற அமிர்தம் ஒன்றே கிடைத்தால் அதுவே போதுமல்லவா? அது ஒன்றே நமக்கு அனைத்துச் செல்வங்களையும் அளிக்கின்றது.

ஸ்ரீஹரியினுடைய திருநாமம் ஒன்றே போதுமானது. அதுவே பிறவி என்ற பந்தத்தை நீக்கக் கூடியது. பத்தாயிரம் நரகத்திலிருந்து நம்மை வெளியேற்ற ஸ்ரீஹரியின் திருநாமம் ஒன்றே போதுமல்லவா?

நம்மைத் துன்பத்திற்குள்ளாக்கும் வறுமையை நீக்குவதற்கு ஸ்ரீஹரியின் பொன்மலை போன்ற திருநாமம் ஒன்றே போதுமல்லவா? எங்கும் பரவியிருக்கும் பாவம் என்ற இருளை நீக்குவதற்கு ஸ்ரீஹரியின் திருநாமமாகிய விளக்கு ஒன்றே போதுமல்லவா?

பெருமானே! உன்னுடைய கீர்த்தனை ஒன்றே போதுமல்லவா?

இவ்வுலகில் கற்பகவிருட்சம் போன்ற உன்னுடைய திருநாமம் ஒன்றே போதுமல்லவா. நாங்கள் பரம்பொருளை அடைவதற்கு உன்னுடைய அடியார்களின் அருள் ஒன்றே போதுமல்லவா?

# கீர்த்தனை - 36

## *ராகம் : பௌளி*

3 1 1 1 1 3
மா துரிதமுலு வாபி மம்மு காசு டருதா
3 3 1 1
ஸ்ரீதேவி ரமனுட ஸ்ரீவேங்கடேஸா (பல்லவி)

1 3 3 1
அம்பரீஷு பைகொன்னா ஆபதலன்னியு பாபி
3 3 3
வெம்படி காசே நீ பெனுசக்கரமு
3 4 3 1
அம்பரான நுன்ன துருவு நஞான மெல்ல பாபே
1 3 1 1
பம்பி நீ சேத நுன்ன பாஞ்சஜன்யமு (1)

பக்கனு ஜராஸந்து பலமெல்லா நுக்காடி
1 4 1 3 3
நிக்கமு மதுர நில்பே நீசே கதா
3 1 1 1 3 1 3 3
தொக்கி ஹிரண்ய கஸிபு துனிமி பிரஹலாது காசே
1 1 1 2 3
நிக்கி நிக்கி மெரஸே நீ கட்கமு (2)

3 1 4 3
வெட ராவணுனி ஜம்பி விபீஷணுனிமதி காசே
3 3 1 3 1 3
சிடிமுடி படக நீசே சார்ங்கயமு
3 1 1 1 3 3
யெடமீக ஸ்ரீவேங்கடேஸ நேடு நன்னு காசே
3 3 3 3 1 2 3 3 3
படிபடி நீ நாம படன நேடிதிகோ (3)

இந்தப் பாடலில் அன்னமையா திருவேங்கடவனின் பஞ்ச ஆயுதங்களை போற்றுகின்றார்.

பெருமானே! எங்களுடைய பாவங்களை நீக்கி எங்களைக் காப்பாற்றுவது உனக்கென்ன அரிதான செயலா?

ஆபத்துக் காலத்தில் வந்த துன்பங்களை நீக்கி அம்பரிஷனைக் காப்பாற்றியது உன்னுடைய சுதர்சனச் சக்கரம். வானத்தில் இருக்கின்ற துருவனின் அறியாமையை நீக்கியது உன் கையில் இருக்கின்ற பாஞ்சசன்யமாகும்.

ஜராசந்தன் போன்ற விரோதிகளைக் கொன்று மதுரையை மீட்டது உன்னுடைய கதை. இரண்யனை வதம் செய்து பிரகலாதனைக் காப்பாற்றியது நந்தகம் என்ற வாள்.

கொடும் அரக்கனான இராவணனைக் கொன்று விபீடனைக் காப்பாற்றியது சாங்கியம் என்ற வில். இத்தகு பெருமை பொருந்திய திருவேங்கடவா! உன்னுடைய திருநாமம் ஒன்று தான் என்னை இன்று காப்பாற்றுகிறது.

# கீர்த்தனை - 37

*ராகம் : பாடி*

3 3 1 3 3
இந்து நுண்ட மீ கெடயே லேது

3 3 1
ஸந்தடி ஸேயக சணரோ மீரு (பல்லவி)

1 3 3
நாலுக ஸ்ரீஹரி நாமம் புன்னதி

1 3 3 1
தூலுசு பாரரோ துரிதமுலு

4 3 1 3 3
சாலி புஜம்புன சக்ரம் புன்னதி

1 4 3 4 1 3
தாலிமி பவபந்தமு லடு தலரோ (1)

1 3 3
அந்தர்யாமை ஹரி உன்னாடிதே

1 1
சிந்தலு வாயரோ சித்தமுனா

1 1 2
விந்தல செவுலனு விஷ்ணு கத லிவிகோ

1 1 1 1
பொந்த கர்மமுலு போரோ மீறு (2)

1 1 1 1 1 1 1
காபை ஸ்ரீவேங்கடபதி பேரிதே

1 3
நாபை நுன்னதி நயமுனனு

1 1 1 1 3 3
கோபபு காமாதி குணமுலாரா மீ

1 1 3 3 3 3 3
ரேபுனா கடகட நெந்தைன போரோ (3)

இப்பாடலில் வேங்கடமுடையானின் திருநாமங்களை அன்னமையா போற்றுகின்றார்.

பாவங்களே, இங்கு இருப்பதற்கு உங்களுக்கு இடம் இல்லை. நீங்கள் என்னை விட்டுப் போய்விடுங்கள்.

என் நாக்கில் ஸ்ரீஹரியின் திருநாமம் ஒட்டிக் கொண்டிருக்கிறது. ஆகையால் பாவங்களே என்னை விட்டு விலகுங்கள். என்னுடைய தோள்களின் மேல் சக்கரம் உள்ளதால் பிறப்பு என்ற பந்தமே என்னை விட்டு விலகுவாயாக.

என் உள்ளத்தில் ஸ்ரீஹரி குடிகொண்டிருக்கிறான். ஆகையால் என்னிடம் உள்ள கவலைகளே போய்விடுங்கள். என்னுடைய காதுகள் எப்பொழுதுமே பெருமானின் கதைகளைக் கேட்டுக்கொண்டிருக்கின்றன. ஆகையால் பாவங்களே என்னை விட்டு விலகிச் செல்லுங்கள்.

என்னைக் காக்கத் திருவேங்கடமுடையானின் திருநாமத்தை என்னுடனே வைத்துக் கொண்டிருக்கிறேன். ஆகையால் கோபம், காமம் போன்ற தீய குணங்களே என்னிடமிருந்து விலகி எங்காவது சென்று விடுங்கள்.

# கீர்த்தனை - 38

## *ராகம் : ஸங்கராபரணம்*

1 1 3 3
இன்னி சேதலுனு தேவுடிச்சினவே

3 1
உன்ன வாரீ ஈவுலெல்ல நொத்தி கய்யீனா ? (பல்லவி)

1 3 1 3 1 3 3 1 3 3 1
தெகனி யாபதலகு தேவுடே கலடு காக

3 3 3
வகலுடுவ பருல வஸமய்யீனா ?

3 1 1
நொகிலி இதருலகு நோள்ளு தெரசினா

3 3 3 1 3 3
நகுபாடே காக மாநக பொய்யீனா ? (1)

3 3 1 1 3 1
அக்கலபு துரிதாலு ஹரியே மானுபு காக

3 1 1 1 3
பக்கன நொக்கரு வச்சி பாப பொய்யீரா ?

1 3 3 1
தக்கு முக்கு லைன வேள தலசின வாரெல்ல

3 3 1 3 1 1
ஸிக்கு பாடே காக தம்மு சேரவச்சேரா ? (2)

1 1 1 3 3 1
எட்டு ஸேஸினனு வேங்கடேஸுடே நேருசு காக

1 1 3 3
கட்ட கட வாரெல்ல கருணிஞ்சேரா ?

1 3 3 1 3 3 3 1
இட்டே ஏமடிகின நீதடே யொஸகு காக

1 3 3
உட்டி படி எவ்வரைனா நூரடிஞ்சேரா ? (3)

நமக்கு வரக்கூடிய துன்பங்களைப் போக்கவல்லவர் பெருமான் ஒருவர் மட்டுந்தான், அவரைத் தவிர வேறொருவர் இல்லை என்ற கருத்தினை அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகின்றார்.

நாம் அனுபவித்துக் கொண்டிருக்கும் பொருள்கள் அனைத்தும் பெருமான் கொடுத்தது தான். பணம் படைத்தவர்களின் செல்வம் நீண்ட நாள் நமக்குப் பயன்படுமா ?

மற்றவர்களால் நமது துன்பத்தைப் போக்க முடியுமா ? இடையின்றி வரும் துன்பங்களைப் பெருமாள் ஒருவரால்தான் போக்க முடியும். மற்றவர்களிடம் சென்று நாம் யாசித்தால் நம்மை ஏளனமாகப் பேசுவார்கள். இதைத் தவிர வேறென்ன செய்வார்கள் ?

நமக்குத் துன்பம் வருகின்ற காலத்தில் ஸ்ரீஹரிதான் துன்பத்தைப் போக்குவாரே தவிர மற்றவர்கள் அதனைப் போக்குவார்களா ? நாம் வறுமையில் இருக்கும்போது அவமானம் அடைந்தால் உறவினர்களா வந்து நமக்கு உதவுவார்கள் ?

எதைச் செய்தாலும் அதைத் திருவேங்கடமுடையானால் மட்டுந்தான் செய்ய முடியும். அதை மற்றவர்கள் அன்புடன் செய்வார்களா ? எதைக் கேட்டாலும் பெருமான் தான் நமக்குக் கொடுப்பாரே தவிர மற்றவர்கள் அதை நமக்கு அன்புடன் கொடுப்பார்களா ?

# கீர்த்தனை - 39

## *ராகம் : ஸ்ரீராகம்*

3 1 3 3 3
ஈ விஸ்வாஸம்பு யெவ்வரிகி தோப திதி

1 4
பாவனுல ஹ்ருதயமுனா பிரபவிஞ்சுனு கானி **(பல்லவி)**

1 1 3 1
இம்மைன பாபம்பு லென்னி வலஸின ப்ராணி

1 3
ஸம்மதம்புன ஜேய ஜாலு காகேமி

1 1 1 3 3 3 1 1 3
கும்மரிகி நொக யேடு குதிய கொக நாடவுனு

1 3 1
நம்மி தலசின விஷ்ணு நாமம்பு சேதா **(1)**

1 3 3 1
கொதலேனி துரிதமுலு கொண்டலுனு கோட்லுனு

3 1 3 2 3 1
செதர கெப்புடு ப்ராணி ஜேயு காகேமி

1 3 3 1 1
பொதரி கொரியல லோனி புலி சொச்சி நட்லேனு

3 3 3 3 1 1
ஹ்ரதயம்பு ஹரி மீத நுண்டி நந்தடனு **(2)**

ஸரிலேனி துஷ்கர்ம ஸங்கமுலு ராஸுலை

1 3 1 1 3 1
பெருக ஜேயுசு ப்ராணி பெஞ்சு காகேமி

3 1 3 3 1 3 3 13 1
பெரஸி கொண்டல மீத பிடுகு பட்டட்லேனு

1 1 1 4 1 3
திருவேங்கடாசலாதிபுனி தலசினனு **(3)**

எத்தனைப் பாவங்கள் செய்தாலும் ஸ்ரீஹரி கைவிடாமல் நம்மைக் காப்பாற்றுவார் என்ற நம்பிக்கையை இப்பாடலின் மூலமாக அன்னமையா குறிப்பிடுகின்றார்.

யார் நற்செயல்கள் செய்கிறார்களோ அவர்கள் இதயத்தில் மட்டுந்தான் கடவுள் பற்றிய நம்பிக்கை உண்டாகும். மற்றவர்களுக்கு நம்பிக்கை உண்டாகாது.

எத்தனைப் பாவங்கள் செய்தால் என்ன ? ஒரு வருடம் குயவன் செய்த பானைகளை ஒரே நொடியில் ஒரு தடி உடைப்பதைப் போல மனிதன் செய்த பாவங்கள் அனைத்தையும் விஷ்ணுவின் திருநாமம் ஒன்றே ஒரே நொடியில் அழித்து விடும்.

செம்மறிக் கூட்டத்தின் மீது புலி பாய்ந்தால் எப்படி செம்மறிகள் சிதறி ஓடுமோ அதைப்போல நமக்கு மலை போன்றுத் தீங்குகள் வந்தாலும் நமது இதயத்தில் ஸ்ரீஹரியின் நாமத்தை நினைத்தால் தீங்குகள் எல்லாம் பறந்தோடிவிடும்.

மலையின் மீது இடி விழுந்தால் எப்படி மலையானது சிதறுமோ அதுபோல நாம் மலைபோல் சேர்த்து வைத்த கெட்ட செயல்கள் எல்லாம் திருவேங்கடமுடையானை நினைத்தாலே சிதறிப் போகும்.

## கீர்த்தனை - 40

2
### ராகம் : முகாரி

3 1 3
நது லொல்லவு நா ஸ்னானமு கடு

3 1
ஸதரமு நாகீ ஸ்நானமு (பல்லவி)

1 3
இருவங்கல நீ யேசின முத்ரலு

4 1
தரியிஞ்சுடே நா ஸ்னானமு

4 1 3 3
தரபை நீ நிஜ தாஸுல தாஸுல

4
சரண தூளி நா ஸ்னானமு (1)

1 3
தலபு லோன நினு தலசின வாரல

3 1
தலசுடே நா ஸ்னானமு

3 3 1 3
வலனுக நினு கனுவாரல ஸ்ரீபாத

ஜலமுலே நா ஸ்னானமு (2)

1 4 3 1 1 3 3
பரம பாகவத பாதம்புஜமுல

3
தரிஸனமே நா ஸ்நானமு

1 1 1 3 3 1 2
திருவேங்கட கிரி தேவா நீ கதா

ஸ்மரணமே நா ஸ்னானமு (3)

பெருமாளுடைய அடியார்களின் அடியார்களுக்குத் தொண்டு செய்வது தான் சிறந்தது என்ற கருத்தினை அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகின்றார்.

நதிகளிலே ஸ்நானம் செய்வதை நான் விரும்பவில்லை. எனக்குப் பிடித்த ஸ்நானம் வேறொன்று இருக்கின்றது.

இரண்டு தோள்களிலும் சங்குச் சக்கரங்களை அணிந்து கொள்வது தான் என்னுடைய ஸ்நானம். இந்த உலகில் அடியார்களுக்கு அடியார்களினுடைய அடிப்பொடியை வணங்குவது தான் என்னுடைய ஸ்நானம்.

திருவேங்கடா! யார் உன்னை உள்ளத்தில் நினைக்கின்றார்களோ அவர்களை நினைப்பது தான் என்னுடைய ஸ்நானம். யார் உன்னைத் தரிசிக்கிறார்களோ அவர்களுடைய பாதத் தீர்த்தமே என்னுடைய ஸ்நானம்.

சிறந்த பாகவதர்களுடைய திருவடிகளை வணங்குவதுதான் என்னுடைய ஸ்நானம். திருவேங்கடமுடையானே உன் பெருமையைக் கூறும் கதைகளை நினைப்பது தான் என்னுடைய ஸ்நானம்.

## கீர்த்தனை - 41

### *ராகம் : தேஸாட்சி*

நின்னு த்லசி நீ பேரு த்லசி

3 1

நன்னு கருணிஞ்சிதே நெந்னிகா காக (பல்லவி)

4 1 3 1 1 3

அதிகுனி காசு டே மருது, நன்னு

4 3 1 3 3 1 1

நதமுனி காசுட யருதுகாக, நீகு

4 1 3 4 3

மதுரமௌ டே மருது மதுரமு, சேது

4 1 3 3 1

மதுரமௌடே மஹிலோ நறுதுகாக (1)

4 3 3 3 3 1

அனகுனி கருணிம்ப நறுது காது நீகு

4 1 1 3 1 3 3 1

கனபாபுனி நன்னு காசுட அருது காக

1 1 1 1 1

கனகமு கனகமு கானேலா, இனுமு

1 1 1 1 3 3 3 1

கனகமௌடே கடு நறுது காக (2)

1 4 1 1 1 1 3 1

நெல கொன்னா பீதிதோ நின்னு ஜெனகிதி காக

1 1 2 3

தல கொன்ன சுகினை தலசனேலா, நின்னு

1 3 1

யெலமிதோ திருவேங்களேஸூடா நாபால

3 3 1 1 3 3 1 3 1

கலிகி நீ க்ருப கலுக ஜேதுவு காக (3)

புண்ணியம் செய்தவர்களைக் காப்பாற்றுவதை விடப் பாவம் செய்பவர்களையும் காப்பாற்றுவதுதான் திருவேங்கடமுடையானின் சிறப்பாகும் என்பதை அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகின்றார்.

திருவேங்கடவா! உன்னை நினைத்து உன் திருநாமங்களை நினைத்த எனக்கு அருள் புரிவதுதான் பொருந்துமே தவிர புண்ணியம் செய்பவர்களை நீ காப்பாற்றுவதில் என்ன அதிசயம் இருக்கிறது?

இவ்வுலகில் சுவையான பொருள் சுவையாக இருப்பதில் வியப்பில்லை. ஆனால், கசப்புத்தன்மை உள்ள பொருள் இனிப்பாக மாறுவதுதான் வியப்பு. இப்படி இருக்கையில் கீழ்த்தரமானவனான என்னைக் காப்பாற்றுவதுதான் அதிசயமே தவிர திருவேங்கடவனான நீ உயர்ந்தவர்களைக் காப்பாற்றுவதில் என்ன அதிசயம் இருக்கிறது?

ஒரு பொன் பொன்னாக இருப்பதில் வியப்பில்லை. ஆனால் இரும்பு பொன்னாக மாறுவதுதான் வியப்பு. ஆதலால் புண்ணியம் செய்தவர்களைக் காப்பதில் வியப்பில்லை. பாவங்களை ஒரு மலையாகக் குவித்து வைத்துள்ள என்னைக் காப்பாற்றுவதுதான் வியப்பு.

எனக்கு வந்த துன்பத்தின் பயத்தினால் தான் நான் உன்னை நினைத்தேன். ஆனால் நான் இன்பமாக இருக்கும்பொழுது உன் நினைப்பு எனக்கு எதற்கு? திருவேங்கடமுடையானே நீ எப்போதும் என் அருகில் இருந்து உன்னுடைய அருள் என் மீது படும்படி செய்வாயாக.

# கீர்த்தனை - 42

### *ராகம் : ஸ்ரீராகம்*

1 3 1 3 3 3
ஈ பாதமே கதா இல எல்ல கொலிசினதி

1 3 13 3 1 1 1 3
ஈ பாதமே கதா இந்திரா ஹஸ்தமுல கிதவைநதி (பல்லவி

1 3 1 3 3 1 3 3
ஈ பாதமே கதா இந்தருநு மொக்கெடிதி

1 3 13 3 3 3 3 1 1 3
ஈ பாதமே கதா ஈ ககனகங்க புட்டிநதி

1 3 13 1 1 3 3
ஈ பாதமே கதா யெலமி பெம்பொந்திநதி

1 3 1 3 1 1 1 3 3
ஈ பாதமே கதா இன்னிடிகி நெக்குடைனதி (1)

1 3 13 4 3 3
ஈ பாதமே கதா இபராஜு தலசினதி

1 3 1 3 3 3 3 1 3
ஈ பாதமே கதா இந்த்ராதுலெல்லா வெதகினதி

1 3 1 3 3 1 3 3 3
ஈ பாதமே கதா ஈ பிரம்ஹா கடிகினதி

1 3 1 3 3 3 3 1 3
ஈ பாதமே கதா யெகஸி பிரம்ஹ்றண்ட மண்டிநதி (2)

1 3 1 3 1 3 3 3
ஈ பாதமே கதா இஹபரமு லொஸகெடிதி

1 3 1 3 1 3 1 3
ஈ பாதமே கதா இல நஹல்யகு கோரிகைநதி

1 3 1 3 1 3 4
ஈ பாதமே கதா ஈட்சிம்ப துர்லபமு

1 3 1 3 1 1 3 1 3
ஈ பாதமே கதா ஈ வேங்கடாத்ரிரிபை நிரனவநதி (3)

திருவேங்கடமுடையானின் திருப்பாதத்தின் சிறப்பினை அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகின்றார்.

இந்தப்பாதந் தான் உலகை எல்லாம் அளந்தது. இதுவே மகாலட்சுமி அன்போடு அணைக்கும் பாதமாகத் திகழ்ந்தது.

இந்தப் பாதத்தைத் தான் அனைவரும் வணங்குகிறார்கள். ஆகாய கங்கையானது பிறந்ததும் இந்தப் பாதத்தில் இருந்துதான். எல்லாவற்றிற்கும் உயர்ந்ததாகக் கருதப்படுவதும் இந்தப்பாதந் தான்.

கஜேந்திர ஆழ்வார் வணங்கியதும் இந்தப் பாதந் தான். இந்திரன் போன்ற தேவர்கள் அனைவரும் இந்தப்பாதத்தைத் தான் தேடினார்கள். இந்தப் பாதத்தைத்தான் பிரம்மா அபிஷேகம் செய்தார். இந்தப் பாதமே ஓங்கி வானத்தை உதைத்தது.

இந்தப் பாதமே இந்த உலகத்தில் உள்ளவர்களுக்கும் பரமலோகத்தில் உள்ளவர்களுக்கும் வரம் அளித்தது. இந்தப் பாதமே அகலிகையின் சாபத்தை நீக்கியது. இந்தப் பாதமே பார்ப்பதற்கு அரியதாய் இருக்கிறது. இந்தப் பாதந் தான் திருவேங்கடமலையில் நின்று வரங்களை அளிக்கின்றது.

## கீர்த்தனை - 43

*ராகம் : சங்கராபரணம்*

3 1 1 3 3 1 3 3
ஆதிம புருஷு டச்யுது டசலு டனந்து டமலுடு
3 3 3 1 1 1 4 3
ஆ தேவு டீதடே போ ஹரி வேங்கட விபுடு (பல்லவி)

3 1
ஏகார்ணவமை உதகமு லேசின பிரம்ஹாண்டமுலோ
1 1 3 3 1 1 1 1
பைகொனி யுண்டக நொக வடபத்ரமு லோபலனு
1 1 1 1 3 3 3
சேகொனி பவளிம்புசு நொக ஸிஸுவை வடி தேலாடின
1 1 3 3 1 1 1 4 3
ஸ்ரீகாந்து டிதடே போ ஸ்ரீவேங்கட விபுடு (1)

3 3 3 3 3 1 3 3 1 1
அருதுக பலிமத மடபக நாகஸ மண்டின ரூபமு
ஸருகுன பூமிந்தயு நொக சரணம்புன கொலசி
1 3 1 3 3 1 3 3
பரகின பாதாங்குடமுன பிரம்ஹாண்டமு நகிலிஞ்சின
1 1 3 1 3 1 1 1 1 1 4 3
பரமாத்மு டீதடே போ பதி வேங்கட விபுடு (2)

1 3 1 3 1 1 3
ட்சீர பயோனிதி லோபல ஸேஷுடு பர்யங்கமுகா
3 3
தாருணியுனு ஸிரியுனு பாதமு லொத்தகநு
3 3 3 1 3 3 3
சேருவ தனு ப்ரம்ஹாதுலு ஸேவிம்பக ஜெலுவொந்தெடி
3 3 1 1 1 4 3
நாராயணு டிதடே உன்னத வேங்கட விபுடு (3)

திருமலையில் இருக்கின்ற திருவேங்கடவன் முன்னொரு காலத்தில் அவதாரங்கள் எடுத்த மகாவிஷ்ணுவே என்ற கருத்தை இப்பாடலில் அன்னமையா குறிப்பிட்டுள்ளார்.

ஆதிக்கடவுளாகவும் அச்சுதனாகவும் அனந்தனாகவும் புனிதமானவனாகவும் இருந்த ஸ்ரீ மகாவிஷ்ணுவே திருவேங்கட-முடையவனாகக் காட்சியளிக்கின்றான்.

உலகம் அழிந்த ஊழிக்காலத்தில் பரவியிருக்கின்ற நீரில் மிதக்கின்ற ஆலிலையில் குழந்தையாக அமர்ந்திருந்த ஸ்ரீ லட்சுமி தேவியின் கணவனே இந்தத் திருவேங்கடமுடையான் ஆவான்.

மாபலிச் சக்கரவர்த்தியின் கர்வத்தை நீக்குவதற்காக விஷ்வரூபம் எடுத்து ஒரு பாதத்தில் உலகத்தையும் மற்றொரு பாதத்தில் பிரம்மாண்டங்களையும் அளந்த வாமனனாக அவதரித்த பரம்பொருளே இந்தத் திருவேங்கடமுடையான்.

பாற்கடலில் ஆதிசேடனின் மேல் பள்ளி கொண்டிருந்தவரும் பூதேவி, ஸ்ரீதேவி ஆகிய இருவரையும் தன்னுடைய திருவடிகளில் அமர்த்தியவனும் பிரம்மதேவர்களால் சேவிக்கப்படுபவருமான ஸ்ரீமன் நாராயணனே திருவேங்கடமுடையவனாக எழுந்தளியுள்ளார்.

# கீர்த்தனை - 44

## *ராகம் : ஆஹிரி*

1 1 3 1 3 1 3
ஊரிகி போயெடி வோதடா கடு

1 3 3
சேருவ தெருவேகி செலகுமீ (பல்லவி)

3 1 1 1 3 3 3
எடம தெருவு வங்க கேகின தொங்கலு

1 3 3 3 1 1 3
தொடிபட கோகலு தோசேரு

1 3 1 1 3 1 1 3 1
குடி தெருவுன கேகி கொட்டு வடக மஞ்சி

3 1 3
நடிமி தெருவுனனே நடுவுமீ (1)

3 1 1 1 1
அட்டபு தெருவுல நடுநிடு ஜூட்டாலு

3 1
வெட்டு வெட்டுசு நின்னு வேசேரு

3 3 3 3 1 1
கொட்டேரே சின்ன திட்டி தெருவுவோக

3 3 1 1 1 3
தொட்ட தெருவு வங்க தொலகுமீ (2)

1 3 1 1 3 1 1 2
கொண்ட தெருவு கேகி கொஞ்சபு ஸுகமுல

3 3 1 3 3 3
பண்டை திருகுக படலேவு

3 3 3 1 3 1
அண்ட நுண்டெடி பரமாத்முனி திருமல

1 3 1 1 1 3
கொண்ட தெருவு தேகுவ நேகுமீ (3)

முக்தியடைய நல்ல வழியை அறிந்து செல்ல வேண்டும் என்ற கருத்தை அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகின்றார்.

ஊருக்குப் (மோட்சம்) போய்க்கொண்டிருக்கும் மனிதனே விரைவாகச் செல்லக்கூடிய ஒரு நல்லவழியைப் பார்த்து நீ செல்ல வேண்டும்.

இடப்புறமாகச் சென்றால் உன்னுடைய ஆடைகளைத் திருடர்கள் திருடிவிடுவார்கள். வலது புறமாகச் சென்றால் உன்னுடைய பொருள்களை அபகரித்து விடுவார்கள். ஆகையால் நன்றாயிருக்கும் நடுப்பாதையில் நீ செல்ல வேண்டும்.

குறுக்கு வழியில் சென்றால் உறவினர்கள் வழிமறித்து உனக்குத் தொல்லை தருவார்கள். குறுகிய பாதையிலும் வற்றிப்போன பாலையிலும் செல்லாமல் பெரிய வழியில் செல்வாயாக.

மலைப்பாதையின் வழியாகச் சென்று அற்ப இன்பங்களுக்கு ஆசைப்பட்டு நீ அலைய வேண்டாம். பரம்பொருளான திருவேங்கடவர் குடியிருக்கின்ற திருமலை வழியாக நீ சென்றால் அவர் எப்போதும் உனக்குத் துணையிருப்பார்.

# கீர்த்தனை - 45

## *ராகம் : லலிதா*

ஸொம்மு கலவாடு தனஸொம்மு செட நிச்சுனா
கம்மி நீ ஸொம்மனு நேனு காபாடவே ஹரி! (பல்லவி)

பஸுர மடவி பட்ட பஸுரமு கலவாடு
தெஸலு வெதகிண்டிகி தெச்சு கொன்னட்லு
வஸகா நாஸலலோன வடிபட்ட நா மனஸு
யெஸக மள்ளிஞ்சவே நன்னேலினா கோவிந்துடா! (1)

கொந்தி பண்ட ஸேயுவாடு கொலுசுலு பரகள்ள
ஜிந்த குண்டா காதே போஸி சேரி காசீனி
கந்துவ மம்மு புட்டிஞ்சி கன்னவாரி வாகிள்ள
செந்தி காவ நிய்யகுவே ஜீவுனிலே தேவுடா! (2)

கடுபுலோனி ஸிஸுவு கன்னதல்லி தன்னிதேனு
பெடகு லெஞ்சக கனி பெஞ்சீநடா
எடமீக ஸ்ரீவேங்கடேஸ நீ குட்சிலோ நேனு
தடவி தப்பு ஸேஸினா தய காவவே (3)

கடவுளின் பொருள் தான் ஜீவாத்மா என்றும் அந்தப் பொருளைக் காப்பாற்றுவதுதான் கடவுளின் கடமை என்றும் அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகின்றார்.

செல்வம் படைத்தவன் தன்னுடைய செல்வத்தைத் தானே அழிப்பானா? ஸ்ரீஹரியே உன்னுடைய செல்வமாகிய என்னை உன்னைத்தவிர யார் காப்பாற்றுவார்கள்?

பசு காட்டில் தொலைந்தால் அந்தப் பசுவின் சொந்தக்காரன் எல்லா இடத்திலும் தேடி அதனைத் தன் வீட்டிற்குக் கொண்டு வருவது போன்று கோவிந்தா துன்பம் என்ற மழையில் நனைந்த என்னை நீ தான் காத்தருள வேண்டும்.

பயிர் செய்தவன், தான் அறுவடை செய்த தானியங்களை எங்கும் சிந்தாமல் தன் வீட்டில் உள்ள குலுக்கையில் வைத்துக் காப்பது போன்று என்னைச் சிருஷ்டித்து அலையவிடாமல் கோவிந்தா நீ தான் என்னைக் காப்பாற்ற வேண்டும்.

தாயின் வயிற்றில் இருக்கும் குழந்தையானது தன்னை உதைத்தாலும் அதனை ஏற்றுக்கொண்டு தாய் அன்போடு இருப்பது போல திருவேங்கடவா உன் வயிற்றில் இருக்கின்ற நான் தவறு செய்தால் என்னைக் காப்பாற்றி நீதான் அருள வேண்டும்.

## கீர்த்தனை - 46

### *ராகம் : தேவகாந்தாரி*

1 1 1 1 1
பாபமு பாபமு ப்ரஜலாரா

1 1 1 3 1 1
பைபை நிடுவலெ பலுககுரோ (பல்லவி)

3 1 1 3 3
ஹரியந்து புட்டி நஜுடுனு ஸிவுடுனு

1 1 1
ஹரிதோ சரி வீரனு டெட்ட்லு ?

1 3 3 3 1
பொரி கொண்டலலோ புட்டின சிலஸிவி

3 1 1
ஸருஸ பெட்டிதே ஸரியவுனா ? (1)

3 4 1 3
இந்திராதிபுனி வெலகல ஸிறுலிவி

3 1 1 1
அந்தி மரொகரிவி அனுடெட்ட்லு

1 3 3 3 1
கொந்தரமு ஏறு குடிசி காலுவல

3 3 1 3 3 1 1 3
பொந்தி பொகடிதே பொஸகீனா ? (2)

1 1 1 1 1
ஸ்ரீவேங்கடபதி ஸேவகுலகு ஸரி

1 1 1
ஆவல மறி கலரனு டெட்ட்லு ?

1 1 4
காவிஞ்சின யல காமதேனுவுல

1 3 3
கேவி ஊர பசு லீடவுனா ? (3)

திருவேங்கடமுடையான் ஒருவர் தான் உயர்ந்தவர் என்றும் மற்றவர்கள் அவருக்கு உட்பட்டவர்கள் என்றும் அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகின்றார்.

மனிதர்களே இது பாவம், இது போன்று பேசுவது உங்களுக்குப் பாவத்தை விளைவிக்கும்.

பிரம்மதேவனும் சிவனும் ஸ்ரீஹரியில் இருந்து தான் பிறந்தவர்கள். அவர்களை ஸ்ரீஹரிக்குச் சமமாகக் கூறுவது எப்படிப் பொருந்தும். மலையிலிருந்து விழுந்த கற்களை ஒன்றுக்குமேல் ஒன்று வைத்தால் அது மலையாகுமா ?

உலகில் உள்ள அனைத்துச் செல்வங்களும் மகாலட்சுமிக்கும் கணவரான வேங்கடமுடையானுடையதுவே. அவற்றை மற்றவருடையது என்று எவ்வாறு கூற முடியும். பெரிய ஆற்றில் தண்ணீர் குடித்த ஒருவர் சிறிய வாய்க்காலில் குடித்த தண்ணீரைப் புகழ்வாரா ?

திருவேங்கடமுடையானுடைய தொண்டர்களுக்கு மற்றவர்கள் சரிசமமானவர்கள் என்று கூறுவது எப்படி ? காமதேனுவுக்கு இணையாக ஊரில் அலைந்து கொண்டிருக்கும் பசுக்களைக் கூறுவது பொருந்துமா ?

## கீர்த்தனை - 47

### *ராகம் : மாளவி கௌளா*

3 1 1 3
ஏமணி செப்பக வச்சு நீ ஸந்தோஷபு ஸுத்தி

1 3 1 1
நாமமு ஸ்ரீகிருஷ்ணுடடா நாராயணுனிகி (பல்லவி)

3 1 3 1 3 3
ஜனனி தேவகி தேவி ஜனகுடு வசுதேவு

3 4 3 1 3 1 1
டனகு டைன யட்டி ஆதிமூர்திகி

4 1 1 3 3
கனலோக ரட்ஷண கம்ஸுமாம கண்டமுனு

1 1 1 1 3 2
தனகு காரணமட தைவஸிகா மணிகி (1)

1 1 3 4 1 1 3 1 1
புட்டினதி மதுர பெம்புடு சோடு ரேபல்லெ

1 1 1 1
ஒட்டின மாயல புருஷோத்தமுனுகி

1 1 1 3 1 1 1 1
பட்டின பாண்டவ பட்ஷபாதமு கௌரவ வைரி

1 1 2 1 1
மிட்டி வ்ராத பலமட ஈஸ்வ ரேஸ்வருனிகி (2)

3 3 3 3 1 3 3 3
கோவுல காசேதியு கொல்லேதல பொந்தேதியு

3 1 1
ஆவேள குணமு ஈ அச்யுதுனிகி

3 1 3 3
ஸ்ராவண பஹுளாஷ்டமி சந்த்ரோதயமு ரோஹிணி

1 1 3 1 1 1 1
காவிம்ப ஜன்ம மிதிவோ ஸ்ரீவேங்கடபதிகி (3)

திருவேங்கடமுடையானைக் கண்ணனாகப் பாவித்து அவருடைய பிறப்பினுடையச் சிறப்பை வர்ணிக்கின்றார் அன்னமையா.

இந்த மகிழ்ச்சியான செய்தியை எப்படிக் கூறுவது; கண்ணன் என்ற பெயரை நாராயணனுக்கு வைத்தார்களாமே!

இந்த ஆதிக்கடவுளுக்கு தாய் தேவகிதேவி. தந்தை வசுதேவன். உலகமனைத்தையும் காப்பாற்றக்கூடிய இவருக்கு இவரது மாமாவான கம்சனால் கண்டம் என்று சொல்லப்படுகிறது.

மாயாவியான இந்தப் புருஷோத்தமன் பிறந்த இடம் மதுரா. ஆனால் வளர்ந்த இடம் ஆயர்பாடி. இந்தத் தேவாதி தேவனுக்கு ஜாதகப்படி பாண்டவர்களின் மேல் அன்பும், கௌரவர்களின் மேல் பகையும் கூறப்பட்டுள்ளது.

திருவேங்கடமுடையான் சிராவண மாசம் அட்டமி நாளில் ரோகிணி நட்சத்திரத்தில் சந்திரதோயத்தில் பிறந்தார். பசுக்களை மேய்ப்பதும் இடையர்குல பெண்களுடன் விளையாடுவதுமாக இவருடைய செயல்கள் அமைந்துள்ளன.

## கீர்த்தனை - 48

*ராகம் : வராளி*

கலிமி கலிகியியு நதம கதி யதேலா ?<br>
பலிமி கலிகியு லோகி பதிமால நேலா ? (பல்லவி)

இல வேலுபொகடு ஹரி இன்டனே உண்டகா<br>
பலு வேலுபுல தோடி ப்ரமத லேலா ?<br>
மெலகி ஸூர்யு டொக்கடு மிக்கிலினி வெலுககா<br>
வெலலேனி தீபமுலு வேயி நேமிடிகி ? (1)

ஹரிபக்தி யொக்கடே ஆத்மலோ நுண்டகா<br>
பரயுக்து லெஞ்சேடி பனுலேலா ?<br>
ஸிருல சிந்தாமணிடு சேதிலோ நுண்டகா<br>
ஸரி காஜுபூஸ மெச்சக நதேமிடிகி ? (2)

நாலுகனு மஞ்சி ஹரிநாம மொகடுண்டகா<br>
காலி போயெடி ஊர காத லேலா ?<br>
ஈ லீலா ஸ்ரீவேங்கடேஸு டெதுடனே உண்டாகா<br>
முலவுக ஜேசானி மொக்க நீக நேலா ? (3)

ஸ்ரீஹரி நம்மைக் காப்பாற்றிக் கொண்டிருக்கும்போது நாம் துன்பப்பட்டு வருந்துவது ஏன்? என்று அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகின்றார்.

செல்வம இருந்தும் வறியவன் போலவும் பணமிருந்தும் ஏழை போலவும் மற்றவரிடம் யாசிப்பது எதற்கு?

ஸ்ரீஹரி குலதெய்வம் போல் நம்மைக் காப்பாற்றிக் கொண்டு இருக்கும்போது மற்ற தெய்வங்களை நாம் வணங்குவது எதற்கு? ஆகாயத்தில் சூரியன் பிரகாசமாக ஒளி கொடுத்துக் கொண்டிருக்கும் போது ஒளியற்ற ஆயிரம் விளக்குகளின் ஒளி நமக்கெதற்கு?

நமது உள்ளத்தில் ஸ்ரீஹரியின் பக்தி இருக்கும்போது நாம் மற்ற தெய்வங்களை எண்ணுவது எதற்கு? செல்வத்தை அளிக்கின்ற சிந்தாமணி கையில் இருக்கும்போது கண்ணாடியால் செய்யப்பட்ட பாசியைப் புகழ்வது எதற்கு?

நமது நாவில் திருவேங்கடமுடையானின் திருநாமம் ஒன்று இருக்கும் பொழுது காற்றில் பரவுகின்ற ஊர்க்கதை நமக்கெதற்கு? திருவேங்கடமுடையான் உன் கண்ணெதிரே காட்சியளிக்கும்போது நான்கு திசைகளிலும் நீ அலைந்து திரிந்து வணங்குவது ஏன்?

## கீர்த்தனை - 49

### *ராகம் : நாளங்கநாடா*

ஈ மாடவினி நின்னு நிந்துகே நவ்விதி நேனு
நேம மெந்த ? நேமெந்தா ? நீ கருண எந்தா ? (பல்லவி)

ஸகல கர்மமு சேத ஸாத்யமு கானி நீவு
ஒக யிஞ்சுகந்த பக்தி கொகி லோனைதி
ப்ரகடிஞ்சி பஹூ வேத படன ஜிக்கனி நீவு
மொகரிவை திருமந்திரமுனகு ஜிக்கிதிவி (1)

கோடி தானமுல சேத கோரி லோனு கானி நீவு
பாடிஞ்சி ஸரணன்டேனே பட்டி லோனைதி
மேடி உக்ர தபமுல மெச்சி கைகொனனி நீவு
காடபு தாஸூலைதேனே கைகொனி மன்னிஞ்சிதி (2)

பெக்கு தீர்தமு லாடின பேதிஞ்ச ராணி நீவு
சொக்சி நீ முத்ர வாரிகி ஸூலபுடவு
கக்கன தேவதலகு கானராணி நீவு மாகு
நிக்கட ஸ்ரீவேங்கடாத்ரி நிரவைதிவி (3)

திருவேங்கடமுடையான் மிக எளிமை வாய்ந்த தன்மை உடையவன் என்ற கருத்தை இப்பாடலில் அன்னமையா குறிப்பிடுகின்றார்.

பெருமானே! இந்தச் செய்தியைக் கேட்டு இதற்காகத்தான் சிரித்தேன். நானெங்கே? உன்னுடைய தயை எங்கே?

எல்லாக் கர்மங்களாலும் அடைய முடியாத உன்னை, நான் உன்னிடம் கொண்ட சிறிதளவு பக்தியானால் உன்னைக் கட்டுப்படுத்தி–விட்டேன். பல வேதங்களைப் படித்தாலும் கட்டுப்படாத நீ ஓம் நமோ நாராயணாயா திருமந்திரத்திற்குக் கட்டுப்பட்டாய்.

கோடான கோடி தானம் செய்தாலும் அதற்கு ஆட்படாத நீ. உன்னையே சரணடைகிறேன் என்று கூறுபவர்களுக்கு ஆட்படுகின்றாய். பெருந்தவம் செய்தாலும் ஏற்றுக்கொள்ளாத நீ, நான் உனக்குத் தொண்டன் என்று கூறியவுடன் என்னை ஏற்றுக்கொள்கிறாய்.

பல தீர்த்தங்களில் நீராடினாலும் உன்னை அணுக முடியாது. இப்படியிருந்தும் சங்குச் சக்கரங்களை அணிந்திருப்பவர்களுக்கு எளிமையாக ஆட்படும்படி உள்ளாய்.

தேவாதி தேவர்களும் பார்ப்பதற்கு அரிதாக இருக்கும் நீ எங்களுக்குத் தரிசனம் அளிப்பதற்காகத் திருமலையில் குடிகொண்டிருக்கிறாய்.

## கீர்த்தனை - 50

### *ராகம் : சங்கராபரணம்*

அச்யுதா மிம்மு தலசே யந்தா பணி வலெனா
இச்சல மீவாரே மாகு நிஹ பரா லீயகா (பல்லவி)

மிம்மு நெறிகின யட்டி மீதாஸுல நெறிகே
ஸம்மதி விஞானமே சாலதா நாகு?
உம்மடி மீ ஸேவ சேஸு குண்டேட்டி வைஷ்ணவுல
ஸம்முகான ஸேவிஞ்சுடே சாலதா நாகு? (1)

நிரதி நீகு மொக்கே நீ டிங்கரீலகு
ஸரவிதோ மொக்குடே சாலதா நாகு?
பரக நின்னு பூஜிஞ்சே ப்ரபந்நுல பூஜிஞ்சே
ஸரிலேனி பாக்யமு சாலதா நாகு? (2)

அந்தி நீகு பக்துலைன யல மஹானுபாவுல
சந்தபு வாரிபை பக்தி சாலதா நாகு?
கந்துவ ஸ்ரீவேங்கடேஸா கடு நீ பண்டு பண்டுகு
ஸந்தடி பண்டநவுடே சாலதா நாகு? (3)

பெருமானின் அடியார்களின் அடியார்களுக்குத் தொண்டு செய்வதுதான் சிறந்தது என்பதை இப்பாடல் மூலம் அன்னமையா குறிப்பிடுகின்றார்.

பெருமானே! உன்னுடைய தொண்டர்களே எங்களுக்கு முக்தி கொடுக்கும்போது உன்னை நினைத்து வணங்க வேண்டுமா?

உன்னுடைய பெருமையைத் தெரிந்து கொண்டு தொண்டு செய்பவர்களின் தொடர்பே போதுமல்லவா? உனக்குக் கைங்கர்யம் செய்து கொண்டிருக்கின்ற வைணவர்களை வணங்குவதே எங்களுக்குப் போதுமல்லவா?

உன்னை வணங்குகின்ற பக்தர்களை வணங்குவதே எங்களுக்குப் போதுமல்லவா? உன்னை வணங்குகின்ற பக்தர்களுக்குப் பூஜை செய்யும் பாக்கியம் எங்களுக்குக் கிடைத்தது போதுமல்லவா?

உனக்குப் பக்தர்களாக இருப்பவர்களின் மேல் நாங்கள் பக்தி கொண்டால் அதுவே எங்களுக்குப் போதுமல்லவா? திருவேங்கட–முடையானே உன்னுடைய அடியார்களின் அடியாருக்கும் அடியாராக இருப்பதே போதுமல்லவா?

## கீர்த்தனை - 51

### *ராகம் :* **தேட்ஸாட்சி**

3 3 1 3
அனராது வினராது அதனி மாயலு நேடு

3 3 1 1 3 1 3 1
தினதின க்ரொத்தலாய த்ரிஷ்டமிதே மாகு (பல்லவி)

3 3 3
ஆடெடி பாலுல அங்கிலி சூபு மனி

1 3 3 3
தோடனே வான்டல நோர தும்முலு சல்லி

3 1 3 3 1 1
ஈட மாதோ செப்பகானு இந்தரமு கூடிபோயி

3 3 1 3 3
சூட போதே பஞ்சதாரை சோத்ய மாய நம்மா! (1)

1 1 1 3 1 3 3 3 1
தீட திகலு ஸொம்மண்டா தேஹமு நின்டா கட்டே

1 1 1 3 1 3 1 3 1 3
தீடகு காக பாலுலு தெகி வாபோகா

1 3 3 1 1 1
பாடிஞ்சி ஈ ஸுத்தி வினி பாரிதெஞ்சி சூசிதேனு

1 1 1 1 1 1
கோடி கோடி ஸொம்முலாய கொத்தலோ யம்மா! (2)

1 1 1 3 1 1
காகி ஜுன்னு ஜுன்னு லன்டோ கம்பேடேஸி தினிபிஞ்சி

1 3
வாகொலிபி பாலுலெல்லா வாபோவகா

1 3 1 3 3 1 1
ஆகட ஸ்ரீவேங்கடேஸுடா பாலல கண்டி நீரு

1 3 1 3 3
ஜோகக முத்யாலு ஸேஸே சூட கானே நேமு (3)

திருவேங்கடமுடையானைக் கண்ணனாகப் பாவித்துக் கண்ணன் இளமையில் செய்த குறும்புகளைப் பார்த்து இடையர்குலப் பெண்கள் கண்டுகளிக்கின்ற காட்சியினை அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகின்றார்.

பெண்ணே கண்ணனுடைய மாயச் செயல்கள் நாளுக்கு நாள் புதியதாகத் தோன்றுகின்றன. இது போன்ற செயல்களை நாங்கள் கேள்விப்பட்டதே இல்லை.

கண்ணன் சிறுவர்களுடன் விளையாடிக் கொண்டிருக்கும்போது அவர்களை வாயைத் திறக்குமாறு கூறி வாயில் மண்ணை அள்ளிப் போட்டான். மண்ணை அள்ளிப்போட்ட செய்தியை அறிந்து நாங்கள் போய்ப் பார்த்தோம். அவர்கள் வாயில் உள்ள மண் சர்க்கரையாக இருந்தது. இது என்ன அதிசயம் ?

அரிப்புத் தன்மை கொண்ட செந்தட்டி என்னும் செடியைப் பிடுங்கி கண்ணன் தன்னுடன் விளையாடும் சிறுவர்களின் மேல் அணிகலன்கள் என்று அணிவித்தான். அவர்கள் உடனே வலியைத் தாங்க முடியாமல் அலறினார்கள். இந்தச் செய்தியைக் கேட்டு நாங்கள் சென்றோம். ஆனால், அது அவர்களின் உடல் மேல் கோடான கோடி அணிகலன்களாக இருந்தது. இது என்ன அதிசயம் ?

கண்ணன் வேறு பாலைக் கடம்பு என்று தன்னுடன் விளையாடும் சிறுவர்களுக்குக் கொடுத்ததால் அவர்களின் வயிறு பெரிதாகி அவர்களின் கண்களில் கண்ணீர் வழிந்தது. நாங்கள் அங்கு சென்றுப் பார்த்தோம். ஆனால் அவர்களின் கண்களில் விலைமதிப்பற்ற முத்துக்கள் வழிந்தன. இது என்ன கண்ணனான திருவேங்கடவனின் அதிசயம் ?

# கீர்த்தனை - 52

## *ராகம் : பௌளி*

3 3 3 3 1
வொர்றி வாடு வொர்றி காடு, விஷ்ணுநி தாஸ்யமு லேக
3 1 3
விர்ற வீகே யஹங்காரி வொர்றி வாடு (பல்லவி)

1 1 1 3 3
நாலுகபை ஸ்ரீஹரி நாம மிட்டே உண்டகானு
1 3 3
ஜோலிதோ மரசின நீசுடே வொர்றிவாடு
3 1 3 3
அலறி ஈ ஜகமெல்லா ஹரிரூபை உண்டகானு
1 1 3 3
வாலி தலபோயலேனி வாடு வொர்றி வாடு (1)

1 3 3 1 1 1
கூறிமி பிரம்ஹாண்டாலு குட்சி நுன்ன ஹரி கண்டே
1 1 3 1 1
கோரி வேறே கலடனே குமதி வொர்றி வாடு
1 1 3 3 3
சேரி தன யாத்ம லோன ஸ்ரீரமணு டுண்டகானு
3 1 3 3 3 3 3
தூரமை திருகுவாடே தொட்ட வொர்றி வாடு (2)

1 3 1 3 3
ஸாரபு ஸ்ரீவேங்கடேஸு ஸரணாகதி உண்டகா
1 1 3 3 3 3
ஸாரே கர்மமு லண்டெட்டி ஜடுடு வொர்றிவாடு
1 3 3 3 3 3
சேருவ நாதனி முத்ர செல்லுபடி நுண்டகா
1 1 3 3 3
மோரதோ பைனுன்ன வாடே முந்து வொர்றிவாடு (3)

எளிதாகக் கிடைக்கக்கூடிய விஷ்ணு பக்தியை விட்டுவிட்டு அங்கும் இங்கும் அலைந்து கொண்டிருக்கும் மனிதர்களை பைத்தியக்காரர்களாக அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகின்றார்.

பைத்தியக்காரன் உண்மையில் பைத்தியக்காரன் அல்ல. பைத்தியகாரன் யார் என்றால் விஷ்ணுவுக்குத் தொண்டு செய்யாமல் அகங்காரமாகத் திரிகின்றவன் தான் பைத்தியக்காரன்.

நாக்கு மேல் ஸ்ரீஹரியின் நாமம் இருக்கும்போது அதை மறந்த நீச்சமுடையான் தான் பைத்தியக்காரன். இந்த உலகமெல்லாம் ஹரியினுடைய உருவமாக இருக்கும்போது அவனை நினைக்காமல் இருப்பவன் தான் பைத்தியக்காரன்.

அண்டங்கள் யாவையும் தன்னுடைய வயிற்றில் வைத்திருந்த ஸ்ரீஹரியைக் காட்டிலும் மற்றொருவன் தான் சிறந்தவன் என்று கூறுபவன் பைத்தியக்காரன். தன்னுடைய ஆத்மாவில் ஸ்ரீஹரி இருக்கும்போது அவரை மறந்து திரிகின்றவன்தான் பைத்தியக்காரன்.

உயர்ந்ததான திருவேங்கடமுடையானுடைய சரணாகதி இருக்கும்போது மற்ற கர்மங்களில் ஈடுபடுபவன் பைத்தியக்காரன், அவனுடைய திருமண் காப்பு ஒன்றே போதுமானதாக இருக்கும்போது அதை மறந்து திரிகின்றவன் தான் பைத்தியக்காரன்.

## கீர்த்தனை - 53

### *ராகம் : தேஸாளம்*

3 1 3 3
வாரிதே போ ஜன்மமு வடி நின்னு தெச்சிரி
3 1 1 3 1 2
பாரத ராமாயணாலை பரகே நீ கதலு (பல்லவி)

3 3 3 1 1 3 3 3
புவிமீத ராவணுடு புட்ட காகா ராமுடவை
1 3 1 1 1 1
தவிலி இந்தரிகி ப்ரத்யட்ச மைதிவி
1 1 3 1 3
விவரிம்ப நந்த வாடு வெலஸிதேகா நீவு
1 3 1 3 1
அவதார மந்திதே நின்நந்தருனு ஜூதுரு (1)

1 3 1 3 3
ரமண கம்ஸாதி யஸாருலு லூடிஸேயகாகா
1 1 3 1 1
தமி கிருஷ்ணாவதாரா மிந்தரி கைதிவி
3 1 1 3 3 1 3 3
கமுலை யந்தடி வாரு கலிகிதேகா நீவு நேடு
1 3 3 3 1
அமர ஜனிஞ்சி மாடலாடுது விந்தரிதோ (2)

1 1 1 1 1 3
எந்த உபகாரியோ ஹிரண்யகஸிபுடு
1 3
செந்த நரசிம்ஹீட நீ ஸேவ யிச்செனு
1 1 1 1 1
இந்தட ஸ்ரீவேங்கடேஸ! இன்னி ருபுலுனு நீவே
1 1 1 1 1 3
பந்தான நீ ஸரணனி ப்ரதிகிதி மிதிவோ (3)

பகவானின் பகைவர்களை அழிப்பதற்காகப் பெருமான் இவ்வுலகில் பல அவதாரங்கள் எடுத்தார். அவதாரங்கள் எடுப்பதற்குக் காரணமாக இருந்த பகைவர்களை அன்னமையா இப்பாடலில் புகழ்ந்து கூறுகின்றார்.

உன்னுடைய பகைவர்கள் அனைவரும் மேன்மைத் தன்மை வாய்ந்த பிறப்பினை உடையவர்கள். அவர்கள்தான் இந்த உலகிற்கு உன்னைக் கொண்டு வந்தார்கள். உன்னுடைய அற்புதச் செயல்கள் யாவும் பாரத இராமாயணக் கதைகளாகப் பேசப்பட்டன.

இராவணன் பிறந்ததால்தான் நீ இராமனாகப் பிறந்து காட்சி அளித்தாய். அதனால்தான் அனைவருக்கும் உன்னைப் பார்க்கின்ற பாக்கியம் கிடைத்தது.

கம்சன் போன்ற அசுரர்களின் கொடுமையை அழிப்பதற்காக நீ கிருஷ்ணனாய்ப் பிறப்பெடுத்தாய். கம்சன் போன்ற அரக்கர்களின் பிறப்பினால் தான் நீ எங்களிடம் பேசிக் கொண்டிருக்கிறாய்.

இரண்யகசிபன் எவ்வளவு நன்மை செய்தானோ? நீ அவனால்தான் நரசிம்ம அவதாரம் எடுத்தாய். அதனால் உன்னை கைங்கர்யம் செய்கின்ற பாக்கியம் எங்களுக்குக் கிடைத்தது. திருவேங்கடவா! இந்த அவதாரங்கள் எல்லாம் உன்னுடையதுதான். நாங்கள் உன்னிடம் சரணாகதி அடைந்து வாழ்ந்து கொண்டிருக்கிறோம்.

## கீர்த்தனை - 54

*ராகம் : பௌளி*

1 3 1 1 3 1
தலகரோ லோகுலு தடவகுரோ மம்மு
1 3 3 3 1 1
கலிகினதிதி மா காபுரமு (பல்லவி)

1 1
நரஹரி கீர்த்தன நானின ஜிஹ்வா
1 1 3 1 3
நொறுல நுதிம்பக நோபது ஜிஹ்வா
1 3 1
முரஹரு பதமுல மொக்கின ஸிரமு
1 3 1 3 3 3
பருல வந்தனகு பரகது ஸிரமு (1)

1 1 1 1
ஸ்ரீபதினே பூஜிஞ்சின கரமுலு
1 1 1
சோபி யாசனகு ஜொரவு கரமுலு
1 1 3 1 3 1
ஏபுனா ஹரிகடா கேகின காள்ளு
1 1 3 1 3 1
பாபுல இன்ட்லகு பாரவு காள்ளு (2)

1 1 1
ஸ்ரீவேங்கடபதி ஜிந்திஞ்சு மனஸு
3 1 1 1 3
தாவதி நிதரமு தலசது மனஸு
3 3 1 4 1 1
தேவுடதனி யாதீனபு தனுவு
1 1 4 3 3
தேவல நிதராதீனமு காது (3)

"வாய்கொண்டு மானிடம் பாடவந்த கவியேனல்லேன்" என்று நம்மாழ்வார் பாடிய பாடலுக்கு ஏற்ப இறைவனைத் தவிர மனிதனைப் புகழ்ந்து பாடுவதால் பயனில்லை என்ற கருத்தினை அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகின்றார்.

மனிதர்களே! நீங்கள் விலகிச் செல்லுங்கள். எங்களை நினைக்காதீர்கள். இதுதான் எங்களுடைய செயல்கள்.

பெருமானைத் துதிக்கின்ற என்னுடைய நாவு மற்றவர்களைத் துதிக்காது. விஷ்ணுவின் திருவடிகளுக்கு வணங்கிய என்னுடைய தலை மற்றவர்களுக்கு வணங்காது.

ஸ்ரீஹரியைப் பூசை செய்த கரங்கள் மற்றவர்களிடம் யாசிப்பதற்குச் செல்லாது. நாராயணனைத் தரிசிப்பதற்காகச் சென்ற கால்கள் பிறரின் வீட்டினை நாடிச் செல்லாது.

திருவேங்கடமுடையானை நினைக்கின்ற மனது மற்ற எந்தப் பொருளையும் மனதில் நினைக்காது. பெருமானே! உனக்கே சொந்தமான இந்த உடலை மற்ற ஏதற்கும் பயன்படுத்த மாட்டேன்.

# கீர்த்தனை - 55

## *ராகம் : தேஸாளம்*

1 3 1 1 3 1 3
கொலனி தோபரிகி கொப்பிள்ளோ, யது
1 1 3 3
குலமு சுவாமிகி கொப்பிள்ளோ (பல்லவி)

1 3 3 3 3 3 3
கொண்ட கொடுகுகா கோவுல காசின
1 3 1 1 3 3
கொண்டொக ஸிஸுவுகு கொப்பிள்ளோ
3 3 3 1 3 1 1 1
துண்டகம்பு தைத்யுல கெல்லனு தல
3 3 3 3 1 3 3
குண்டு கண்டனிகி கொப்பிள்ளோ (1)

1 1 4 1 1 1
பாப விதுல ஸிஸுபாலுனி திட்ல
1 1 3 1 3 3
கோபகானிகினி கொப்பிள்ளோ
1 1 3 3 1
ஏபுன கம்ஸுனி இடுமல பெட்டின
1 1 3 1 3 3
கோப பாலுனிகி கொப்பிள்ளோ (2)

3 3 1 3
தண்டி வைருலனு தரமின தனுஜுல
3 3 3 3 1 3 3
குண்டெ திகுலுனகு கொப்பிள்ளோ
3 1 3 1 1 1 3 1
வெண்டி பைடியகு வேங்கடகிரிபை
1 3 1 3 3
கொண்டலய்யகுனு கொப்பிள்ளோ (3)

பாமர மக்களிடம் விஷ்ணுவின் பக்தியைப் பரப்புவதற்கு நாட்டுப்புறப் பாடலையும் அன்னமையா கையாண்டுள்ளார். இப்பாடல் தமிழுக்கு இணையான கும்மிப் பாடலுடன் ஒப்பிடத் தகுந்தது.

திருவேங்கடமுடையானுக்குக் கும்மியடி, இடையர் குலத்தைக் காப்பாற்றிய பெருமானுக்குக் கும்மியடி.

மலையைக் குடையாகப் பிடித்துப் பசுக்களைக் காப்பாற்றிய சிறு குழந்தைக்குக் கும்மியடி. அரக்கர்களை அழிக்க வந்த பெருமானுக்குக் கும்மியடி.

தீமையை நினைத்த சிசுபாலனின்மீது சினம் கொண்ட கண்ணபிரானுக்குக் கும்மியடி. தீங்கு விளைவித்த கம்சனை அழித்த கோபாலனுக்குக் கும்மியடி.

படை எடுத்து வந்த அரக்கர்களை விரட்டிய நாராயணனுக்குக் கும்மியடி. வெள்ளியாலும் பொன்னாலும் செய்த திருவேங்கடமலையில் குடிகொண்டிருக்கின்ற திருவேங்கடமுடையானுக்குக் கும்மியடி.

## கீர்த்தனை - 56

### *ராகம் : சுத்தவசந்தம்*

எந்து ஜூசின தனகு நின்னியுனு நிட்லனே
கந்து லேனி ஸுகமு கல னைன லேது (பல்லவி)

ஸிறுலு கலிகின பலமு சிந்த பொரலனே கானி
ஸொரிதி ஸந்தோஷ மிந்சுகா யைன லேது
தருணி கல பலமு வேதனல பொரலுடே கானி
நெரஸு லேனி சுகமு நிமிஷம்பு லேது (1)

தனுவு கல பலமு பாதகமு ஸேயனே கானி
அனுவைன புண்யம்பு அதி யிந்த லேது
மனஸு கல பலமு துர்மதி பொந்தனே கானி
கன மனோஞான ஸங்கதி கொந்த லேது (2)

சதுவு கலிகின பலமு ஸம்ஸயம்பே கானி
ஸதமல ஞான நிச்சய மிந்த லேது
இதி எரிகி திருவேங்கடேஸ்வருனி கொலிசினனு
ப்ரதுகு கலுகுனு பாவமு ப்ராணுலகு லேது (3)

நாம் அனுபவித்துக் கொண்டிருக்கும் செல்வம் அனைத்தும் துன்பம் விளைவிப்பவையே என்ற கருத்தினை அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகின்றார்.

எதைப் பார்த்தாலும் துன்பம் விளைவிக்கின்றதாகவே இருக்கின்றது. கனவிலும் கூட சுகம் காண்பது அரிதாக இருக்கிறது.

நம்மிடம் செல்வம் இருந்தென்ன பலன்? அது துன்பத்தைத்தான் தருகின்றது. மகிழ்ச்சியன்று. பெண்ணால் நமக்குத் துன்பமே தவிர இன்பம் ஒரு நிமிடம் கூட இல்லை.

உடல் இருப்பதன் பலன் என்ன? அது பாவத்தைத்தான் தருகிறது. புண்ணியத்தை சிறிதளவும் கொடுப்பதில்லை. மனது இருப்பதன் பலன் என்ன? அது கெட்ட எண்ணங்களைத்தான் உருவாக்குகிறது. நம்முடைய அறிவை மேம்படுத்துவதில்லை.

கல்வியின் பலன் என்ன? சந்தேகத்தைத்தான் எழுப்புகிறது அறியாமையை நீக்குவதில்லை. இதனைத் தெரிந்து திருவேங்கட-முடையானை வணங்கினால் முக்தியடைவோம் என்ற எண்ணம் உயிர்களுக்கு இல்லை.

## கீர்த்தனை - 57

### *ராகம் : ஆஹிரி*

அப்பமைனா நீயரே யம்மலாலா நே
டப்ப டாரகிஞ்சீநதே யம்மலாலா! (பல்லவி)

வாடுதேரி வதனமு வடதாகா நிந்தாகா
நாடி வச்சே ஜூடரே யம்மலாலா!
நீட கேக நெரகடு நிக்கபு பாலுனி வலே
ஆட நீட திரிகாடி நம்மலாலா! (1)

வெட்டு வெட்டி நாடலகு விச்சேஸேநனி
நட்டமு லாடகுரே யம்மலாலா!
தொட்டி வாரி இண்ட்லெல்லா தூரி தூரி பாராடி
நட்டமுலு நிடுபுலு நம்மலாலா! (2)

வேகுவ ஜாமுன நுண்டி வேயி மாறு லாரகிஞ்சு
நாகடி கோருவ டம்மலாலா!
தேகுவ வேங்கடகிரி தேவுடைன பாலு டிதே
ஆகதாடு வட்டி தீஸி நம்மலாலா! (3)

திருவேங்கடமுடையானைக் கண்ணனாகப் பாவித்து அவருடைய குழந்தை விளையாட்டுக்களை அன்னமையா இப்பாடலில் வர்ணிக்கின்றார்.

பெண்களே இவனுக்கு ஒரு அப்பம் கொடுங்கள். பசியாக வந்த இவன் உண்ணட்டும்.

விளையாடி விட்டு வாடிய முகத்துடன் இவன் வந்திருக்கிறான் பாருங்கள். நிழல் பக்கம் கூடப் போகத் தெரியாத இவன் ஓடி வந்திருக்கிறான்.

பிறரிடம் வீண் செயலுக்கே செல்வான் என்று இவனைக் குறை கூறாதீர்கள். பக்கத்து வீடுகளுக்குள் எல்லாம் நுழைந்து தவழ்ந்து வந்திருக்கிறான்.

இவன் காலையிலிருந்து ஆயிரம் தடவை சாப்பிடுவான். பசி பொறுக்க மாட்டான். திருவேங்கடமலையில் குடிகொண்டுள்ள இந்தக் குழந்தையானவன் சுட்டித்தனம் கொண்டவன்.

# கீர்த்தனை - 58

## *ராகம் : ஸங்கராபரணம்*

3 1 1 3 3
இங்துகே போ வெரகய்யீ நேமந்துனு

1 3 1 3 3
குந்துலேனி நீ மஹிம கொனியாட கலனா! (பல்லவி)

1 3 1 1 1
அடு தேவதல கெல்லா நம்ருதா மிச்சின நீவு

1 3 3 1 1 3
இடு வென்ன தொங்கிலுட கே மந்துனு?

1 1 3 3 3 4 1
படுகதி பலீந்த்ருனி பந்திஞ்சி நட்டி நீவு

1 3 1 3 3 1 3
நட ரோல கட்டுவட்ட சந்தான கேமந்துனு? (2)

1 3 1 1 3
கலிகி யா கரிராஜு கருண காசின நீவு

3 1 1 3
இல நாவுல காசுட கேமந்துனு?

1 3 3 3 1 1 1
தலப பிரம்ஹாதி தேவதலகு ஜிக்கனி நீவு

1 3 1 1 1 3
செலுல காகிள்ளகு ஜிக்கிதி வேமந்துனு? (2)

4 1 1 1 1
பாவிஞ்ச நன்னிடி கண்டே பரம மூர்த்திவி நீவு

3 3 1 3
ஈவல பாலுடவைதி வேமந்துனு?

1 3 3 1 3 1 3 1
காவிஞ்சி பிரம்ஹாண்டாலு கடுபுன நிடுகொனி

1 1 3 1 3
ஸ்ரீவேங்கடாத்ரி நிலிசிதி வேமந்துனு? (3)

பெருமானின் அற்புதச் செயல்களையும் எளிமையான செயல்களையும் பார்த்த அன்னமையா இப்பாடலில் வியப்புக் கொள்கின்றார்.

பெருமானே! உன்னுடைய அற்புதங்களைப் பார்த்து நான் வியப்படைகின்றேன். குறையொன்றும் இல்லாத உன்னுடைய பெருமையை நான் புகழாமல் இருப்பேனா ?

ஒருபுறம் தேவர்களுக்கு அமிர்தம் கொடுத்த நீ மற்றொருபுறம் வெண்ணெய் திருடி உண்டாய். இதென்ன செயல்? பலசாலியான பலிச்சக்கரவர்த்தியைக் கட்டி வைத்த நீயே உரலில் கட்டப்பட்டாய் இதென்ன செயல்.

கஜேந்திரனை அன்போடு காப்பாற்றிய நீ பசுக்களை மேய்த்துத் திரிவது என்ன செயல் ? பிரம்மா போன்ற தேவர்களுக்கு எட்டப்படாத நீ இடையர் குலப்பெண்களின் அணைப்பிற்கு உட்பட்டது என்ன செயல் ?

எண்ணிப் பார்த்தால் பரம்பொருளாக இருக்கின்ற நீ சிறு குழந்தையாக மாறியது என்ன செயல் ? பிரம்மாண்டங்களை வயிற்றில் வைத்துள்ள நீ திருவேங்கடமலையில் குடிகொண்டது என்ன செயல் ?

# கீர்த்தனை - 59

## *ராகம் : ஸுத்த தேஸி*

1 1 1 1 1 1 1 3 3
கானரடே பெஞ்சரடே கட கடா பிட்டலனு

1 1 3 3
நேனு மீவலே கண்டி நெய்ய மைன பிட்டனு (பல்லவி)

3 1 3 1
பாயிட பாரவேஸின பாலு வென்னலுனு

1 3 3 3
சேயி வெட்ட குந்துரா சின்னி பிட்டலு

3 1 1 1
மீ இண்ட்லு ஜதநாலு மீரு ஸேஸிகொனகா

1 1 3 1 1 3 3
பாயக தூரே ரேலே ப்ரதி லேனி பிட்டனி (1)

1 3 3 1 1 3
மூஸின காகுல நேயி முங்கிட பெருகுலு

1 3 1 3 3 3 3
ஆஸபட குந்தூரா ஆடு பிட்டலு

1 1 3
ஒஸரிஞ்சி மோஸபோகா உண்டலேகா மீரு

1 3 1 3 3
ஸேஸே ரிந்தேஸி தூரு செப்பராணி பிட்டனி (2)

1 1 1
சொக்கமைன கொப்பெரலா ஜுன்னுலு ஜின்னுலுனு

1 3 1 3 3
சிக்கின விடுதுரா சின்னி பிட்டலு

1 3 3 3
மிக்கிலி பூஜலு சேஸி மெச்சிஞ்ச தகதா

1 1 1 1 3 3 3
எக்குவைன திருவேங்கடேஸுடைன பிட்டனி (3)

கோகுலத்தில் கண்ணன் குறும்பு செய்ததால் அவனைப் பற்றி யசோதையிடம் சென்று இடையர் குலப்பெண்கள் குறை கூறினார்கள். ஆனால் யசோதை அப்பாவியான என் குழந்தையை அவதூறு கூறாதீர்கள் என்று அவர்களைக் கண்டித்துப் பேசுகிறாள்.

நீங்கள் குழந்தையைப் பெற்று வளர்த்ததில்லையா? நானும் உங்களைப் போன்றுதான் அழகான ஒரு நல்ல குழந்தையைப் பெற்றெடுத்தேன்.

பால், வெண்ணெய் இவற்றை வீட்டின் வெளியே வைத்தால் சிறு குழந்தைகள் எடுப்பார்களா? இல்லையா? உங்களுடைய வீட்டு வேலைகளைப் பார்க்காமல் ஒன்றும் அறியாத என் குழந்தையின் மேல் ஏன் குற்றம் கூறுகிறீர்கள்.

பானையில் மூடிவைத்த நெய்க்கும், தயிருக்கும் விளையாடுகின்ற குழந்தைகள் ஆசைப்படாமல் இருப்பார்களா? ஏமாற்றமடைந்த நீங்கள் என் குழந்தையின் மீது பழி போடலாமா?

வீட்டில் பாத்திரங்களில் வைத்த கடம்பு மற்றும் தின்பண்டங்களைப் பார்த்தால் சிறு குழந்தைகள் உண்ணாமல் இருப்பார்களா? ஆகையால் நீங்கள் குழந்தையான திருவேங்கடமுடையானை குறை கூறாமல் அன்போடு பூஜித்து அவனை மகிழ்ச்சியடையச் செய்யுங்கள்.

## கீர்த்தனை - 60

### *ராகம் : பௌளிராமக்ரிய*

இதடே பர ப்ரம்ஹா மிதியே ராம கதா
ஸத கோடி விஸ்தரமு ஸர்வ புண்ய பலமு (பல்லவி)

தரலோ ராமுடு புட்டே தரணிஜ பெண்ட்லாடெ
அரண்ய வாஸுலகெல்லா நபய மிச்சே
ஸொறிதி முக்கு செவுலு சுப்பநாதினி கோஸே
கரதூஷணுலனு கண்டிஞ்சி வேஸே (1)

கினிஸி வாலி ஜம்பி கிஷ்கிந்தா ஸுக்ரீவு கிச்சே
வனதி பந்திஞ்சி தாடெ வானருலதோ
கனலி ராவண கும்பகர்ணாதுலனு ஜம்பி
வனித ஜெகொனி மள்ளி வச்சே நயோத்யகுனு (2)

ஸௌமித்ரியு பரதுடு. ஸத்ருக்னுடு கொலுவக
பூமி யேலே குஸலவா புத்ருல காஞ்சே
ஸ்ரீமந்துடை நிலிசெ ஸ்ரீவேங்கடாத்ரி மீத
காமிஞ்சி விபீஷனு லங்ககு பட்டமு கட்டே (3)

அன்னமையா ஒவ்வொரு பாடலிலும் தசாவதாரங்களைப் பாடி இருக்கின்றார். ஒவ்வொரு அவதாரத்தையும் தனித்தனிப் பாடல்களில் வர்ணித்துள்ளார். இந்தப் பாடலில் இராமாயணக் கதை முழுவதையும் கூறியுள்ளார்.

இவர்தான் பரம்பொருள். நூறுகோடி பாடல்களில் இந்த இராமாயணக் கதை அமைந்திருக்கிறது. இது எல்லாப் புண்ணியங்களையும் அளிக்கக்கூடிய சிறப்பான கதை.

இப்பூவுலகில் இராமன் பிறந்து சீதையை மணந்தார். காட்டுக்குச் சென்று அங்குள்ள முனிவர்களுக்கெல்லாம் அபயம் கொடுத்தார். கொடிய அரக்கியான சூர்ப்பனகையின் மூக்கையும் காதையும் அறுத்து கரதூஷணா என்ற அரக்கர்களையும் அழித்தார்.

சினமுற்று வாலியைக் கொன்று கிஷ்கிந்தாவை சுக்ரீவனுக்குக் கொடுத்தார். கடல்மேல் பாலம் அமைத்து வானரர்களுடன் கடலைக் கடந்தார். கொடிய போரில் இராவணனையும் கும்பகர்ணனையும் கொன்று சீதையுடன் அயோத்திக்குத் திரும்பினார்.

லஷ்மணன், பரதன், சத்ருக்ணன் இவர்கள் சேவிக்க பூமியை ஆண்டார். குசா, லவா என்ற இரண்டு குழந்தைகளைப் பெற்றெடுத்தார். திருவேங்கடமலையில் செல்வ வளத்துடன் நிற்கின்ற இவர். அன்போடு தன் பக்தனான விபீடணனை இலங்கைக்கு அரசனாக்கினார்.

## கீர்த்தனை - 61

### *ராகம் : பூபாளம்*

1 1<br>
மின்னக வேஸாலு மானி மேலுகோ வய்யா<br>
3 3 1<br>
ஸன்லை நீ யோக நித்ர சாலு மேலுகோ வய்யா! (பல்லவி)

1 1 3 3 3 1<br>
ஆவுலு பேயலகுகா நரசீ பிதுக வலெ<br>
3 3 3 1 1<br>
கோவிந்துட இங்கா மேலுகொன வய்யா!<br>
1 3 1 3<br>
ஆவலீவலி படுசு லாடலு மரிகி வச்சி<br>
1 3 1 3 1<br>
த்ரோவ காசு குன்னாரு ப்ரொத்துன மேலுகோ வய்யா! (1)

3 3 1 1 3 3<br>
வாடல கோபிகலெல்லா வச்சி நின்னு முத்தாட<br>
1 3 3 1<br>
கூடி யுன்னா ரிதே மேலுகொன வய்யா!<br>
1 3 3 3 1 1 3 1 1<br>
தோடனே யசோத கின்னெதோ பெருகு வண்டகமு<br>
3 1 1 1 1 1 1<br>
ஈடகு தெச்சி பெட்டே நிக மேலுகோ வய்யா! (2)

1 3 3 1 1 3<br>
பிலிசி நந்தகோபுடு பேறுகொனி யதே கன்னு<br>
3 1 1<br>
கொலுகுலு விச்சி மேலு கொன வய்யா!<br>
1 1 3 3 3 1<br>
அலரின ஸ்ரீவேங்கடாத்ரி மீதி பாலகிருஷ்ணா<br>
1 1 1 1<br>
இல மாமாடலு விண்டி விக மேலுகோ வய்யா! (3)

திருவேங்கடமுடையானைக் கண்ணனாகப் பாவித்து பள்ளி கொண்டிருக்கின்ற அப்பரம்பொருளை எழுப்புவதாக இப்பாடல் அமைந்துள்ளது. தொண்டரடிப் பொடியாழ்வாரின் திருப்பள்ளி எழுச்சிப் பாசுரத்துடன் இதனை ஒப்பிடலாம்.

பெருமானே! உன்னுடைய யோக நித்திரையை விட்டுவிட்டு எழுந்தருள்வாயாக.

பசு கன்றுகளுக்காகக் கத்துகின்றது. பால் கறப்பதற்குச் செல்லவேண்டும் கோவிந்தா நீ எழுந்திருப்பாயாக. சுற்றுப்புறத்தில் உள்ள குழந்தைகள் விளையாடுவதற்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆதலால் எழுந்திருப்பாயாக.

கோகுலத்தில் உள்ள இடையர் குலப் பெண்கள் எல்லாம் உன்னைக் கொஞ்சுவதற்குக் கூடியிருக்கிறார்கள் ஆதலால் நீ எழுந்திருப்பாயாக. யசோதை ஒரு கிண்ணத்தில் சுவைதரும் தின்பண்டத்தை வைத்து உனக்காகக் காத்திருக்கிறாள். ஆதலால் நீ எழுந்திருப்பாயாக.

உன் தந்தையான நந்தகோபாலன் உன் பெயரை அழைத்துக் கொண்டிருக்கிறார். ஆதலால் நீ எழுந்திருப்பாயாக. திருவேங்கடமலையில் குடிகொண்டுள்ள கண்ணனே! எங்கள் திருப்பள்ளி எழுச்சியினைக் கேட்டு நீ எழுந்தருள்வாயாக.

# கீர்த்தனை - 62

## *ராகம் : ஸ்ரீ ராகம்*

1 1 3
இன்னி ஜன்மமு லேடிகி ஹரிதாஸு
3 3
லுன்ன ஊரதா நுண்டின ஜாலு (பல்லவி)

4 1 1 1 3
ஹரி பக்துல இண்டி யன்னமு கொனுவாரி
3 3
வருவுடை உண்ட வலெ நன்ன ஜாலு
1 4 3 1 4 3
பரம பாகவத பவநம்புல ஜெட்ட
1 3 1 3
புருவு தானை பொடமின ஜாலு (1)

3 4 1 1 3
வாஸுதேவுனி பக்தவருல தாஸுலு முன்னு
3 3
ரோஸின எங்கிலி ருசி கொன்ன ஜாலு
3 3
ஸ்ரீ ஸதீஸுனி தலசின வாரி தாஸானு
3 3 3
தாஸுடை உண்ட தலசின ஜாலு (2)

1 1 1 3
ஸ்ரீவேங்கடேஸு ஜூசினவாரி ஸ்ரீபாத
1 3 3
ஸேவகுடை யுண்ட ஜேரின ஜாலு
4 3 1 3 4
ஈ விபு தாஸுல ஹிதுல பாத தூளி
1 1 3 3 1
பாவனமை ஸோகி ப்ரதிகின ஜாலு (3)

பகவானின் அடியார்களுக்குத் தொண்டு செய்தால் முக்தியடையலாம் என்ற கருத்தை அன்னமையா இப்பாடலில் கூறுகின்றார்.

இத்தனைப் பிறப்புக்கள் எதற்கு ? ஸ்ரீஹரியின் தொண்டர்கள் இருக்கின்ற ஊரில் வாழ்ந்தால் அதுவே போதுமானது.

ஸ்ரீஹரியினுடைய அடியார்களின் வீட்டில் உண்பவர்களுக்குத் தொண்டனாய் இருந்தால் அதுவே போதும். பாகவதர்களுடைய மாளிகையில் ஒரு பூச்சியாகப் பிறவி எடுத்தாலே போதுமானது.

வாசுதேவனுடைய அடியார்கள் உண்டு வைத்த மீதி உணவைச் சாப்பிட்டாலே போதுமானது. நாராயணனை யார் நினைக்கின்றார்களோ அவர்களின் அடியார்களுக்கு அடியார்களாக இருந்தால் அதுவே போதுமானது.

திருவேங்கடமுடையானை யார் தரிசிக்கிறார்களோ அவர்களுடைய திருவடிகளுக்குச் சேவகனாக இருந்தாலே போதுமானது. இவ்வளவு எதற்கு ? உன்னுடைய அடியார்களின் திருவடிகள் எங்கள் மீது பட்டால் நாங்கள் புனிதமடைந்து வாழ்வோம்.

# கீர்த்தனை - 63

3 1 3
நீ மஹிமோ நாலோன நிண்டின வலபு ஜாடோ
1 1 1 3 3 1
ஏமி ஸேது நன்நெப்புடு நெடவகு மய்யா! (பல்லவி)

1 1 3 1 3
எனஸி நீதோ நேனு எந்தவடி மாடாடினா
1 3 1 1 3
தனியது நாமனஸு தமி எட்டிதோ
1 1 1
வினயமுதோ ரெப்பலு வேயக சூசிநானு
1 1 1 1
நினுபுலை மமதலு நிச்ச கொத்தலு (1)

1 1 1 1 3
சலபெட்டி நீ தோனு ஸாரெ ஸாரெ பெனகின
3 1 3
நலயது நாமேனு ஆஸ எட்டிதோ
1 3 1 3 1
கொலுவுலோ நீ வத்த கூச்சுண்டி எந்த நவ்வின
1 1 1 1 1 3 4
தலபுலோ கோரிகலு தரகனி தான்யாலு (2)

1 3 3 1 1 3 3
கரகி யந்தாகா நின்னு காகிலிஞ்சு சுண்டிநானு
1 3 1 1 3
விடுவவு சேதுலு வேடு கெட்டிதோ
3 1 1 3
அடரி ஸ்ரீவேங்கடேஸ அலமேல் மங்கனு நேனு
1 3 1 1 1 1 1
தொடரி ஏலிதிவி ரதுலு தரிதீபுலு (3)

அன்னமையா தன்னை நாயகியாகவும் திருவேங்கடவனை நாயகனாகவும் பாவித்துத் தனக்குப் பிரிவினால் ஏற்பட்டத் துன்பத்தை இப்பாடலில் வர்ணிக்கின்றார்.

உன்னுடைய மகிமையோ அல்லது எனது மனதில் நிறைந்திருக்கின்ற காதல் மிகுதியோ தெரியவில்லை. எனக்கு உன்னை விட்டுப் பிரிவதற்கு மனமில்லை. ஆதலால் பெருமானே! நீ என்னை விட்டுச் செல்லாதே.

நான் உன்னுடன் எவ்வளவு நேரம் பேசினாலும் எனது மனதில் உள்ள அன்புத் தாகம் குறையவில்லை. கண் சிமிட்டாமல் உன்னை எவ்வளவு நேரம் பார்த்தாலும் உனது உருவம் புதிது புதிதாகத் தோன்றி எனது உள்ளத்தில் இனிமையான எண்ணங்களை ஏற்படுத்துகிறது.

அன்போடு உன்னை எத்தனை முறை கலந்தாலும் என் ஆசை மறையவில்லை. உன் அருகில் உட்கார்ந்து உனது பேச்சைக் கேட்டு மகிழ்ச்சி அடைந்தாலும் என்னுடைய ஆசைகள் குறையவே இல்லை.

உன்னை எவ்வளவு நேரம் அணைத்திருந்தாலும் என்னுடைய கைகள் உன்னை விட மறுக்கின்றன. திருவேங்கடவா அலமேலுமங்கையான என்னை நீ அடைந்ததனால் நான் களிப்படைந்தேன்.

## கீர்த்தனை - 64

*ராகம் : ஸ்ரீ ராகம்*

திருவீதுல மெரஸீ தேவ தேவுடு

கரிமல மிஞ்சின ஸிங்காரமுல தோடனு (பல்லவி)

திருதண்டெலபை நேகீ தேவுடிதே தொலு நாடு

ஸிறுல ரெண்டவநாடு ஸேஷுனிமீதா

முறிபேனா மூடோநாடு முத்யால பந்திரி கிந்தா

பொறி நாலுகோ நாடு புவ்வு கோவில லோனு (1)

கக்கன நைதவ நாடு கருடுனி மீதனு

எக்கெனு ஆரவ நாடு ஏனுகு மீதா

சொக்கமை ஏடவ நாடு ஸூர்யப்ரப லோனனு

இக்குவ தேருனு குர்ர மெனிமிதோ நாடு (2)

கனகபு டந்தலமு கதிஸி தொம்மிதோ நாடு

பெனசி பதோ நாடு பெண்ட்லி பீடா

எனஸி ஸ்ரீவேங்கடேஸு டிந்தி யலமேல்மங்கதோ

வனிதல நடுமனு வாஹனால மீதனு (3)

திருமலையில் ப்ரம்ஹோத்சவ சமயத்தில் பெருமான் பத்து நாட்கள் வெவ்வேறு வாகனங்களில் ஊர்வலம் வருகின்ற காட்சியினை அன்னமையா இப்பாடலில் வர்ணிக்கின்றார்.

அலங்காரத்துடன் பெருமான் திருவீதிகளிலே பவனி வருகின்றார்.

திருவேங்கடவன் முதல் நாள் பல்லக்கில் அமர்ந்து காட்சி தந்தார். இரண்டாவது நாள் ஆதிசேடனின் மேலும், மூன்றாவது நாள் முத்துப் பந்தலின் கீழும், நான்காம் நாள் புஷ்பப்பல்லக்கிலும் ஊர்வலம் வந்தார்.

ஐந்தாம் நாள் கருடவாகனத்திலும், ஆறாம் நாள் கஜேந்திரன் மேலும், ஏழாவது நாள் சூரியபிரபா வாகனத்திலும், எட்டாம் நாள் குதிரை பூட்டியத் தேரிலும் பக்தர்களுக்குக் காட்சியளிக்கும் வண்ணம் உலா வந்தார்.

ஒன்பதாம் நாள் பொன்னால் செய்யப்பட்ட பல்லக்கிலும் காட்சியளித்தார். பத்தாம் நாள் அலமேலு மங்கையுடன் கல்யாண கோலத்துடன் மணமேடையில் அமர்ந்து பக்தர்களுக்குக் காட்சியளித்தார். இதுபோன்று பெண்கள் சூழ்ந்து வர, பெருமான் வெவ்வேறு வாகனங்களில் திருவீதிகளில் உலா வந்தார்.

# கீர்த்தனை - 65

## *ராகம் : சுத்தராமகிரியா*

1 1
இன்னி ராஸுல யுணிகி இந்தி செலுவபு ராஸி
1 1 1 3 3
கன்னே நீ ராசி கூடமி கலிகின ராஸி (பல்லவி)

1 1 3 3 3 1 1 1 4
கலிகி பொமவிண்ட்லு கல காந்தகுனு தனு ராஸி
1
மெலயு மீனாட்சிகினி மீன ராஸி
1 1 1 1 3 1 1 1 4
குலுகு குச கும்பமுல கொம்மகுனு கும்ப ராஸி
3 4 1
செலகு ஹரிமத்யகுனு ஸிம்ம ராஸி (1)

1 1 3 3 1 1
சின்னி மகராங்கபு பய்யெத சேடெகு மகர ராஸி
1 1 1 1 1 1
கன்னெபாயபு ஸதிகி கன்னெ ராஸி
1 3 1 1 3 1 1 1
வன்னெமை பைடி துல தூகு வனிதகு துலா ராஸி
1 3 3 1 1 1
தின்னனி வாடிகோள்ள ஸதிகி விருச்சிக ராஸி (2)

1 1 1 1 4
ஆமுகொனு நொரபுல மெரயு நதிவகு வ்ருஷப ராஸி
3 3 3 1 1 1 1 1 1 1 1
காமிடி குட்டுமாடல ஸதி கர்க்காடகா ராஸி
1 1 3 1 1
கோமலபு சிகுரு மோவி கோமலிகி மேஷ ராஸி
1 1 1 1 3 2
ப்ரேம வேங்கடபதி கலஸே ப்ரிய மிதுன ராசி (3)

இப்பாடல் திருவேங்கடமுடையானின் துணைவியான அலமேலுமங்கையின் சிறப்பை விளக்குவதாக அமைந்துள்ளது.

அலமேலு மங்கையான இந்தப் பெண்ணின் ராசியானது அனைத்து ராசிகளும் கலந்த ஒரு சிறந்த ராசியாகும்.

இவளுடைய கண் புருவங்கள் வில் போன்று இருப்பதனால் தனுசு ராசி. மீன் போன்று கண்கள் இருப்பதால் மீன ராசி. இவளுடைய கொங்கைகள் கும்பம் போல் இருப்பதனால் கும்ப ராசி. இடையானது சிம்மத்தின் இடைபோன்று இருப்பதால் சிம்ம ராசி.

இவளின் ஆடையின் மேல் முதலையின் உருவம் இருப்பதால் மகர ராசி. இவள் கன்னிப் பருவத்தில் இருப்பதனால் கன்னி ராசி. இவளது வண்ணம் பொன்னுக்குச் சமமாக இருப்பதனால் துலாம் ராசி. கூர்மையான நகங்கள் கொண்டதனால் விருச்சிக ராசி.

துள்ளித் துள்ளி இவள் வருகின்றதனால் ரிஷப ராசி. மர்மமாகப் பேசுவதால் கடக ராசி. தளிர் போன்று உதடு இருப்பதால் மேஷ ராசி. அன்புடன் திருவேங்கடமுடையானைக் கூடியதனால் இவளது ராசி மிதுன ராசி.

## கீர்த்தனை - 66

### *ராகம் : ஸ்ரீ ராகம்*

கொலிசின வாரி பாலி கொல்ல லிவோ
இல நிட்டி தைவமவு இக வேரே கலரா! (பல்லவி)

எட்டைன நபய ஹஸ்த மெத்துக காசுகுன்னாட
வட்டே தாஸுல காசே நண்டா நீவு
தொட்டின பாபாலு போதோலு நீ நாம மந்த்ராலு
ஜட்டிகா லோகால வெத ஜல்லி நாடவு (1)

தலசின வாரி கெல்லா தனதான்யா லித்துணண்டா
ஒலஸி ஸ்ரீஸதி மோகுகுன்னாடவு
இல பாவனுலகா நிந்தரி ஜேஸே நண்டா
நெலமி பாத தீர்த்த மேரு ஜேஸி நாடவு (2)

புட்டிஞ்ச ஜீவுலனு புவனமு லோபல
கட்டிக ப்ரம்ஹனு நாபி கன்னாடவு
ரட்டுகா பாலுபடி சுட்டி ரட்சகத்வானிகே
இட்டே ஸ்ரீவேங்கடாத்ரி எக்கி நாடவு (3)

உலக மக்களின் பாவங்களைப் போக்குவதற்காகத் திருமலையில் திருவேங்கடவன் குடிகொண்டிருக்கிறார் என்ற கருத்தை அன்னமையா இப்பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

பூஜை செய்பவர்களுக்கு வரங்களை அள்ளிக் கொடுக்கின்ற இது போன்ற மற்றொரு கடவுள் உண்டோ ?

பெருமானே! நீ அடியார்களைக் காப்பதற்காகவே அபய ஹஸ்தத்தை வைத்துக் கொண்டிருக்கிறாய். பாவங்களைப் போக்குவதற்கு உன்னுடைய திருநாமங்களை விதைத்தாய்.

உன்னை நினைப்பவர்களுக்குச் செல்வங்களை அள்ளிக் கொடுப்பதற்காக மகாலட்சுமியைச் சுமந்தாய். மக்களைப் புனிதமாக்குவதற்காகவே உன்னுடைய பாதத் தீர்த்தத்தை நதியாக்கினாய்.

உலகில் மக்களைப் படைப்பதற்காக பிரம்மாவை உந்தியில் படைத்தாய். இந்த உலகைக் காப்பதற்காக திருவேங்கடமலையில் நின்று காட்சியளிக்கின்றாய்.

# கீர்த்தனை - 67

## *ராகம் : பைரவி*

3 4 1 1
கந்தமு பூஸே வேலே கம்மனி மேனா, ஈ
3 4 1 1 1 1 3
கந்தமு நீ மேனி தாவி கண்டே நெக்குடா! (பல்லவி)

3 1 1 1 1 1
அத்தமு சூசே வேலே அப்ப டப்படிகினி
3 1 1 1 1
அத்தமு நீ மோமு கண்டே நபுரூபமா!
3 1 1 1 1
ஒத்திக தாமர விரி நொத்தேவு கன்னுல, நீ
3 3 1 1 1 1 4
கத்தரி கன்னுல கண்டே கமலமு கனமா! (1)

3 3 1 1 3 1 3
பங்காரு வெட்டே வேலே படதி நீ மெயி நின்டா
3 3 1 1 1 1 1
பங்காரு நீ தனுகாந்தி ப்ரதி வச்சீனா!
3 1 1 3 1
உங்கரா லேடிகி நே ஒடிகபு வேள்ள
3 3 3
வெங்களி மனுலு நீ வேலி கோர போலுனா! (2)

1 1 3 1
ஸவர மேடிகி நே ஜடியு நீ நெருலகு
1 1
ஸவரமு நீ கொப்பு ஸரி வச்சீனா!
1 1 1 1
இவல ஜவுலு நீகு நேலே வேங்கடபதி
1 1 1
ஸவரனி கெம்மோவி சவி கண்டேனா! (3)

அலமேலு மங்கையின் அழகினை இப்பாடலில் அன்னமையா வர்ணனையாக அமைத்துள்ள பாங்கு சிறப்பிற்குரியது.

மங்கையே உன்னுடைய உடலுக்கு ஏன் சந்தனம் பூசுகின்றாய். உன்னுடைய உடலைவிட சந்தனம் மணம் பொருந்தியதோ ?

அடிக்கடி கண்ணாடியை ஏன் பார்க்கிறாய் ? உன் முகத்தை விட கண்ணாடி ஒளி பொருந்தியதா ? உன்னுடைய கண்களில் தாமரையை ஏன் தடவுகிறாய் ? உன்னுடைய அழகான கண்களைக் காட்டிலும் தாமரை சிறந்ததா ?

பொன் ஆபரணங்களை எதற்கு உடலில் அணிந்து கொண்டிருக்கிறாய் ? பொன் உன்னுடைய உடல் ஒளிக்குச் சமமாகுமா ? உன்னுடைய விரலுக்கு மோதிரம் எதற்கு ? அந்த மோதிரத்தில் பதிக்கப்பட்ட கற்கள் உன்னுடைய விரல் நகத்திற்கு ஈடாகுமா ?

உன்னுடைய நீளமான அடர்ந்த கூந்தலுக்குச் சவுரிமுடி எதற்கு ? சவுரி உன்னுடைய முடிக்கு ஈடாகுமா ? இந்தச் சுவைகள் எல்லாம் எதற்கு ? திருவேங்கடமுடையானின் இதழின் சுவையைக் காட்டிலுமா சுவை உடையது ?

# கீர்த்தனை - 68

## *ராகம் : ஸ்ரீ ராகம்*

1 3
விரஹ மொக்கந்த மாய விச்சேய வய்யா!
1 1 1 1 1
நிரதி நாகே ஜுூசி நீ வண்டா மொக்கிதிமி (பல்லவி)

1 1 1 1 1
செக்கிட செய்யே செலிகி ஸேஷ பரியங்க மாயா
1 2 1
ஜக்கவ சன்னுலு ஸங்க சக்ரமு லாய
1 1 4 1 1
உக்க செமடே ஜலதி உனிகி ஸேஸுூக நின்னு
1 1 3 1 1 3
ஜக்கனி ஸதி தலசி ஸாரூப்ய மந்தெ (1)

1 1 1 1
சலுவ கஸ்தூரி பூத ஸரி நீல வர்ண மாய
1 3 3 1
மெலுத நிவ்வெர கநிமிஷ த்ரிஷ்டாய
1 1 1 1 1 1
தொலுத சிகுரு பானுபு துலஸி பூஜாய, நின்னு
1 1 1 3
ஜலஜாட்சி தலபோஸி ஸாரூப்ய மந்தெ (2)

3 1 1 4 4
ஸிருல கட்டின தாளி ஸ்ரீதர பாவ மாய
1 4 1 1 1
வருஸ வலபு பக்தவத்ஸல மாய
1 1 1 3 3
இரவை ஸ்ரீவேங்கடேஸ! இந்தலொ நீவு கூடகா
1 1 1 3
ஸருஸ நின்னண்டி நாகே சாரூப்ய மந்தே (3)

திருவேங்கடமுடையானைப் பிரிந்ததனால் அலமேலு மங்கைக்கு ஏற்பட்ட துயரத்தினையும் அதைக் கண்ட தோழிக்கு ஏற்பட்ட பிரமையையும் இப்பாடலில் அன்னமையா வர்ணிக்கின்றார்.

பெருமானே! இவளுடைய விரகதாபம் புதுமையாக இருக்கின்றது. விரகத்தில் வாடுகின்ற இவளைப் பார்த்து பெருமானே நீயே என்று வணங்கினோம்.

கன்னத்தில் கை வைத்து படுத்திருக்கின்ற அவளது தோற்றத்தைப் பார்த்தவுடன் நீ ஆதிசேடனின் மீது பள்ளி கொண்டிருந்ததைப் போன்றிருந்தது. தலைவியின் இரண்டு கொங்கைகளும் சங்குச்சக்கரம் போன்று காட்சியளித்தன. அவளின் உடலில் ஏற்பட்ட மிகுதியான வேர்வையானது நீ கடலில் குடிகொண்டதைப் போன்று காட்சியளித்தது. அழகான இவள் உன்னைப் போன்றே காட்சியளித்தாள்.

அவள் உடம்பில் கஸ்தூரிப் பூசிக்கொண்டது உன்னுடைய நீல உடல் போன்று காட்சியளித்தது. விரகத்தினால் கண்கள் மூடப்படாத அவளது தோற்றமானது உன்னுடைய மூடாத கண்களைப் போன்று காட்சியளித்தது. அவளது தளிர்ப்படுக்கையானது உனக்குச் செய்த துளசிப் பூஜையாகத் தோன்றியது. இது போன்று அவள் உன்னையே நினைத்து உன் உருவம் அடைந்தாள்.

அவள் அணிந்த தாலியானது நீ மார்பில் வைத்த லட்சுமிபோல் தோற்றமளித்தது. அவளுடைய காதலானது நீ பக்தர்கள் மேல் காட்டுகின்ற அன்பு போல் தோன்றியது. திருவேங்கடவா! நீ இவளுடன் கூடியதால் அவள் உன்னைப் போலவே தோற்றம் அடைந்தாள்.

## கீர்த்தனை - 69

### *ராகம் : ஆஹிரி*

அதி துஷ்டுட நே நலஸுடனு
இதர விவேகம் பிக நேதி (பல்லவி)

எக்கட நென்னிட நேமி ஸேஸிதினோ
நிக்கபு தப்புலு நேரமுலு
கக்கன நின்னிட கலிகின நீவே
திக்கு காக மரி திக்கேதி? (1)

கோரபு பாபமு கோட்ல ஸங்க்யலு
சேருவ நிவே நா சேஸினவி
நீரஸுனகு நிடு நீ க்ருப நாகிக
கூரிமி நாயெட குணமேதி? (2)

எரிகி சேஸினதி எரகக சேஸின
கொரதலு நாயெட கோடுலிவே
வெரபு தீர்சி ஸ்ரீவேங்கடேஸா காவு
மரவக நா கதி மரி ஏதி ? (3)

தன்னுடைய குற்றங்களைப் பெருமானிடம் கூறி அதனை மன்னிக்குமாறு இப்பாடலில் அன்னமையா குறிப்பிடுகிறார்.

நானொரு தீயவன், எந்தச் செயலைச் செய்வதிலும் விருப்பம் இல்லாதவன். நான் இப்படி இருக்கும்போது எனக்கு நல்ல அறிவு எங்கிருந்து வரும்?

நான் குற்றங்கள், தவறுகள் எங்கெங்கு என்னென்ன செய்தேனோ? நீ தான் என்னைக் காப்பாற்ற வேண்டும். உன்னைத் தவிர வேறு வழி எனக்கில்லை.

நான் செய்த கொடுமையான கோடான கோடிப் பாவங்கள் உன்னுடைய அருளாலேதான் நீங்கின. ஆதலால் என்னை நீ காப்பாற்ற வேண்டும். நான் என்ன புண்ணியம் செய்தேன்?

கோடான கோடிக் குற்றங்களை நான் தெரிந்தும் தெரியாமலும் செய்துள்ளேன். திருவேங்கடவா! என்னுடைய அச்சத்தைப் போக்கச் செய்து என்னை நீ மறவாமல் காக்க வேண்டும். உன்னையன்றி வேறு எனக்கு என்ன கதி?

# கீர்த்தனை - 70

## *ராகம் : பௌளி*

3 3 1 3
ஏமீ நடுகநொல்ல ஹெச்சு குந்து லன நொல்லா

1 1 1 3
காமிஞ்சி நீ விச்சிதிவி கைவல்ய பதமு (பல்லவி)

1 1 3 1 4 1
புட்டுகுலகு வெரவ புவிலோன ஹரி நீகு

1 3 3 1
நட்டே நீ தாஸுட நே நைதே ஜாலு

1 1 1
வெட்டிகி நே ஜாதியைன வெரவா நீ நாமமுலு

1 1 3 1
ஒட்டி நா நாலிக மீத நுண்டே ஜாலு (1)

3 1 1 1 3
துரிதாலகு வெரவ துத வேமைனா ஹரி, நீ

1 1 1 1 3 1
கருண கைங்கர்யமு கலிகிதே சாலு

1 3 1 1
நிரதி நிந்த்ரியாலகு நே வெரவா நீ வாத்மா

3 3 1 3 1 3 1
பெற ரேபகுடவை பெரிகிதே ஜாலு (2)

1 1 3 1 1
ஏலோகமைனா வெரவ எப்புடு ஸ்ரீவேங்கடேஸ

1 1 1 3 1
பாலிஞ்சி நீ க்ருப நாபை பாரிதே ஜாலு

1 1 1 1
காலமெட்டைனா வெரவ கர்ம மெட்டைனா வெரவ

3 1 1
ஏலின நீ தாஸுலு நன்நிய்யா கொண்டே ஜாலுனு (3)

முக்தியைக் காட்டிலும் செல்வத்தைக் காட்டிலும் திருவேங்கடமுடையானின் தொண்டுதான் சிறந்தது என்ற கருத்தை அன்னமையா இப்பாடலில் கூறுகின்றார்.

நான் எதுவும் கேட்கமாட்டேன். இது குறைவாக இருக்கிறது, மிகுதியாக இருக்கிறது என்று நான் கூறமாட்டேன். நீதான் விருப்பப்பட்டு இந்தக் கைவல்யபதத்தை எனக்குக் கொடுத்தாய்.

இப்புவியில் பிறவி எடுப்பதற்கு அஞ்சமாட்டேன். ஆனால், நான் உனக்குத் தொண்டனாக இருந்தால் அதுவே போதும். எந்தச் சாதியானாலும் நான் பயப்படமாட்டேன். உன்னுடைய திருநாமமானது என்னுடைய நாவில் இருந்தால் அதுவே போதும்.

துன்பங்களைக் கண்டு நான் அஞ்சமாட்டேன். உனக்குக் கைங்கர்யம் செய்கின்ற பாக்கியம் கிடைத்தால் அதுவே போதும். காமாதி இந்திரியங்களுக்கு நான் அஞ்சமாட்டேன். என்னுடைய உள்ளத்தில் நீ நிலையாக இருந்தால் போதும்.

எந்த உலகமானாலும் அஞ்சமாட்டேன். உன்னுடைய அருள் என்மேல் விழுந்தால் போதும். காலம், கருமம் எதைக் கண்டும் நான் அஞ்சமாட்டேன். திருவேங்கடவா! உன்னுடைய அடியார்கள் என்னை ஏற்றுக்கொண்டால் அதுவே போதுமானது.

## கீர்த்தனை - 71

### *ராகம் : சாமந்தம்*

3 3 1 1 3
சூட ரம்மா செலுலாலா ஸுதி சக்கதனாலு
1 3 1 1 1 1 1 1 1
சுட்டு கொன்னா பதி காந்தி குருலே போலெனு (பல்லவி)

3 3 1 3 1
மொகமு சந்துரு போலே முஞ்சின ஈ இந்திரகு
1 3 1 3 1 1 1 3 1 1
தகின தோபுட்டு காதடே கனகா
3 1 3 1 3
நக வம்ருதமு போலே நலினாட்சி கதியுனு
1 3 1 1 1 4 1 1
தகின புட்டின இண்டி தனமே கனகா (1)

1 3 1 1 1
ஸதி குணமிந்தானு ஸமுத்ரமுனே போலே
1 1 1 3 1 1 1 1 1
ததி நாதஃகெகு தன்றி கனகா
1 3 3 3 3
மிதிகா கன்னுலு கண்டு மீனமுல போலே நவி
3 1 3 3 1 1 3 1 1
கதிகூடி தமவாரி கடவே கனகா (2)

1 1 3 1 1 1 3 3
தருணி பாதாலு கல்பதருவு சிகுரு போலே
1 3 3 1 3 1
பரகக தன வெனு பலமண்டானு
3 3 1 1 3 3 1
கரிம ஸ்ரீவேங்கடேஸு கைகொனி பெண்ட்லாடி ஈபே
1 3 3 1
ஸரவு லாதனி போலே ஸரஸுடண்டானு (3)

அன்னமையா இப்பாடலில் அலமேலுமங்கையின் அழகையும், பெருமையையும் வர்ணிக்கின்றார்.

தோழிகளே! இவளுடைய அழகைப் பாருங்கள். இவளுடைய கணவனின் தேக ஒளியானது இவளின் கூந்தலைப் போன்று காட்சியளிக்கிறது.

சந்திரன் அலமேலு மங்கையின் சகோதரன். ஆதலால், அவளுடைய முகம் சந்திரனைப் போன்று காட்சியளிக்கின்றது. அமிர்தம் அவளது பிறந்த வீட்டுச் செல்வம். ஆதலால் அவளுடைய சிரிப்பு அமிர்தம் போல் இருக்கின்றது.

அவளுடைய தந்தை கடல் போன்றவன். ஆதலால் அவளுடைய குணமும் கடல் போன்று விரிந்து காணப்படுகின்றது. இவள் கடல் உள்ள இடத்தில் இருப்பதால் இவளின் கண்களும் மீன் போன்று காட்சியளிக்கின்றன.

அவளது திருவடிகள் கற்பக விருட்சம் தளிர் போன்றது. ஆதலால் கற்பக விருட்சம் எவ்வாறு கேட்ட அனைத்தையும் கொடுக்குமோ அதுபோன்று இவளது திருப்பாதங்களும் கேட்ட அனைத்தையும் கொடுக்கும் தன்மை வாய்ந்தது. திருவேங்கடமுடையானை மணந்து கொண்டதால் இவள் அவனைப் போன்றே எல்லாச் சிறப்புக்களையும் பெற்றுள்ளாள்.

# கீர்த்தனை - 72

3 3 1 1 3 1 3 1
நகுபாடுலிவி கொன்னி நடபேவு காக ஈ

3 3 1 3 1 1 1 3
அகடு ஜேதலு ஸேஸி ஆடிக கெக்குதுரா! (பல்லவி)

3 1 1 1 1 3 1 3
மகுவனே கட்டு கொண்டே மங்கள ஸூத்ரமு காணு

3 1 3 1 3
யெகஸக்கேல கொல்லெதா லேமந்துரோ!

3 1 1 3
ஜகமுலோ நெவ்வரைனா ஸதுலகு புருஷுலு

1 3 3 1 3 3 1 1 3 1 1
தக கட்டுதுறு காகா தாமு கட்டு கொந்துரா? (1)

1 1 1 1 1 1 1
ஆகே புட்டி நில்லே நீகு நாகரமு ஸேஸு கொண்டி

1 3 3 3 1 3
நீகட பொந்தைன ஸது லேமந்துரோ!

1 1 1 1 1 3 1
ஏகமை தம ஸதுல இல்லு நிஞ்சு கொண்ட காகா

1 3 4 1 3
ஏகடா கணுலைன வரில்லடமு லுந்துரா? (2)

3 3 1
அலமேலு மங்க வல்லா நன்னி ஸிறுலு நந்திதி

1 1 1 3
வில நீ கூடபு ஸது லேமந்துரோ!

1 1 1 1 1 1 1 3 1
கலவி ஸ்ரீவேங்கடேஸா காந்தல கித்துரு காக

1 1 1 3 1
அலரி ஸதுல ஸொம்மு காஸ பட ஜூதுரா? (3)

திருவேங்கடமுடையானின் செயல்களைக் கேலி செய்து அன்னமையா நகைச்சுவையாக இப்பாடலை அமைத்துள்ளார்.

நீ வெட்கப்படும்படியாக சில செயல்களைச் செய்தால் உன்னைப் பரிகாசத்திற்கு உள்ளாக்காமல் இருப்பார்களா ?

நீ ஒரு பெண்ணைத் தாலியாகக் கட்டிக் கொண்டாய். இதனால் இடைச்சிகள் உன்னைப் பரிகாசம் செய்யாமல் இருப்பார்களா ? உலகில் பெண்களுக்கு ஆண்கள் தான் தாலி கட்டுவார்கள். தங்களுக்குத் தாங்களே கட்டிக் கொள்வார்களா ?

அவளது பிறந்த வீட்டை உன் வீடாகச் செய்து கொண்டாய். இதனால் மற்ற மனைவிகள் என்ன நினைப்பார்கள். திருமணமான பின்பு மனைவி தான் கணவன் வீட்டிற்குச் செல்வாள். ஆனால் பெருமை வாய்ந்தவர்கள் வீட்டோடு மாப்பிள்ளையாக இருப்பார்களா ?

அலமேலு மங்கையை மனைவியாக அடைந்ததால் நீ எல்லாச் செல்வங்களையும் அடைந்தாய். இதனால் உன்னுடைய தோழிகள் உன்னைப் பார்த்து நகைக்க மாட்டார்களா ? திருவேங்கடவா! உலகில் தங்களுடைய செல்வங்களை மனைவிக்குக் கொடுப்பார்கள். ஆனால் மனைவியின் செல்வத்திற்கு யாராவது ஆசைப்படுவார்களா ?

# கீர்த்தனை - 73

## *ராகம் : காம்போதி*

3 3 3 1 1 3 1
எப்புடு கானி ராடோ எந்த தடவாயா, காலி
1 3 1 1
சப்பு டாலகிஞ்சி மதி ஜல்லு ரனெ நம்மா! (பல்லவி)

3 3 1 1 1 1 3 1
இத்தர மதரிபாடு ஏகாந்தான நாடு கொன்ன
3 3 1
ஸூத்துலு தலசி மேனு சுருகனே நம்மா!
3 3 1 1 3 1 1 1 1 3 3
பெத்தகா கஸ்தூரி பொட்டு பெட்டின நாதடு கோர
1 3 1 3 3 3
தித்துட தலசி மேனு திகுலனே நம்மா! (1)

1 1 1 3 3 1 1
பாயக யாதடு நேநு பவ்வளிஞ்சே இண்டி வங்கா
3 1 1 3 3 1
போயி போயி கடு சின்ன போதினோ யம்மா!
1 1 3 3 3 3 3 1
தோயபு குப்பல சன்னு தோயி மீத வாடொத்தின
1 1 3 4 1
பாயபு சந்துருல ஜூசி பிரமஸிதி நம்மா! (2)

1 3 2 3 1 1
கூடின ஸௌக்கியமுலந்து கொதலேனி வானி நா
3 1 1 3 3
வேடுக மதிதலசி வெரகாய நம்மா!
3 1 1 3 3 1 3
ஈடுலேனி திருவேங்கடேஸு டிதே நா தோட
3 1 1
நாடி நட்டே நா சித்த மலரிஞ்சே நம்மா! (3)

மனைவி கணவனைப் பிரிந்த அந்தத் துயரத்தைத் தோழியிடம் கூறுகிறாள். அப்பொழுது தான் கணவனுடன் மகிழ்ச்சியாக நடத்திய இல்லற வாழ்க்கையை நினைத்துக் கூறுவதாக அன்னமையா இப்பாடலை அமைத்துள்ளார்.

அவர் எப்போது வருவார். அவரைப் பார்த்து நீண்ட நாளாயிற்று. அவருடைய கால்களின் சப்தம் கேட்டு எனது மனது துடித்தது.

நாங்கள் இருவரும் தனியாகப் பேசிக்கொண்ட பேச்சை நினைத்த போது என்னுடைய உடல் பூரிப்படைந்தது. நான் வைத்த கஸ்தூரிப் பொட்டை அவர் தன் நகத்தால் சரி செய்ததை நினைத்தபோது என்னுடைய உள்ளம் கவலைப்பட்டதடி தோழி.

அவரும் நானும் படுத்திருந்த அறைக்கு நான் சென்றபோது அவர் இல்லாததைக் கண்டு என் மனம் வருந்தியதடி தோழி. அன்று என்னுடைய மார்பில் அவர் தன்னுடைய நகத்தைக் கொண்டு தொட்டது சந்திர வடிவத் தழும்பாக இருப்பதைப் பார்த்து பிரமித்துப் போனேனடி தோழி.

நாங்கள் இருவரும் கூடிய இணையில்லா இன்பத்தை நினைத்துப் பார்த்து பரவசமடைந்தேன் அப்போது இணையில்லாத திருவேங்கடவன் என்னுடன் விளையாடுவதாகவே நினைத்து என்னுடைய உள்ளம் மகிழ்ந்ததடி தோழி.

# கீர்த்தனை - 74

## *ராகம் : பாடி*

1 4 3 4 3
புட்டு போகுலமு நேமு புவி ஹரிதாஸுலமு
1 3 3 1
நட்ட நடிமி தொரலு நாகிய்ய வலெனா! (பல்லவி)

1 3 3 3 1
பல்லகீலு நந்தலாலு படி வாகே தேஜீலு
வெல்லவிரி மஹாலஷ்மி விலாஸமுலு
1 1 3 3 1
தல்லி யாகெ மகனினே தைவமனி கொலிசேமு
3 1
ஒல்லகே மாகே ஸிருலு ஒருலிய்ய வலெனா? (1)

3 1 3 2 1
கிராமமுலு, ரத்னமுலு, கஜமுக்ய வஸ்துவுலு
4 1 1 1 3 4 3
ஆமனி பூகாந்தகு நங்கபேதாலு
4 1 3 4 1
பாமினி யாகெ மகனி ப்ரானதாரி லெங்கலமு
1 1 2
ஓமி மாகாதடே இச்சீ ஒரு லிய்ய வலெனா? (2)

1 3 1 3 3
பஸகல பதவுலு ப்ரம்ஹ நிர்மிதமுலு
3 1 1 1 3
வெஸ ப்ரம்ஹ தன்றி ஸ்ரீவேங்கடேஸுடு
3 1 3
யெஸகி யாதடே மம்மு நேலி இன்னியு நிச்சே
3
ஒஸகின மா ஸொம்முலு ஒருலிய்ய வலெனா? (3)

ஸ்ரீஹரியின் பக்தர்கள் எந்தக் குறையும் இன்றி அனைத்துச் செல்வங்களையும் பெற்று வளமுடன் வாழ்வார்கள் என்று அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகின்றார்.

பிறவியிலே செல்வ வளம் படைத்த நாங்கள், ஸ்ரீஹரியின் அடியார்களாக இருக்கின்றோம். இத்தகு சிறப்பு மிகுந்த எங்களுக்கு மற்றவர்களின் செல்வம் தேவையா?

பல்லக்கு, விரைந்து செல்லும் குதிரைகள் எல்லாம் மகாலட்சுமியிடம் இருக்கின்றன. எங்களுக்குத் தாயான அவளுடைய கணவனை நாங்கள் வணங்குகின்றோம். அப்படி இருக்கும்போது எங்களுக்குப் பிறர் செல்வங்களை அளிக்க வேண்டுமா?

நவரத்தினங்கள், யானைகள் மற்ற செல்வங்கள் அனைத்தும் பூமிப்பிராட்டியினுடையவை. அந்தப் பிராட்டியினுடைய கணவனுக்கு நாங்கள் தொண்டர்கள். எங்களுக்கு அவரே கொடுக்கின்றார் மற்றவர்கள் அளிக்க வேண்டுமா?

உயர்ந்தப் பதவிகள் அனைத்தும் பிரம்மாவினுடையது. அந்தப் பிரம்மாவின் தந்தையே எங்களது திருவேங்கடவன். அவரே எங்களை ஏற்றுக்கொண்டு இந்தச் செல்வங்கள் அனைத்தையும் கொடுத்தார். ஆகையால் மற்றவர்கள் எங்களுக்கு அளிக்க வேண்டுமா?

# கீர்த்தனை - 75

## *ராகம் : ஸாளங்க நாடா*

1 3 1 1
பரமாத்முடைன ஹரி பட்டபுராணிவி நீவு
4 3 3 1
தர மம்மு விசாரிஞ்ச தகு நீகு நம்மா! (பல்லவி)

1 1 1 1 1 1
கமலஜூ கன்ன தல்லி காமுனி கன்ன தல்லி
3 3
அமருல கன்ன தல்லி ஆதிம லஷ்மி
1 1 1 1 1
விமலபு நீ பதிகி வின்னபமு ஸேஸி மம்மு
1 1 3 1 1 3
நெமகி ஏலிதி தயா நீகே தகுநம்மா! (1)

1 3 1 3 1 3 1 1 1 3 1 3
காமதேனு தோபுட்டுகா கல்பகமு தோபுட்டுகா
3 1 3 3 1 3 1 3
தோமடி சல்லனி சந்துருடு தோபுட்டுகா
3 1 1 1
நீ மகனி பம்புனனு நிஜஸிறு லிச்சிதிவி
1 1 1 1 3
நேமபு விதரனமு நீகே தகுநம்மா! (2)

1 4 1 1 3
பால ஜலதி கன்யவு பத்மாஸனிவி நீவு
1 3 3 1 1 1 1 3
பாலபண்டே ஸ்ரீவேங்கடபதி தேவிவி
1 3 1 1 1
ஏலின இதனி பன்ட்ல கிஹ பராலிச்சி மா
1 3 3 1 3 4
பால கலிகிதிவி சம்பந்தமு மேலம்மா! (3)

அன்னமையா மகாலட்சுமியைப் புருஷகாரமாகப் பாவித்து அவளைப் புகழ்ந்துஇப்பாடலில் வர்ணிக்கின்றார்.

தாயே நீ பரம்பொருளான ஸ்ரீஹரிக்குப் பட்டத்துராணியாக இருக்கின்றாய். நீ எங்களுக்கு அருள் புரிய வேண்டும்.

நீ மன்மதனுக்கும் பிரம்மாவிற்கும் தேவர்களுக்கும் தாயாக இருக்கின்றாய். நீ உன் கணவனிடம் கூறி எங்களைக் காப்பாற்றினாயே இது உனக்கே பொருந்தும்.

காமதேனு, கற்பக மரம், சந்திரன் இவர்களுடன் நீ உடன் பிறந்தவள். உன்னுடைய கணவன் கட்டளையின்படி செல்வங்களை எல்லாம் எங்களுக்கே அள்ளித்தந்தாய். இவ்வாறு செய்வது உனக்குத்தான் பொருந்தும்.

பாற்கடலில் தோன்றிய கன்னியே பத்மாசனத்தில் அமர்ந்திருக்கின்றாய். பாற்கடலில் பள்ளிகொண்டிருக்கின்ற திருவேங்கடமுடையானின் பட்டத்துராணியான நீ அவரது தொண்டர்களான எங்களுக்கு முக்தியையும் செல்வத்தையும் கொடுத்து எங்களது உறவினை மேம்படுத்துவாயாக.

# கீர்த்தனை - 76

## *ராகம் : தெலுகு காம்போதி*

எட்டு நித்திரிஞ்செனோ ஈ ரிதி ரெல்லானு
பட்டி சுட்டுக பய்யெத படதீஸி கிருஷ்ணடு (பல்லவி)

கடு வேகுவனு லேசி கன்னுலு புலுமுகுண்டு
கடுபக்கலிஞ்சி யாகலய்யீ நனி
குடுகொக சேபட்டி நா கொங்கொக சேத பட்டி
அடிகீ நன்னமு கிருஷ்ணு டப்புடே சூடரே (1)

பெருகு தருவ நன்னு திரிகிரா ஜூட்டி சுட்டி
குருச மாடல முத்து குனியுசுனு
திரிகி கவ்வபு கோல திக்கா காகிலிஞ்சி பட்டி
தரி, வென்ன பெட்டு மனி தகனே ஈ கிருஷ்ணடு (2)

தனகு பெட்டிநதி யாதலி படுசுல கிச்சி
கினிஸி முச்சிலி யாரகிஞ்சி தானு
அனயமு ஸ்ரீவேங்கடாத்ரி கிருஷ்ணுடு வேடு
தனிஸி தன எங்கிலி தக நாகு நிச்சனே (3)

திருவேங்கடமுடையானைக் கண்ணனாகப் பாவித்து அக்கண்ணனாகிய சிறுகுழந்தையின் சுட்டிச்செயல்களை இயற்கையாக வர்ணித்துள்ளார் அன்னமையா.

கண்ணன் எப்படித் தூங்கினானோ? கண்ணன் எப்படித் தூங்கினானோ? கண்ணன் எப்படி எழுந்து வந்தானோ?

விடியற்காலையில் எழுந்து கண்ணைக் கசக்கிக்கொண்டு பசிக்கிறது என்று கூறி ஒரு கையில் கிண்ணியை எடுத்து மற்றொரு கையில் என்னுடைய முந்தானையைப் பிடித்து சாதம் வேண்டுமென்று கண்ணன் கேட்கின்றான் பாருங்கள்.

நான் தயிர்க்கடையும் பொழுது என்னைச் சுற்றிச் சுற்றி வந்து பேச்சால் என்னை மயக்கி தயிர்க்கடையும் மத்தைப் பிடித்து வெண்ணெய் வேண்டும் என்று கேட்கிறான் கண்ணன்.

தனக்குக் கொடுத்ததைத் தன் தோழர்களுக்கும் கொடுத்து மகிழ்ந்தான். திருமலையில் குடி கொண்டுள்ள திருவேங்கடவனான கண்ணன் தான் உண்ட எச்சத்தை எனக்குக் கொடுத்தான்.

# கீர்த்தனை - 77

## *ராகம் : ஆஹிரி*

3 1 1 3 1
குட்டுன கோரிகலெல்லா கொல்ல வட்டீ நீ

1 3 1 1 1 3 3
பட்டபு தேவிகி நீகு பல்லாண்டு பல்லாண்டே (பல்லவி)

1 3 3 3 3 1
பச்சல ஸந்தி தண்டலு பாஹுவு புருலு மெரய

1 1 3
நெச்செலிபை மேனு ஸோக நிலுசுண்டி

1 1 3 3 3 1 1 1
பச்ச விலுகானி தல்லி பங்காரு தோஸிட நீபை

1 1 1 3 1 3
பச்ச கப்பூரமு சல்லீ பல்லாண்டு பல்லாண்டே (1)

1 1 1 1 1 3
மந்தனபு மாடலதோ மாடுக நின்னு ஸொலஸி

1 1 3 3 3 3 1
கொந்தபு கோள்ள நிக்கு கும்மரிம்புசு

1 3 3 3
செந்தல செங்கலுவலு செலுலு சே நந்திய்யக

1 1 1 1 3 1 3
பந்தமுன நீபை வேஸி பல்லாண்டு பல்லாண்டே (2)

3 3
அலரு மேடலோன அலமேலு மங்க நீ

1 3 1
யலயிக தீர ப்ரேம நலர ஜேஸி

1 1 1 3 1 3
கலஸி வேங்கடேஸ நீ கௌகிலி சேகொனீ நிதே

1 1 1 1 3 1 3
பலுமாரு மீகு மீகு பல்லாண்டு பல்லாண்டே (3)

அன்னமையா பெருமானுக்கும் பிராட்டிக்கும் பெரியாழ்வார் போல் பல்லாண்டு பாடுகிறார்.

எங்களின் மனங்களைக் கொள்ளை கொள்கின்ற உன்னுடைய பட்டத்தரசிக்கும் உனக்கும் பல்லாண்டு பல்லாண்டே.

கழுத்தில் அணிந்த மாலைகளும், கரங்களில் அணிந்த ஆபரணங்களும் ஒளிவீசிக்கொண்டிருக்க, தன் கணவனை உரசிக்கொண்டு மன்மதனுக்கு தாயான மகாலட்சுமி கைநிறைய பச்சைக் கற்பூரத்தை உன் மேல் தூவினார். உங்கள் இருவருக்கும் பல்லாண்டு பல்லாண்டே.

பிரியமான வார்த்தைகளைப் பேசிக்கொண்டு உன்னை அணுகி ஒளிவீசிய நகங்களைக் கொண்டு அருகில் இருக்கின்ற தோழிமார்கள் கொடுத்த பூமாலைகளை எடுத்து அலமேலுமங்கை உன் கழுத்தை அலங்கரித்தாள், இருவருக்கும் பல்லாண்டு பல்லாண்டே.

மாளிகையில் இருக்கின்ற அலமேலு மங்கையின் கோபத்தைப் போக்கி மகிழ்ச்சியடையச் செய்து அவளை அன்புடன் அணைத்துக் கொண்ட திருவேங்கடவா! உங்கள் இருவருக்கும் பலமுறை பல்லாண்டு பல்லாண்டே.

# கீர்த்தனை - 78

3 3 1 1 1 3
பண்டி விரிசி பின்ன பாபலதோ நாடி

3 3 3 3 3 3
துண்டகீடு வச்சே தோபூசி (பல்லவி)

1 3 1
பெருகு வென்னலு ப்ரியமுன வே

1 3
மரு முச்சலிஞ்சு மாய காடு

1 4 3 1
வெரவுன்ன தன விதமு தாசு கொனி

3 3 3 3 3
தொர தொங்க வச்செ தோபூசி (1)

1 3 3 1 1 1 1 1 1
படுசு குப்பெதா பரபுபை போக

3 1 3 3 1
முடி கொங்கு நித்ர மும்புனனு

1 3 3 3 1 1
படியு தா வத்த பவளிஞ்சி நட்டி

1 3 1 3 3 3 3
தொடுகு தொங்க வச்சே தோபூசி (2)

3 1
கொல்ல பல்லெலோ இல்லில்லூ சொச்சி

1 3 1 3 1 3
கொல்ல லாடின கோடே காடு

1 1 3 3
எல்லைனா வேங்கடேஸுடு இதே

1 3 3 3 3
தொல்லிலு தொங்க வச்சே தோபூசி (3)

திருவேங்கடவன் கண்ணனாக கண்ணாமூச்சி ஆடுகின்ற காட்சியை அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகின்றார்.

வண்டியை உடைத்து, சிறு குழந்தைகளுடன் விளையாடும் குறும்புக்காரனான கண்ணன் கண்ணாமூச்சிக் காட்டுகிறான்.

தயிர், வெண்ணெய் போன்றவற்றைப் பிரியத்துடன் பலமுறை திருடிய மாயன், திருடன்போல உடலைக் குறுக்கிக் கொண்டு இங்குக் கண்ணாமூச்சி காட்டுகின்றான்.

இளம்பெண்கள் தூங்கிக் கொண்டிருந்த படுக்கையில் அவர்களின் அருகில் உறங்கிய கள்வன் கண்ணாமூச்சி காட்டுகின்றான்.

ஆயர்பாடியில் வீடு வீடாக நடந்து கொள்ளையடித்த இளைஞனான திருவேங்கடவன் முன்புபோலவே கள்வனாக வந்து கண்ணாமூச்சி காட்டுகின்றான்.

# கீர்த்தனை - 79

## *ராகம் : பூபாளம்*

1 1 3 1
ஹரிகிருஷ்ணா மேலு கொனு ஆதி புருஷா!
1 1 1 1 1 3
தருவாத நாமோமு தப்ப கிடு சூடு (பல்லவி)

1 1 3
மேலு கொனு நாயன்னா மெல்லனே நீ தோடி
3 3 1 3 3 3
பாலு லதே பிலிசேரு படி நாடனு
1 3 3 1 1 3
சாலு நிக நித்துரலு சத்தி கூள்ள பொத்து
1 3
வேளாய நா தன்றி வேக லேவே (1)
1 3 1 1 1 3 3
கனுதெருவு நாதன்றி கமலாப்து டுதயிஞ்சே
1 1 3 3
வனித மொக மஜ்ஜனுமு வடி தெச்செனு
1 1 3 1 3 3
மொனசி மீ தன்றி இதே முக்தாட ஜெலகீனி
3 1 1 3 1 1 3 1
தனுஜாந்தகுண்ட இக தக மேலு கோவே (2)

1 1 3 3
லேவே நாதன்றி நீ லீலலடு ஒகடேரு
1 1 3 1 1 3
ஸ்ரீவேங்கடாத்ரிபதி ஸ்ரீராமனுடா!
3 1 3 3 3
தேவதலு முனுலு ஜென்தின நாரதாதுலு
3 3 1 3
ஆவலனு பாடேரு ஆகஸமு நந்து (3)

திருவேங்கடமுடையானைக் கண்ணனாகப் பாவித்து அவரைத் துயில் எழுப்பும் திருப்பள்ளி எழுச்சியாக அமைந்தது இப்பாடல்.

கண்ணனே எழுந்திரு. ஆதிக்கடவுளே என்னுடைய முகத்தை இப்போதே பார்,

உன்னுடன் விளையாடும் குழந்தைகள் விளையாடுவதற்காக உன்னை அழைக்கிறார்கள். நீ எழுந்திரு. நீ உறங்கியது போதும். காலை உணவு அருந்தும் நேரம் வந்துவிட்டது. என் அப்பனே! விரைவாக எழுந்திரு.

கதிரவன் உதித்துவிட்டான் கண்ணனே கண்விழிப்பாயாக. நீ குளிப்பதற்காக இந்தப் பெண் அனைத்தையும் ஆயத்தம் செய்துவிட்டாள். உன்னைக் கொஞ்சுவதற்காக உன் தந்தை காத்திருக்கிறார். அரக்கனைக் கொன்றவனே எழுந்திரு.

உன் லீலைகளை எல்லோருமே புகழ்ந்து கொண்டிருக்கிறார்கள். என் அப்பனே எழுந்திரு. வேங்கடமலையில் குடிகொண்டிருக்கிற கண்ணனே தேவர்களும், முனிவர்களும், நாரதரும் ஆகாயத்தில் உன்னைப் புகழ்ந்து பாடிக்கொண்டிருக்கிறார்கள். நீ எழுந்தருள்வாயாக.

# கீர்த்தனை - 80

## ராகம் : ஸாளங்கா நாடா

3 3 3 1 1 3
முத்துகாரே யஸோத முங்கிடி முத்யமு வீடு

3 3 3 1 1 3
தித்தராணி மஹிமல தேவகி ஸுதுடு (பல்லவி)

1 1 3 1 1 1
அந்த நிந்த கொல்லெதலா அரசேதி மாணிக்கமு

1 3 1 1
பந்தமாடே கம்ஸுனி பாலி வஜ்ரமு

1 1 3 1 3 3 1 3
காந்துல மூடு லோகால கருட பச்ச பூஸா

1 1 3
செந்தல மாலோ நுன்ன சின்னி கிருஷ்ணுடு (1)

1 1 1 3 1 3 3
ரதிகேலி ருக்மிணிகி ரங்கு மோவி பகடமு

1 3 4 1 3 4 1
மிதி கோவர்த்தனபு கோமேதிகமு

1 2 1 3 3
ஸதமை ஸங்க சக்ராலா ஸந்துல வைடூர்யமு

3 1 3 1 1 3
கதியை மம்மு காசேடி கமலாட்சுடு (2)

1 3 1 1 3 1 3
காளிங்குனி தலலபை கப்பின புஷ்யாராகமு

1 1 1 3 3
ஏலேடி ஶ்ரீவேங்கடாத்ரி இந்த்ரநீலமு

1 4 3 3 1
பாலஜலநிதி லோன பாயனி திவ்ய ரத்னமு

3 3 3 1 3 4 3
பாலுனி வலே திரிகீ பத்மநாபுடு (3)

திருவேங்கடமுடையானை நவரத்தினங்களாகப் பாவித்து வர்ணிக்கின்றார்.

பால் வடியும் குழந்தையான இவன் யசோதை வீட்டு முத்து, பெருமைக்குரிய மகிமை கொண்ட இவன் தேவகியின் மகன்.

இடைச்சியர்களுக்கு இவன் உள்ளங்கை மாணிக்கம். பகைவனான கம்சனுக்கு இவன் வஜ்ரம். ஒளி கொடுப்பதில் இவன் மூன்று உலகங்களுக்கும் கருடபச்சை. இத்தகைய சிறுவனான கண்ணன் எங்களுடன் இருக்கின்றான்.

இவன் வண்ணம் பொருந்திய ருக்மணி உதட்டிற்குப் பவளம். இவன் உயர்ந்த கோவர்த்தனம் போன்ற கோமேதகம். இவன் சங்குச் சக்கரங்களால் ஆன வைடூரியம். செந்தாமரைக் கண்ணனான இவன் தான் எங்களைக் காப்பாற்றுகின்றான்.

இவன் காளிங்கன் தலைமேல் பரவிய புஷ்பராகம். இவன் திருவேங்கடமலையில் குடிகொண்டிருக்கின்ற இந்திர நீலம். பாற்கடலில் நிலையாக இருக்கின்ற ஒரு பெருமைக்குரிய ரத்தினம். திருவேங்கடவன் கண்ணனாக விளையாடிக் கொண்டிருக்கின்றான்.

# கீர்த்தனை - 81

## *ராகம் : பாடி*

வென்னலு தொங்கிலு நாடி வெர்றிவா நீவு?
வின்ன கன்ன ஜாட காது வெர்றிவா நீவு? (பல்லவி)

சேரி நின்னு நொல்ல நட்டி ஜீவுல நீ உதரான
வீருடவை மோசேவு வெர்றிவா நீவு?
நார பேரு நுடிகிதே நா பேரண்டா தகிலேவு
வீரான ஜுாட்டமவை வெர்றிவா நிவு? (1)

பண்டு லைன வாரிகி பரதந்த்ருடவை யீ
வெண்ட வெண்ட திரிகேவு வெர்றிவா நீவு ?
அண்டே நனராது ரெண்டு அடுகுலகே சொச்சேவு
விண்டே மாகு நவ்வு வச்சீ வெர்றிவா நீவு ? (2)

பாவனுலை லோக மெல்லா பதுகுமண்டா பேள்ளு
வேவேலு வெட்டு கொண்டிவி வெர்றிவா நீவு ?
ஸ்ரீவேங்கடேஸுாடவை செந்தி வரமுலிச்சேவு
வேவேக நெவ்வரிகைனா வெர்றிவா நீவு ? (3)

கூடாரை வெல்லும் சீர்கோவிந்தனின் பெருமையை அன்னமையா இப்பாடலில் வர்ணிக்கின்றார்.

சிறியவனாய் இருந்தபோது வெண்ணெய், தயிர் திருடிய பைத்தியக்காரனான இவனின் செயல்களை நாங்கள் கண்டதுமில்லை, கேட்டதுமில்லை.

பெருமானே! வேண்டாதவர்களை நீ உன்னுடைய வயிற்றில் வைத்து ஒரு வீரன்போல் நீ அவர்களைக் காத்துக்கொண்டிருக்கிறாய். நீ என்ன பைத்தியமா? நாரா என்று சொன்னவுடனே நாராயணா என்று என் பெயரைத்தான் அழைக்கிறார்கள் என்று உறவினரைப்போல் அவர்களுக்கு உதவுகிறாயே, நீ என்ன பைத்தியமா?

உன்னுடைய அடியார்களுக்குத் தொண்டனாய் இருந்து அவர்களின் பின்னே செல்கின்றாயே, உனக்கென்ன பைத்தியமா? இரண்டு பிடி அவலுக்கே நீ மயங்கிவிட்டாய். (இங்கு குசேலனின் கதையை நினைவு கொள்ள வேண்டும்) இதைக் கேட்டாலே எங்களுக்குச் சிரிப்புத்தான் வருகின்றது. நீ என்ன பைத்தியமா?

உலகில் இருக்கின்ற உயிர்கள் அனைத்தையும் புனிதமாக்க ஆயிரமாயிரம் பெயர்களை வைத்துக் கொண்டாயே, நீ என்ன பைத்தியமா? திருமலையில் வேங்கடவனாகக் காட்சியளித்து யார் கேட்டாலும் விரைவாக வரங்களை அள்ளிக் கொடுக்கின்றாயே, நீ என்ன பைத்தியமா?

## கீர்த்தனை - 82

### *ராகம் : லலிதா*

3 1 3 1 3
சூடவம்மா கிருஷ்ணுடு நீ ஸுதுடோயம்மா

3 2 1 3
ஆடீ வீதுல வெண்ட யஸோதம்மா! (பல்லவி)

1 1 3 1 3 1 1 3
கோலலு சாசி உட்லு கொட்டகா பாலு பெருகு

1 3 1 1 3 3
காலுவலு கட்டி பாரே கதவம்மா!

3 3 1 1 3 1 1
மேலமு லாடி வத்தண்டே மிக்கிலி கொல்லெதலதோ

1 3
ஆலகிஞ்சி வினவம்மா யஸோதம்மா! (1)

1 1 3 3 3 3
சக்கிலாலா குண்டலெல்லா சலானா தொண்ட்லு வொடிச்சி

3 1 3 1 1 3
திக்கன தோடிகோலலா தீஸினம்மா!

1 1 3 1 3
சிக்கனி தேனே சாடெ சிவ்வன ராத வேசிதே

1 3 3 3
அக்கட ஜோருனா காரே யஸோதம்மா! (2)

1 3 1 1 3 1 1
அல்லந்த நுண்டி தன கந்தராணி தெங்காயலு

1
வல்லே தாள்ளு வேஸி வஞ்சீனம்மா!

3 3 3 3 1 1 1 1 3
பல்லிது டலமேல்மங்கபதி ஸ்ரீவேங்கடேஸுடு

3 3 3
அல்லிபில்லை யுன்னாடம்மா யஸோதம்மா! (3)

கிருஷ்ணனின் குறும்புத்தனத்தை இடைச்சியர்கள் யசோதையிடம் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

ஓ யசோதையே! உன் மகனான கிருஷ்ணனைப் பார். இவன் வீதிவீதியாகத் திரிந்து விளையாடி குறும்புகளைச் செய்து கொண்டிருக்கிறான்.

இவன் பெரிய குச்சியை எடுத்து உரியை அடித்ததினால் பால், தயிர் ஆறாக ஓடிக்கொண்டிருக்கிறதைப் பாரம்மா. இடையர்குலப் பெண்களிடம் சரசமாகப் பேசிக்கொண்டிருக்கிறான் கேளம்மா.

பாத்திரத்தில் உள்ள அதிரசம் போன்ற பண்டங்களைத் துரட்டியைக் கொண்டு எடுத்துக்கொண்டிருக்கிறான். பாத்திரத்தில் உள்ள தேனைக் கல்லால் அடித்ததால் அது ஒழுகி ஓடிக்கொண்டிருக்கிறது பாரம்மா.

எட்டாதத் தேங்காயைக் கயிற்றினால் இழுத்துக்கொண்டிருக்கிறான் பாரம்மா. அலமேலு மங்கைக்குக் கணவனான திருவேங்கடவன் குறும்புகள் செய்து கொண்டிருக்கிறான் பாரம்மா.

## கீர்த்தனை - 83

### ராகம் : தேஸாளம்

1 4 3 1 1
நேநே போ கனுடனு நீ கண்டெனு
3 1 3 3
தானவாரி நீவு நாகு தைவமவு கானா (பல்லவி)

1 1 1 3 1 3 3 3
நேருபுனா நாகைதே நீ திக்கு கலது கானி
1 3 1 1 1 3
சேரி நீ காவல திக்கு செப்பி சூப கலரா!
1 1 4 3 3
அரய நீவைதே நாகு நாதாரமு கலவு கானி
1 1 4 3 1 3
நூரகே நீ காதாரமு உன்னதா யெக்கடனு? (1)

3 3 3 1 1 3 3
நின்னு கொல்சின ஸலிகே நேடு நாகு கத்துகானி
1 1 1 3 3
ஸன்னுதி நீகு நோகரி ஸலிகுன்னதா!
1 4 3 1 1 1 3 3
பென்னிதி நின்னு தலசே பேரு நாகு கத்து கானி
3 1 3 1 1
உன்னதா நீகு தலச நொகரி பேரைநனு (2)

1 1 3 3 1
ஈவு லெல்லா நாகைதே நிய்யகலவு காகா
1
ஆவல நீ கீவு லிய்ய நன்யு லுன்னாரா!
1 1 1 1 1
ஸ்ரீவேங்கடேஸ நாகு ஜீவாந்தராத்மவு நீவு
4 1 1 1 1 1 3
பாவிஞ்சா நந்தராத்மா யப்படி நீகு நுன்னதா! (3)

உன்னைக் காட்டிலும் நான்தான் சிறந்தவன் என்று பக்தர்கள் பெருமானிடம் கூறுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

நான்தான் உன்னைவிடச் சிறந்தவன். நீ எனக்குக் கடவுளாக இருந்தாலும் நான்தான் உன்னைவிடச் சிறந்தவன்.

எனக்கு நீ வழிகாட்டியாக இருக்கிறாய். உனக்கு யாராவது வழிகாட்டியாக இருக்கிறார்களா? நீ எனக்கு ஆதாரமாய் இருக்கின்றாய். உனக்கு யாராவது ஆதாரமாய் இருக்கிறார்களா?

உன்னை வணங்கியதால் எனக்குப் பாதுகாப்பான இடம் கிடைத்தது. ஆனால் உனக்கு யாராவது பாதுகாப்பு அளிக்கிறார்களா? நான் உன்னை நினைப்பதற்கு உன் திருநாமம் என்னிடம் இருக்கிறது. நீ நினைப்பதற்கு ஒருவர் பெயராவது உன்னிடம் இருக்கிறதா?

வரங்களை அள்ளிக்கொடுப்பதற்கு நீ எனக்கு இருக்கிறாய். ஆனால் உனக்கு வரங்கள் கொடுப்பவர்கள் யாராவது இருக்கிறார்களா? திருவேங்கடவனே! நீ எனக்கு அந்தராத்மாவாக இருக்கின்றாய். ஆனால் உனக்கு ஒரு அந்தராத்மா இருக்கின்றதா?

# கீர்த்தனை - 84

## *ராகம் : ஆஹிரி*

3 3 4 1
நின்னு கூடின விபுனி நிலுவெல்லா ஸொம்பாயா
3 3 1 1
நின்னியுனு நொனகூடே நிந்த லோபலனே (பல்லவி)

1 1 3 1 1 3 3 3
சொலபு நீ கடகண்டி சூபு ஹிருதயமு காடி
1 3 1 2 3
லலிநிதடு ஸ்ரீவத்ஸ லாஞ்சனுண்டாயா
3 3 3 3 1 1 1
வெலதி நினு பெடபாசி விரஹம்பு மெயிகாகா
1 3 3 3
வலன நீதடு நீல வர்ணு டைநாடு (1)

3 3 3 1 1
அதன நீ சனுகுப்பலனு சக்ரமுல சேதா
3 3 1 1 1 1 3
பதில பரபுசு சக்ரபாணி யைனாடு
3 1 3 3 3 1 1 1 1
ஸ்ூததி நீ தேஹமுனா ஸொபகு குங்கும பூதா
3 3 1 1 3 1 1
லெதிகி பீதாம்பரம் சாய நீதனிகி (2)

3 1 3 3 3
ஆலிங்கனா பேட்ச நனயம்பு நினு கூட
3 1 3 3 1
லோலு டடுகான நாலுகு சேது லாயா
1 1 3 1 1 3
ஸ்ரீலலிதமூர்த்தியகு ஸ்ரீவேங்கடேஸ்வருடு
1 3 1
பாலிஞ்சே நினு நீகு பரிதோஷமாயா (3)

அலமேலு மங்கையைக் கூடியதினால் திருவேங்கடமுடையானுக்கு ஏற்பட்டச் சிறப்பினை அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகின்றார்.

தாயே! உன்னைக் கூடியதால் உன்னுடைய கணவனின் உடலெல்லாம் ஒரு கணத்திலே அழகு அதிகரித்தது.

உன்னுடைய கடைக்கண் பார்வையானது அவருடைய மார்பில் பட்டதனால் அவரிடம் ஸ்ரீவத்ஸம் என்ற மச்சம் உண்டாகியது. நீ அவரைப் பிரிந்த துயரத்தினால் அவரின் உடல் முழுவதும் நீலமேக வண்ணமாக மாறியது.

உன்னுடைய சக்கரம் போன்ற மார்பை அணைத்ததனால் பெருமான் சக்கரபாணியானார். உன்னுடைய உடலில் பூசிய குங்குமம் அவரின் ஆடையின்மேல் பட்டு, பட்டுப் பீதாம்பரமாக மாறியது.

உன்னை எப்பொழுதும் அணைக்க வேண்டும் என்ற ஆர்வத்தினால் அவருக்குக் கைகள் நான்காக உருவெடுத்தன. அழகுவடிவமான திருவேங்கடவன் உன்னை மகிழ்ச்சி என்ற வெள்ளத்தில் ஆழ்த்தினார்.

# கீர்த்தனை - 85

அன்னி மந்த்ரமுலு நிந்தே யாவஹிஞ்செனு
வென்னதோ நாகு கலிகெ வெங்கடேஸு மந்த்ரமு
(பல்லவி)

நாரதுடு ஜபியிஞ்சே நாராயண மந்த்ரமு
சேரே பிரஹலாதுடு நாரசிம்ஹ மந்த்ரமு
கோரி விபீஷணுடு சேகொனெ ராம மந்த்ரமு
வேரே நாகு கலிகே வேங்கடேஸு மந்த்ரமு (1)

ரங்ககு வாசுதேவ மந்த்ரமு த்ருவுடு ஜபிஞ்சே
ஸங்கடிஞ்செ கிருஷ்ணமந்த்ர மர்ஜுனுடுனு
முங்கிட விஷ்ணு மந்த்ர மொகி ஸுகுடு படிஞ்சே
வெங்கடமை நாகு நப்பெ வேங்கடேஸு மந்த்ரமு (2)

இன்னி மந்த்ரமுல கெல்ல இந்திரா நாதுடே குரி
பன்னின திதியே பரப்ரம்ஹா மந்த்ரமு
நன்னு காவ கலிகெபோ நாகு குரு டிய்ய கானு
வென்னெல வண்டிதி ஸ்ரீவேங்கடேஸு மந்த்ரமு (3)

திருவேங்கடவனின் திருமந்திரத்தின் சிறப்பினை அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகிறார்.

அனைத்து மந்திரங்களும் உள்ளடங்கிய திருவேங்கடவனின் திருமந்திரம் எனக்கு எளிதாகக் கிடைத்துவிட்டது.

நாரதர், நாராயண மந்திரத்தை ஜெபித்தார். பிரஹலாதன் உச்சரித்தது நரசிம்ம மந்திரம். விபீடணன், இராம மந்திரத்தை ஏற்றுக்கொண்டார். எனக்குத் திருவேங்கடவனின் மந்திரம் கிடைத்தது.

துருவன், வாசுதேவ மந்திரத்தைச் ஜெபித்தான். அருச்சுனன், கிருஷ்ண மந்திரத்தை உச்சரித்தான். சுகமுனிவன், விஷ்ணு மந்திரத்தைச் ஜெபித்தார். எனக்கு திருவேங்கடவன் மந்திரம் கிடைத்தது.

இந்த அனைத்து மந்திரங்களுக்கும் மகாலஷ்மியின் கணவரான ஸ்ரீமன் நாராயணனே மூலமாவான். இதுதான் பரப்பிரம்ம மந்திரம். நிலாவைப் போன்ற இந்தத் திருவேங்கட மந்திரத்தை என்னுடைய ஆச்சாரியர் என்னைக் காப்பதற்காகவே எனக்குக் கொடுத்தார்.

# கீர்த்தனை - 86

1 1 1 1 1 1 3
கைவல்யமு கண்டே கைங்கர்ய மெக்குடு

4 3 1 1 3
ஸ்ரீவிபுட நீவு மாகு ஜிக்கே மர்ம மிதிவோ (பல்லவி)

1 1 1 1 1 1
சேபட்டி நீ ஸிரஸு பூஜிஞ்சே அஹமிகா கண்டே

1 3 1 1 3
நீ பாதாலு பூஜிஞ்சே நேம மெக்குடு

1 3 1 3 3 1 1
மாபுதாகா நினுகொல்சி மந்தெ மேளமௌ கண்டே

3 3 3 1 1 3
தாபகு நீ தாஸுல ஸேஷத்வ மேக்குடு (1)

1 3 3 1 1 1
ஹரி நீ பிரஸாத ஜீவினை கர்விஞ்சுட கண்டே

3 1 1 1 3
நரய நீ தாஸுல லெங்கே டெக்குடு

1 1 1 1
வெரபுன நீ செவிலோ வின்னபாலு ஸேயு கண்டே

4 3 3 1 3 3 1 1 1 3
தர நீ ஊடிக காண்ட்லா தலபிஞ்சு டெக்குடு (2)

1 4 3 1 1
ஜுட்டி மிம்மு தியானிஞ்சி ஸாயுஜ்ய மந்து கண்டே

1 2 3 1 1 3
அட்டி நீ நாம பலமந்து டெக்குடு

1 1 1 1 3 1
இட்டி ஸ்ரீவேங்கடேஸ ஏலிதி விந்து வங்கனே

3 1 3 1 3 1 3
திட்டபு மா குரு நுபதேஸ மெக்குடு (3)

விஷ்ணுவின் அடியார்கள் மோட்சம் பெறுவதைக் காட்டிலும் பெருமானுக்குத் தொண்டு செய்வதையே குறிக்கோளாகக் கொண்டவர்கள் என்பதை இப்பாடல் கூறுகிறது.

பெருமானே! மோட்சத்தைக் காட்டிலும் உன்னுடைய தொண்டுதான் சிறந்தது. உன்னை அடைவதற்கு இதுதான் சிறந்த வழி.

உன்னுடைய சிரத்தைப் பூஜித்துக் கர்வமடைவதைக் காட்டிலும் உன்னுடைய திருப்பாதங்களை வணங்குவதுதான் சிறந்தது. நாள் முழுவதும் உன்னைச் சேவிப்பதைக் காட்டிலும் உன்னுடையத் தொண்டர்களுக்குப் பணிசெய்வதுதான் சிறந்தது.

பெருமானே! உன்னுடைய பிரசாதத்தை உண்டு கர்வமடைவதைக் காட்டிலும் உன்னுடைய அடியார்களுக்கு அடியவனாக இருப்பதுதான் சிறந்தது. உன்னுடைய செவியில் நேராக விண்ணப்பிப்பதைக் காட்டிலும் உன்னுடைய அடியார்களிடத்தில் கூறுவது தான் சிறந்தது.

உன்னைப் பூஜை செய்து அடைந்த முக்தியைக் காட்டிலும் உன்னுடைய திருநாமத்தை அணிவது சக்தி வாய்ந்தது. எங்களை இரட்சிக்கின்ற திருவேங்கடவா! எங்களுடைய ஆச்சார்யர்களின் உபதேசம் தான் எல்லாவற்றிலும் சிறந்தது.

## கீர்த்தனை - 87

### *ராகம் : கேஸி*

1 3 2 1 3
நீவண்டி தைவாலு லேரீ நிகில லோகமு லந்து
3 3 1
ஈவல நாவல நிந்து நெஞ்சி சூட மாகுனு (பல்லவி)

1 3 1
தகிலி நீ மோமு சக்கதன மெஞ்சி சூசிதிமா
3 3
தகினா மருனி கன்ன தன்றிவி நீவு
3 1 3 3 1
அகபட்ட நீ குணமு லவி எஞ்சி சூசிதிமா
3 3 3 4 1
நிகிடி கள்யாண குணநிதி வனீ ஸ்ருதுலு (1)

3 1 1 3 1 1 1
குட்டு நீ பெத்த தனமு குல மெஞ்சி சூசிதிமா
1 3 1 3 3 1
அட்டே பிரம்ஹ குலமு நீ யந்து புட்டெனு
3 1 1 1 1
தட்டபு நீ பனுல வர்தன மெஞ்சி சூசிதிமா
1 1 1
முட்டி ஸர்வ ரட்சகத்வமுன வெலஸிதிவி (2)

3 3 3 3 3 1
பெடிதமைன நீ பிருதெஞ்சி சூசிதிமா
3 3 1 3
வடி ஸரணாகதா வத்ஸலுடவு
1 3 3 1 1 1 1
கடகி ஸ்ரீவேங்கடேஸா கண்டிமி நீ மஹிமலு
3 3 1 1 1 3
படி நின்னே ஸேவிஞ்சி ப்ரதிகிதி மிதிவோ (3)

பெருமானுடைய சிறந்த குணங்களை அன்னமையா இப்பாடலில் சிறப்பித்துப் பாடுகின்றார்.

எந்தத் திசையைப் பார்த்தாலும் உன்போன்ற தெய்வங்கள் இந்த எத்திசையிலும் உலகத்தில் இல்லை.

உன் முகத்தின் அழகை எண்ணிப் பார்த்தால் நீ மன்மதனுக்குத் தந்தையாக இருக்கின்றாய். உன்னுடைய குணங்களை ஆராய்ந்து பார்த்தால் நீ நற்குணங்களுக்கு இருப்பிடம் என்று வேதங்கள் போற்றுகின்றன.

உன்னுடைய குலத்தை ஆராய்ந்து பார்த்தால் பிரம்ம குலமே உன்னிடமிருந்து தோன்றியதாக இருக்கின்றது. உன்னுடைய செயல்களை ஆராய்ந்து பார்த்தால் நீ அனைத்து உலகங்களையும் காப்பதற்காகவே தோன்றினாற்போன்று உள்ளன.

உன்னுடைய விருதுகளை ஆராய்ந்து பார்த்தால் உன்னை வேண்டுபவர்களுக்கு நீ சரணாகதியாய் இருக்கின்றாய். திருவேங்கடவா! உன்னுடைய மகிமையை நாங்கள் கண்டோம். உன்னையே நாங்கள் போற்றி வாழ்வோம்.

# கீர்த்தனை - 88

## *ராகம் : குண்ட க்ரியா*

நேநேமி ஜேயகா லேனு நீவு பரிபூர்ணுடவு
ஹீநுட நே நதிகுட நன்னிடா நீவு (பல்லவி)

தண்டமு வெட்டுட நாதி தப்பு லோகொனுட நீதி
நிண்டி நீ வெப்புடு தயா நிதிவு கானா
அண்ட ஜேருகொண்ட நாதி அந்துகு நூகொண்ட நீதி
தண்டியைன தேவ தேவோத்தமுடவு கான (1)

ஸரணு சொச்சுட நாதி ஸருக காசுட நீதி
பரம புரஷ ஸ்ரீபதிவி நீவு
விருலு சல்லுட நாதி வேவேலே லிச்சுட நீதி
பொரி நீவு பக்த ஸுலபுட வடு கான (2)

தாஸுட நனுட நாதி தப்பக ஏலுட நீதி
ஆஸ தீர்சே வரதுடு வடு கானா
நீ ஸேவ யொக்கடி நாதி நிச்சலு கைகொண்ட நீதி
ஈஸுலேனி ஸ்ரீவேங்கடேஸுடவு கானா (3)

தொண்டு செய்வது உயிர்களின் தன்மை என்றும் அவ்வுயிர்களைக் காப்பாற்றுவதுதான் இறைவனின் தன்மை என்றும் அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகின்றார்.

பெருமானே! அற்பமானவனான என்னால் இதைக் காட்டிலும் எதுவும் செய்ய இயலாது. உன்னில் அனைத்துக் குணங்களும் பொருந்தி இருக்கிறன. ஆகையால் நீ உயர்ந்தவன்.

உன்னை வணங்குவது என்னுடைய பணி, என்னுடைய குற்றங்களைப் பொறுத்து என்னை மன்னிப்பது உன்னுடைய பணி. ஏனெனில், நீ பரிபூரணமான கருணைக்கு இருப்பிடம் அல்லவா. உன் அருகில் நின்று உன்னுடைய திருநாமங்களை உச்சரிப்பது என்னுடைய பணி. அதைக்கேட்டு என் அவாவை நிறைவேற்றுவது உன்னுடைய பணி. ஏனெனில் நீ தேவாதி தேவனல்லவா.

உன்னைச் சரணடைவது என்னுடைய வேலை. என்னைக் காப்பது உன்னுடைய பணி. ஏனெனில் நீ திருமகளுக்குத் தலைவன் அல்லவா. பூவினால் உன்னை வணங்குவது எனது பணி. செல்வங்களை அள்ளித் தருவது உனது செயல். ஏனென்றால் நீ பக்தர்களுக்கு எளியவன் அல்லவா.

உனக்குத் தொண்டனாக இருப்பதுதான் எனக்குக் கடமை. என்னைக் காப்பாற்றுவது உன்னுடைய கடமை. ஏனெனில் அடியார்களின் விருப்பங்களை ஏற்றுக்கொள்ளும் நீ வரதன் அல்லவா. உனக்குத் தொண்டு செய்வது தான் என்னுடைய பணி. அதனை ஏற்றுக் கொள்வதுதான் உன்னுடைய பணி. பொறாமைக் குணம் இல்லாத நீ திருவேங்கடவன் அல்லவா.

# கீர்த்தனை - 89

## *ராகம் : குஜ்ஜரி*

பாவிஞ்ச நேர நைதி பஸு புத்தி நைதினி
ஈவல நா யபசார மிதி காவ வய்யா! (பல்லவி)

ஹரி நீவு பிரபஞ்ச மந்து புட்டிஞ்சிதி மம்மு
பரமு நே ஸாதிஞ்சேதி பலு த்ரோஹமவு காதோ
ஸிறுல நேலேடிவாடு செப்பினட்டு ஸேயக
விரஸாலு பண்ட்லகு வேறே ஸேய தகுனா? (1)

பஞ்சேந்திரியமுலு நாபை பம்பு பெட்டிதிவி நீவு
எஞ்சி வானி தண்டிஞ்சே திதி நேரமௌ காதோ
பெஞ்சேடி தல்லி தன்றுலு ப்ரியமை வட்டிஞ்ச கானு
கஞ்சமு காலதன்ன ஸங்கதியா பிட்டலகு? (2)

மிக்கிலி ஸம்ஸாரமு மெட கட்டிதிவி நாகு
அக்கர நே வேஸாரேதி அபராத மௌ காதோ
திக்குல ஸ்ரீவேங்கடாத்ரி தேவுட நீ விய்யகானு
எக்கடோ ஜீவுட நேனு யெதுராட தகுனா? (3)

பகவானின் எண்ணத்தை மீறி முக்திக்காக முயற்சி செய்வது தவறு என்பதை அன்னமையா இப்பாடல் வாயிலாகக் குறிப்பிடுகின்றார்.

பெருமானே! உன்னுடைய பெருமையை என்னுடைய அறியாமையால் நினைத்துப் பார்க்காமல் தவறு செய்து விட்டேன். என்னைக் காப்பாயாக.

ஸ்ரீஹரியே! எங்களுக்கு நீ இவ்வுலகில் பிறப்பினைக் கொடுத்தாய். ஆனால் நாங்கள் உன்னுடைய ஆணையை மீறி முக்திக்காக முயற்சி செய்வது, உனக்குச் செய்யும் துரோகம் அல்லவா. அரசர்களின் கட்டளையின்படி சேவகர்கள் நடக்கலாமே தவிர, அதற்கு மாறாக நடப்பது சரியா ?

நீ எங்களுக்கு ஐம்புலன்களைக் கொடுத்தாய். அது கூறியபடிதான் நடக்க வேண்டுமே தவிர அதனை அடக்குவது தவறல்லவா. பெற்றோர்கள் அன்போடு கொடுத்த உணவைக் குழந்தைகள் உண்ணாமல் அதனைக் காலால் உதைப்பது சரியா ?

சுமை நிறைந்த இல்லற வாழ்க்கையை எனது கழுத்தில் வைத்தாய். அதனை நான் ஒதுக்குவது தவறல்லவா ? எல்லா இடத்திலும் நிறைந்த திருவேங்கடவா! நீ கொடுப்பதை ஏற்றுக்கொள்ளாமல் அதற்கு மாறாக நான் பேசுவது சரியா ?

# கீர்த்தனை - 90

*ராகம் : லலிதா*

ஸ்ரீபதி ஈதடுண்டகா ஜிக்கினவாரி நம்முட
தீபனி மீஸால மீதி தேனெ நாகுட ஸுண்டி (பல்லவி)

தலசி நந்தடிலோனே தைவ மெதுட கலடு
கொலுவ நேரனி யட்டி கொரதே கானி
இல நருல கொலுசு டெந்தோ கோகலு வேஸி
பலு கொக்கெரலா வெண்ட பாராடுட ஸுண்டி (1)

ஸரணன்ன மாத்ரமுன ஸகல வரமு லிச்சு
நிரதி மரசிநட்டி நேரமே கானி
பொரி நிதரோபாயான பொரலுட காஜுபூஸ
கரிம மாணிக்க மண்டா கட்டு கொண்ட ஸுண்டி (2)

சேத மொக்கிதே சாலு ஸ்ரீவேங்கடேஸுடு காசு
காதரான ஸேவிஞ்சனி கடமே கானி
ஈதல நிதி மானி மரேன்னி புண்யாலு ஸேஸினா
ரீதி நடவி காஸின ரித்த வென்னெல ஸுண்டி (3)

நாம் கடவுளிடம் செலுத்தும் பக்தியில்தான் குறை உள்ளதே தவிர அவரது கருணையில் எந்தக் குறையும் இல்லை என்ற கருத்தினை அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகிறார்.

ஸ்ரீஹரி அருகில் இருக்கும்போது அவரை விட்டு பிறரை நம்புவது அருகில் உள்ள தேனை விட்டுவிட்டு மீசையில் ஒட்டியிருக்கின்ற தேனைச் சுவைப்பது போன்றது.

நினைத்தவுடனே காட்சியளிக்கும்படி இறைவன் இருக்கின்ற பொழுது அவரை வணங்காமல் இருப்பது இருக்கின்ற உலரப்போட்ட துணிகளை விட்டுவிட்டு அதனைத் தேடித் துணி என்று நினைத்து கொக்குக் கூட்டங்களை நாடிச் செல்வது போன்றது.

சரணாகதி என்று கூறியவுடன் எல்லா வரங்களையும் அள்ளிக் கொடுக்கின்ற ஸ்ரீஹரி இருக்கும்போது அவரை விட்டுவிட்டு வேறொருவரை நாடுவது, சிறந்த மாணிக்கம் என்று நினைத்து கண்ணாடிப்பாசியை அணிவது போன்றதாகும்.

அவரைக் கைகூப்பி வணங்கினால் போதும், திருவேங்கடவன் நம்மைக் காப்பான் என்று உறுதியான மனதுடன் அவரைத் துதிக்காதக் குறை நம்மிடையே உள்ளது. ஆனால், அவரிடத்தில் எந்தக் குறையும் இல்லை. திருவேங்கடவனை வணங்காமல் மற்ற எத்தனைப் புண்ணியம் செய்தாலும் அது காட்டில் காய்ந்த நிலாப் போலப் பயனற்றதாகும்.

## கீர்த்தனை - 91

*ராகம் : ராமக்கிரியா*

முந்தே தொலகவலெ மோஸ போக ஸங்கமெல்ல

கந்துவ போயின நீள்ளு கட்ட கட்ட வச்சுனா? (பல்லவி)

அனலமு பொடகன்டே நன்ட நுன்ன மிடுதலு

பனிலேகுன்னா நந்து படகுண்டேனா ?

பொனிகி செலுல கண்டே புருஷுல சூபு லெல்லா

நனிஸமு நந்து மீத நண்ட பார குண்டுநா? (1)

காலபு டொர்ரல கண்டே கம்மி நீடிலோ மீலு

ஜால நா பஸல ஜிக்கி சாவ குன்டேனா?

அலரி பங்காரு கண்டே நந்தரி மனஸுலூனு

பொலிமி நாபஸ ஜிக்கி புங்குடு காகுண்டுநா? (2)

சேரி முத்யபு ஜிப்பல சினுகுலு நினிசிதே

மேர தேட முத்யமுலை மிஞ்ச குன்டேனா?

தாருனி ஸ்ரீவேங்கடேஸு தாஸுல ஸங்கதி நுண்டே

போரசி நே ஜீவுலைன புண்யுலு காகுந்துரா? (3)

பெண்ணாசையிலும் பொன்னாசையிலும் ஈடுபடாமல் கவனமாக இருக்க வேண்டும். இல்லையெனில்அதன்பின்பு வருந்தியும் பயனில்லை என்ற கருத்தை இப்பாடலில் அன்னமையா கூறுகின்றார்.

முக்தியடைய வேண்டும் என்று நினைப்பவர்கள் ஐம்புலன்களால் ஏற்படும் ஆசையிலிருந்து விலகிச் செல்ல வேண்டும். தண்ணீர் வெளியேறிய பின்பு அணை கட்டுவதால் பயன் என்ன ?

நெருப்பைப் பார்த்தால் வெட்டுக்கிளி விழாமல் இருக்குமா ? அது போன்றே பெண்களைப் பார்த்தால் ஆண்களின் பார்வை விழாமல் இருக்குமா ?

தூண்டிலில் உள்ள புழுவைக் கண்டவுடன் நீரில் உள்ள மீனானது புழுவைப் பற்றியவுடன் மாளாமல் இருக்குமா ? அது போன்றே பொன்னைப் பார்த்தவுடன் அதில் வயப்பட்டு அழிந்து போகாமல் இருப்பார்களா ?

முத்துச்சிப்பியில் மழைத்துளி விழுந்தால் அது மாறாமல் இருப்பதைப்போல திருவேங்கடமுடையானுடைய அடியார்களின் தொடர்பு இருந்தால் புனிதமானவர்களாக ஆகாமல் இருப்பார்களா ?

# கீர்த்தனை - 92

## *ராகம் : பளவஞ்ஜரம்*

வெரபிஞ்ச போயி தானே வெரசே தல்லி யஸோத
மரசி யீபாலு நெட்டு மானிஸெண்டா நுண்டெனோ
(பல்லவி)

வெண்ட ராகு மனி கிருஷ்ணு வெரபிஞ்சி யஸோத
ஒண்டி மந்தலோ கொங்க உன்னாடனே
அண்டி கொங்க எந்து நுன்னாடனி நோரு தெரசிதே
பெண்டலை பிரம்ஹாண்டாலு பெக்கு கான வச்செனு (1)

சந்தமாமா பாடி தல்லி ஸரி பொத்துகு ரம்மண்டே
சந்துரு ஜூசி கிருஷ்ணடு ஸன்ன சேஸெனு
முந்தர ஜந்த்ருடு வச்சி மொக்கிதே யஸோத சூசி
முந்தேலா யன்டினோ யனி முஞ்சி வெரகந்தெனு (2)

பாலார்சி தொட்டெலலோ பண்ட பெட்டி யஸோத
நீல வர்ணு தொங்கி சூசே நித்துரோ யனி
ஒலி ஸங்க சக்ராலதோ நூரமு ஸ்ரீசதி தோட
ஈ லீல ஸ்ரீவேங்கடேஸுடை யுன்னாடு (3)

பாலகிருஷ்ணனின் அற்புதச் செயல்களை இப்பாடல் மூலம் அன்னமையா வர்ணிக்கின்றார்.

கண்ணனைப் பயப்பட வைத்தபோது, தானே பயந்த யசோதை பின்னர் அதனை மறந்து மனிதக் குழந்தை என்று நினைத்து எப்படி வளர்த்தாளோ ?

யசோதை கண்ணனைப் பார்த்து என்னுடன் வராதே என்று கூறி அவனைப் பயமுறுத்துவதற்காக மந்தையில் பூச்சாண்டி இருக்கிறான் என்று கூறினாள். அப்போது கண்ணன் பூச்சாண்டி எங்கிருக்கிறது என்று வாயைத் திறந்தான். அப்போது யசோதை கண்ணனின் வாயில் பிரம்மாண்டங்களைப் பார்த்தவுடன், தானே அஞ்சினாள்.

ஒருநாள் யசோதை கண்ணனை விளையாடச் செய்து கொண்டிருக்கும்போது நிலாவைப் பார்த்து கண்ணனுடன் விளையாடவா என்று அழைத்தாள். அப்போது கண்ணன் அம்புலியிடம் கண் சைகை செய்தான். உடனே அம்புலி கீழே வந்து யசோதையிடம் வணங்கினான். அதைப் பார்த்ததும் யசோதை அஞ்சினாள்.

ஒரு நாள் கண்ணனுக்குப் பால் கொடுத்துக் கண்ணனைத் தொட்டிலில் தூங்கவைத்து சிறிது நேரம் கழித்துப் பார்த்தாள். அப்பொழுது சங்குச் சக்கரங்களுடன் மார்பில் லக்குமியுடன் இருந்த திருவேங்கடவனைக் கண்டு யசோதை அஞ்சினாள்.

# கீர்த்தனை - 93

## ராகம் : தேஸி

1 1
அக்ஞானுல கிவி யருஹமு லிந்தே

1
சுக்ஞானுல கிவி சொர நேலய்யா ? (பல்லவி)

3 3 1
தைவமு நம்மின தாஸுலகு

1 1 3 1 3
காவிம்பக மரி கர்மமு லேது

3 1 4 3 1 1
தாவதி ஜலநிதி தாடின வாரிகி

3
ஒவல மரியுனு ஒட்டேலய்யா ? (1)

3 1 1 3 3 4 1
குரு க்ருப கலிகின குண நிதிகி

3 1 1 3
அரய பாப புண்யமு மரிலேது

1 1 1 3 1
விரஸபு ஜீகடி வெடலின வாரிகி

1 3 3 3
பரக மரியு தீபம் பேலய்யா ? (2)

3 3 1
ஜகமு லெருகு வைஷ்ணவுலகுனு

1 1 4
தகிலெடி யபராதம்புலு லேவு

3 1 3 1 1 4 1 3 1
அகபடி ஸ்ரீவேங்கடாதிபு கொலிசிதே

3 3 1 3 3
எகுவ திகுவ மா கெதுரேதய்யா ? (3)

கர்மங்கள் செய்பவர்கள் அறியாமையில் இருப்பவர்கள் தான் என்ற கருத்தினை இப்பாடலில் அன்னமையா குறிப்பிடுகின்றார்.

இனிமேல் சொல்ல வருகின்ற கருத்துக்கள் அனைத்துமே அறியாமையில் இருக்கின்றவர்களுக்குத்தான் பொருந்தும். ஞானிகள் இதில் நுழையத் தேவையில்லை.

கடவுளை நம்பி அவருக்கு அடியார்களாக ஆன பின்னர் நாம் செய்ய வேண்டிய கர்மங்கள் எதுவுமில்லை. கடப்பதற்கு அரிதான கடலைக் கடந்த பின்னர் ஓடத்தின் உதவி நமக்கு எதற்கு ?

ஆச்சார்யரின் கருணைக்கு உட்பட்ட பின்பு நல்லவனுக்குப் பாவம், புண்ணியம் எதுவும் இல்லை. கருமையான இருளில் இருந்து வெளியே வந்த பின்னர் விளக்கின் உதவி எதற்கு ?

உலகம் புகழ்கின்ற வைணவர்களுக்குப் பாவங்கள் எதுவும் சேராது. திருவேங்கடமுடையானை வணங்கிய எங்களுக்கு மேலுலகத்திலும் கீழுலகத்திலும் தடை ஏதைய்யா ?

## கீர்த்தனை - 94

### *ராகம் : குண்டக்ரியா*

1 1 1 1 3 1 1 3<br>
தெலிய ஜீகடிகி தீப மெத்தக பெத்த<br>
3 1 1 3<br>
வெலுகு லோபலிகி வெலுகேலா ? (பல்லவி)

1 4 3 1<br>
அரயா நாபன்னுனி கபய மீவலே காக<br>
2 3<br>
இரவைன சுகி காவா நேலா ?<br>
1 3 3 3 3 3 1<br>
வறத போயெடிவானி வடி தீயவலே காகா<br>
3 3 3 3<br>
தரிவானி திவியக தானேலா ? (1)

4 4 1 1 3 3 1<br>
கன கர்மாரம்புனி கட்லு விடவலே காகா<br>
1 3<br>
யெனஸி முக்துநி காவனேலா ?<br>
3 4 1 3 3 1<br>
அனயமு துர்பலுனி கன்னமிட வலே காகா<br>
1 1 3<br>
தனிஸின வானிகி தானேலா ? (2)

1 1 1 1 1 3 3 1<br>
மிதிலேனி பாபகர்மிகி தாவலே காகா<br>
3 1 1<br>
ஹிதவெருகு புண்யுனி கேலா ?<br>
4 1 3 1 1 1 3<br>
த்ருதி ஹீனு க்ருப ஜூசி திருவேங்கடேஸ்வருடு<br>
1 1 3 1 3 1<br>
ததி காவ குண்டின தானேலா ? (3)

வறியவர்களைக் காப்பாற்றுவதுதான் கடவுளின் கடமையே தவிர செல்வம் படைத்தவர்களைக் காப்பாற்றுவது அவரின் கடமை அல்ல என்ற பொருளில் அன்னமையா இப்பாடலைப் படைத்துள்ளார்.

இருள் இருக்கும் பொழுதுதான் விளக்குத் தேவை. வெளிச்சம் இருந்தால் விளக்கெதற்கு ?

துன்பத்தில் உள்ளவனைக் காக்க வேண்டுமே தவிர செல்வச் சிறப்புடன் வாழ்பவனைக் காப்பது ஏன் ? வெள்ளத்தில் தத்தளிப்பவனை வெளியேற்றுவதை விடுத்துத் தரையில் உள்ளவனைக் காப்பாற்றுவது எதற்கு ?

நிறைய தீய கர்மங்கள் செய்து, அதனுடைய பந்தத்தில் இருப்பவனை மீட்க வேண்டுமே தவிர நல்ல கர்மங்களைச் செய்தவனை மீட்கத் தேவையா ? பசியோடு இருப்பவனுக்கு உணவு கொடுப்பதே தவிர நன்றாக உண்டவனுக்கு உணவு கொடுப்பதா ?

பல பாவங்கள் செய்தவனைக் காப்பாற்ற வேண்டுமே தவிர புண்ணியம் செய்தவனைக் காப்பது எதற்கு ? மனத் தைரியம் இல்லாதவனைத் தக்க சமயத்தில் கருணையுடன் காப்பாற்றாவிடில் திருவேங்கடவன் இருந்து என்ன பயன் ?

# கீர்த்தனை - 95

## *ராகம் : மாளவி*

அதி3 நா யப1ராத4 மிதி3 நா யப1ராத4
மதி3யு நிதி3யு நா யப1ராத4மு (பல்லவி)

நெரய ரூப1முலெல்லா நீ ரூப1மே கா
நரயனி யதி3 நா யப1ராத4மு
ப1ரிபூ1ர்ணுட3கு3 நின்னு ப3ரிச்2சின்னுனிகா3
நரயு1டா யதி3 நா யப1ராத4மு (1)

ஜீவாத்1முனிகா3 ஜிந்தி1ம்ப த3லகட1
யாவங்கா1 நதி3 நா யப1ராத4மு
ஸேவிஞ்சி நினு நாத்1ம ஜிநிதி1ம்ப கு1ண்டு3ட1
ஆவல நிதி3 நா யப1ராத4மு (2)

ஈடெ3ருக3க1 வெங்க1டே1ஸுட3 நினு கொ3னி
யாடு3ட1 யதி3 நா யப1ராத4மு
ஏட3 ஜூசின நாயெது3ர நுண்ட3க3 நின்னு
நாட3 நீட3 வெத3கு1 ட1ப1ராத4மு (3)

பரம்பொருளின் உண்மைத் தன்மை தெரியாமல் அவரிடத்தில் தாம் செய்த குற்றத்தைப் போக்குமாறு அன்னமையா இப்பாடலில் கூறுகின்றார்.

பெருமானே அது என்னுடைய குற்றம், இது என்னுடைய குற்றம், அதுவும் இதுவுமாகிய இரண்டும் என்னுடைய குற்றமே.

இந்த உலகில் உள்ள உருவங்கள் அனைத்தும் உன்னுடையது என்று கருதாதது என்னுடைய தவறு. அனைத்து இடங்களிலும் நீக்கமற நிறைந்திருக்கின்ற உன்னை ஒரு கால எல்லைக்கு உட்பட்டவனாக நினைத்தது என்னுடைய தவறு.

பரமாத்மாவான உன்னை ஜீவாத்மா என்று நினைத்தது என்னுடைய தவறு. உன்னை நினைத்து கைங்கர்யம் செய்யாமல் இருப்பதும் என்னுடைய தவறாகும்.

வார்த்தைக்கு எட்டாத உன்னுடைய பெருமையைத் துதிக்க நினைப்பது தவறு. கண்முன்னே காட்சியளிக்கின்ற உன்னை எங்கே இருக்கிறான் என்று அலைந்து தேடியதும் என்னுடைய தவறு.

## கீர்த்தனை - 96

### *ராகம் : ஸுத்த வஸந்தம்*

அந்துகே ஸும்மீ நே ஜேஸே ஆசாராலு தைவமா!
நிந்த வாய நா மனஸு நீபை நிலுபவே (பல்லவி)

பட்ட பயட தோலிதேனு பந்தே மேயு பஸுரமு
பட்டி மேபிதேனு தன பனுலு ஸேயு
இட்டே வதலிதேனு எந்தைனா பாரு மனஸ
கட்டுக நேம்ஸ்துடைதே கைவஸமை யுண்டுனு (1)

படி தப்பிதே பண்ட்லு பரதேஸு லவுதுரு
எடயக கூடு கொண்டே ஹிது லவுதுரு
விடிசிதே நிடுலலனே கடகு பாரு மனஸ
ஓடலிலோ நணாசிதே ஒத்திகை உண்டுனு (2)

சே வதலிதே பெஞ்சின சிலுகைனா மேடலெக்கு
ராவிஞ்சி கூட பெட்டிதே ராமா யநுனு
பாவிஞ்ச குண்டிதே யிட்டே பாரு நெந்தைனா மனஸு
ஸ்ரீவேங்கடேஸு கொல்சிதே சேத ஜிக்கி உண்டுனு (3)

நம்முடைய மனதை அலைபாய விடாமல் உறுதியாகக் கடவுளின் மேல் நிறுத்துவதுதான் நமது கடமை என்ற கருத்தினை அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகின்றார்.

பெருமானே சஞ்சலமடைந்த என்னுடைய மனதை உன்மேல் இருத்தும்படி செய்வாயாக. நான் தினமும் உனக்குச் செய்யும் பூஜைகள் அனைத்தும் என் மனது உன்மேல் நிலையாக இருக்க வேண்டும் என்பதற்காகத்தான்.

மாட்டின் கயிற்றை அவிழ்த்து விட்டால் அது பயிரினை மேய்ந்து சிறையில் அடைபடும். நாம் அதனைக் கட்டி வைத்தால் நமக்குத் தேவையான வேலைகளுக்கு உதவும். அது போன்றே நமது மனதினை விட்டுவிட்டால் அலைபாய்ந்து விடும். கட்டுப்பாடு உள்ளவனுக்கு அவன் மனது அவனிடம் வயப்பட்டிருக்கும்.

பணியாட்களைக் கட்டுப்பாட்டில் வைக்காமல் விட்டுவிட்டால் அவர்கள் எதற்கும் உதவாமல் பரதேசிகளாகப் போய்விடுவார்கள். அந்தப் பணியாட்களை நமது கட்டுப்பாட்டில் வைத்தால் நமக்கு உதவும் வண்ணம் வேலை செய்து கொண்டிருப்பார்கள். இது போன்றே மனதை விட்டுவிட்டால் எங்கோ சென்று விடும். மனதை அடக்கினால் நாம் கூறியபடி நடக்கும்.

அன்போடு வளர்த்த கிளியானாலும் அதை விட்டுவிட்டால் அது அலைந்து திரிந்து நம்மிடையே வராமற் போய்விடும். அதை பஞ்சரத்தில் வைத்தால் நாம் சொல்லினால் அதுவும் 'ராமா'! என்று சொல்லும். கடவுளை நினைக்காமல் இருந்துவிட்டால் மனமும் எங்கெங்கோ சென்று விடும். திருவேங்கடமுடையானை வணங்கினால் மனமானது நம்மிடம் வயப்பட்டு இருக்கும்.

## கீர்த்தனை - 97

### ராகம் : நாட்டா

விஷ்ணு டொக்கடே விஸ்வாத்மகுடு
வைஷ்ணவமே ஸர்வம்புனு (பல்லவி)

பரமேஷ்டி சேயு பிரம்ஹாண்ட ஸ்ருஷ்டியு
ஹருனி லோனி ஸம்ஹார ஸக்தி
பரகக நிந்த்ருனி பரிபாலனமுனு
அரஸி சூட ஸ்ரீஹரி மஹிமா (1)

இல பஞ்ச பூதமுலலோ குணமுலு
அல நவக்ரஹ விஹாரமுலு
தலகனு கால த்ரய தர்மம்புனு
அலரக நாராயணுனி மஹிமலே (2)

அந்தட கல மாயா விலாஸமுலு
பொந்த பரமபத போகமுலு
மந்துகு நெக்கின மரி ஸமஸ்தமுனு
இந்தயு ஸ்ரீவேங்கடேஸு மஹிமலே (3)

அனைத்து உலகத்தையும் விஷ்ணு மயமாக அன்னமையா இப்பாடலில் வர்ணிக்கின்றார்.

விஷ்ணு ஒருவர்தான் உலகம் அனைத்தையும் தம் உலகமாகக் கொண்டுள்ளார். அசையும் அசையாத தன்மை கொண்ட உலகமெல்லாம் விஷ்ணுவினுடையதேத் தவிர வேறொன்றும் இல்லை.

பிரம்மாவின் ஆக்கச் செயலையும் சிவனுடைய அழித்தல் செயலையும் இந்திரனின் ஆட்சிச் சிறப்பையும் ஆராய்ந்து பார்த்தால் அது ஸ்ரீஹரியின் மகிமையினாலே தான்.

இவ்வுலகில் பஞ்சபூதங்களின் குணங்கள் நவக்கிரகங்களின் செயல்கள் முக்காலங்களின் தருமங்கள் அனைத்தும் ஸ்ரீமன் நாராயணனின் மகிமையே.

உலகில் இருக்கும் மாயையின் செயல்கள், புண்ணியம் செய்தவர்கள் பரமபதத்தில் அனுபவிக்கின்ற சுகபோகங்கள் மற்றும் என்னென்ன சிறப்புகள் உலகில் இருக்கின்றனவோ அவை அனைத்தும் திருவேங்கடவனின் மகிமையேத் தவிர வேறொன்றும் இல்லை.

# கீர்த்தனை - 98

## *ராகம் : ஸ்ரீராகம்*

1 1 1 1
தலமேல குலமேல தபமே காரணமு
3 1
எலமி ஹரிதாசுலு ஏ ஜாதி யைன நேமி? **(பல்லவி)**

1 1 1 1 3 4 2
காகமு வல்ல புட்டதா கனமைன யஸ்வத்தமு
3 1 3 1 1 3 1
தாகொனி குல்லலோ புட்டதா முத்தெமு
1 1 3
சௌகைன விஷலதனே ஜன்மிஞ்சதா நிர்விஷமு
1 3 3 3 1 1
யே கடா மஹானுபாவு லெந்து புட்டி ரேமி? **(1)**

3 3 1 1
சிடிபி ராள்ளா புட்டவா செலுபைன வஜ்ரமுலு
1 3 1 3 1 3 1
புடமி நீகல வல்ல புட்டதா தேனெ
3 3 1 3 3
வெடகு பில்லி மேனனு வெள்ளதாயனா ஜவ்வாதி
3 3 3
உடிவோனி புண்யு லெந்து நுதயிஞ்சி ரேமி ? **(2)**

1 1 3 1 3 1 1 1
பங்கமுலோ புட்டதா பரிமளபு தாமெர
1 1 3 1 3 1 3 1 1
பொங்கபு கீடமுலந்து புட்டதா பட்டு
1 1 1 1 1 3 3
கொங்கக ஸ்ரீவேங்கடேஸு கொலிசின தாஸுலு
1 3
சங்கெ லேனி ஞானு லெந்து ஜனியிஞ்சி ரேமி? **(3)**

ஸ்ரீஹரியின் அடியார்கள் எந்தக் குலத்தில் பிறந்தாலும் வணங்கத் தக்கவர்களே என்ற கருத்தினை பல எடுத்துக்காட்டுகள் மூலமாக அன்னமையா குறிப்பிடுகின்றார்.

எங்கிருந்து வந்தால் என்ன ? எந்தக் குலத்தில் பிறந்தால் என்ன ? தவத்தினால் அவன் புனிதமானவனாவான். ஸ்ரீஹரியின் அடியார்கள் எந்தச் சாதியில் பிறந்தால் என்ன ?

காகத்தினால் உருவாகுதல்லவா ஓர் அரசமரம். சிப்பிக்குள் உண்டாகுதல்லவா விலைமதிக்க இயலா முத்து. விஷமுள்ள செடியில் இனிமையான பழம் கிடைக்கிறதல்லவா. அது போல மகான்கள் எங்கு பிறந்தால் என்ன ?

உபயோகமில்லாத கற்களிலிருந்து உயர்ந்த வஜ்ரம் பிறக்குதல்லவா. ஈக்களால் உண்டாகிறதல்லவா தேன். பூனையின் உடலில் இருந்து வருவதுதானே ஜவ்வாது. அதனால் புனிதமானவர்கள் எங்கு பிறந்தால் என்ன ?

சேற்றிலிருந்து நறுமணமுள்ள தாமரை பிறக்கிறதல்லவா. பூச்சியிலிருந்து பட்டு உண்டாகின்றதல்லவா. உறுதியான பக்தியுடன் திருவேங்கடவனை வணங்கிய ஞானிகளும் அடியார்களும் எங்கு பிறந்தால் என்ன ?

# கீர்த்தனை - 99

## ராகம் : தேவ காந்தாரி

1 1 3 1 1
இன்னி சேதலகு நிதி யொகடே
1 3 1 3 3
கன்னா மனஸிதி கானது கானி (பல்லவி)

1 1 1 1 1 4 4
பாதக கோடுலு பவமுலு பஸ்மீ
4 1 3 3 3 1 1
பூதமு ஸேயகா பொட ஒகடே
1 1 1 1 3
ஸ்ரீதருணீபதி சிந்த நிஜமுகா
1 1 3 3 3 3
ஏதரி சித்தம் பெருகது கானி (1)

4 3 3
மரண பயம்புலு மதமுலு மலினீ
1 3 3 3 1 1
கரணமு ஸேயகா கல தொகடே
1 3 3 1
ஹரி நாமாம்ருத மந்து மீதி ரதி
1 1 1 3 3
நிரதமு நாகிதி நிலுவது கானி (2)

1 1 3 3 1
குதிலமுலுனு துர்க்குணமுலுனு த்ருணி
1 1 3 3 1 1 1
க்ருதமுலு ஸேயக குரு தொகடே
1 1 3 1 1 1 1 1
பதி யகு வேங்கடபதி ஸேவாரதி
3 1 1 3 1 3 3
கதியனி மதி கனி கானது கானி (3)

பகவானை நினைப்பதனால் எல்லாப் பாவங்களும் நீங்கும் என்று தெரிந்தும் மனம் அதன்படி செயல்படாததை அன்னமையா இப்பாடலில் கூறியுள்ளார்.

கூறப்போகின்ற செயல்களுக்கெல்லாம் இது ஒன்றுதான் சரியான வழி. இதனை எனது மனது அறிந்தும் அறியாததுபோல் இருக்கின்றது.

கோடானகோடி பாவங்களையும் பிறப்பு இறப்பு என்ற இல்லற துன்பங்களையும் சாம்பலாக்குவதற்கு ஒரே வழி இருக்கிறது. அதுதான் லஷ்மிபதியைத் தியானிப்பது. ஆனால் இந்த மனம் அதனை நினைப்பதில்லை.

இறப்பு என்ற அச்சத்தையும் கர்வத்தையும் அழிப்பதற்கு ஒரே ஒரு வழி உள்ளது. அதுதான் பெருமானின் திருநாமம் என்று கூறப்படுகின்ற அமிர்தமாகும். ஆனால், எனக்கு அதனை அருந்துவதற்கான விருப்பம் என்னிடத்தில் இல்லை.

இடர்களையும், தீய குணங்களையும் போக்குவதற்கு ஒரே வழி உள்ளது. அது மூவுலகங்களுக்கும் நாயகனான திருவேங்கடவனை வணங்குவதாகும். ஆனால் அவரே கதி என்று எனது மனதிற்குத் தெரிந்தும் தெரியாததுபோல் இருக்கின்றது.

# கீர்த்தனை - 100

## *ராகம் : காம்போதி*

ஸந்தலே சொச்சிதி கானீ சரகு கான நைதி

இந்தடா ஸ்ரீஹரி நீவே யிடு தய ஜூடவே (பல்லவி)

காந்த சனுகொண்டலு கடகு நெக்கிதி கானி

யெந்தைனா மோட்சபு மெட்லு யெக்கலேனைதி

அந்தடா ஜவ்வன மனே அடவி சொச்சிதி கானி

ஸந்தத ஹரிபக்தனே சஞ்ஜீவி கான நைதி (1)

தெகி ஸம்ஸார ஜலதி திருகு லாடிதி கானி

அகடை வைராக்ய ரத்னா மதி தேநைதி

பொகரு ஜன்மால ரணபூமுலு சொச்சிதி கானி

பகடு காமாதுல பக ஸாதிஞ்ச நைதி (2)

தனுவனியெடி கல்பதருவு யெக்கிதி கானி

கொன விஞ்ஞான பலமு கோய லேனைதி

கனுட ஸ்ரீவேங்கடேஸ கம்மர நீ க்ருப சேத

தனிஸி ஏ விதுலனு தட்டு வடநைதி (3)

பரம்பொருளுக்காக உழைக்காத வாழ்க்கை பயனற்றது என்ற கருத்தினை அன்னமையா இப்பாடல் வாயிலாகக் குறிப்பிடுகின்றார்.

நான் சந்தைக்குச் சென்று அலைந்தாலும் எனக்குத் தேவையான பொருள் கிடைப்பதில்லை. இவ்வுலகில் மனிதப் பிறவி எடுத்து வந்த எனக்குப் பரம்பொருள் கிடைக்கவில்லை. ஆகையால் ஸ்ரீஹரி, நீ எனக்கு அருள் புரிய வேண்டும்.

பெண்களின் மார்பு என்ற மலையில் நான் ஏறினேன். ஆனால் மோட்சம் என்ற படியில் நான் ஏறவில்லை. இளமை என்ற காட்டில் அலைந்து திரிந்தாலும் எனக்கு விஷ்ணுபக்தி என்ற சஞ்சீவி கிடைக்கவில்லை.

இல்லறம் என்ற கடலில் நான் அலைந்து பார்த்தாலும் வைராக்கியம் என்ற இரத்தினத்தை என்னால் கொண்டுவர முடியவில்லை. பிறப்பு என்ற போர்க்களத்தில் நான் நுழைந்தாலும் காமம், கோபம் போன்றவற்றை வெல்ல முடியவில்லை.

நான் உடல் என்ற கற்பக விருட்சத்தில் ஏறினாலும் உச்சியில் இருக்கின்ற ஞானம் என்ற பழத்தினை என்னால் பறிக்க முடியவில்லை. இத்தனை துயரத்திலும் உன்மேல் பக்தி கொண்டு உன்னுடைய அருளால் நான் மேன்மை அடைந்தேன்.

# கீர்த்தனை - 101

## *ராகம் : மலஹரி*

அந்துகே போ நீபை நாஸபுட்டி கொலிசேதி
மந்தலிஞ்சிதி நிக மரி நீ சித்தமு (பல்லவி)

இந்தரு ஜெப்பகா விண்டி யெவ்வரி கைனா விஷ்ணுடே
கந்துவா மோட்சமிய்யா கர்த யனகா!
முந்தே விண்டி நாரதுடு முஞ்சி நின்னு பாடகா
பொந்துக லோகமு லோனா பூஜ்யுடாயா நனுசு (1)

அப்படி விண்டி லோகமு லன்னிடிகி ஹரியே
கப்பி ரட்சகத்வானகு கர்த யனகா
இப்புடே விண்டி த்ருவுடு இடு நின்னு நுதிஞ்சே
உப்பதில்லி பட்டமேலு சுன்னாடனுசுனு (2)

இதே விண்டி ஸ்ரீவேங்கடேஸ பிரம்ஹகு தன்றிவை
கதிஸி புட்டிஞ்சா பெஞ்சா கர்தவனுசு
வதலக விண்டி நீகு வால்மீகி காவ்யமு செப்பி
செதர காத்யுலலோ ப்ரஸித்து டாய நனுசு (3)

நாரதர் போன்ற பக்தர்களை எப்படிக் காப்பாற்றினாயோ, அவர்களைப் போன்றே என்னையும் காக்க வேண்டும் என்று அன்னமையா வேண்டுகின்றார்.

பெருமானே! உன்னை வணங்கியவர்களுக்கு நீ அருள் புரிந்தாய் என நான் கேள்வியுற்றேன். அதற்காகத்தான் நான் விருப்பத்துடன் உன்னை வணங்குகிறேன்.

மோட்ஷம் கொடுப்பதற்கு விஷ்ணு ஒருவர்தான் கர்த்தா என்பதை பலர் கூறுவதைக் கேள்வியுற்றேன். நாரதர் உன்னைப் பக்தியால் பாடியதால்தான் அனைவராலும் வணங்கத் தக்கவரானார்.

அனைத்து உலகங்களையும் காப்பதற்கு ஸ்ரீஹரிதான் கர்த்தா என்று அப்பொழுதே கேள்வியுற்றேன். துருவன் உன்னைப் புகழ்ந்ததினால் உன்னதமான, நிலையான பதவியை அடைந்தான் என்பதை இப்பொழுதுதான் கேள்வியுற்றேன்.

திருவேங்கடவா நீ படைப்பின் தலைவனான பிரம்மாவிற்குத் தந்தையாகி உலகங்களை ஆக்குவதற்கும் காப்பதற்கும் கர்த்தாவாய் இருக்கின்றாய் என்பதை இப்பொழுதுதான் கேள்வியுற்றேன். அது மட்டுமன்றி வான்மீகி உன்மீது காப்பியம் படைத்ததினால் அவன் முனிவர்களில் சிறந்தவன் ஆனான் என்பதையும் கேள்வியுற்றேன்.

# கீர்த்தனை - 102

*ராகம் : குண்டக்ரியா*

3 1 1 3 1 1 3
தாசுகோ நீ பாதாலகு தக நே ஜேஸின பூஜலிவி
1 1 1 1 1 1
பூசி நீ கீரிதி ரூப புஷ்பமுலிவி யய்யா! (பல்லவி)

1 1 1 3 1 3
ஒக்க ஸங்கீர்தனே சாலு ஒத்திகை மம்மு ரட்சிஞ்சகா
1 1 4 3 3 3
தக்கினவி பண்டாரானா தாசி உண்டனி
1 3 4 2 4 1
வெக்கஸமகு நீ நாமமு வெல ஸுலபமு பல மதிகமு
3 1 1 1 1 4
திக்கை நன்னேலிதி விக நவி தீரனி நா தனமய்யா! (1)

1 1 3 1
நா நாலிகபை நுண்டி நானா ஸங்கீர்தனலு
1 1 3 3
பூனி நாசே நின்னு பொகடிஞ்சிதிவி
3 1 1 3
வேநாமால வென்னுடா வினுதிஞ்சா நெந்தவாட
1 1 1 3 1 1 1
காநிம்மனி நாகீ புண்யமு கட்டிதி விந்தே யய்யா! (2)

1 3 3 3 1 3 1 3
ஈ மாட கர்வமு காது நீ மஹிமே கொனியாடிதி கானி
3 3
சேமுஞ்சி நா ஸ்வாத்ந்த்ரயமு செப்பின வாட கானு
3 3 3 1
நேமான பாடே வாடனு நேரமு லெஞ்சகுமீ
4 3 1 1 3
ஸ்ரீமாதவா! நே நீ தாஸுடா ஸ்ரீவேங்கடேஸுட வய்யா! (3)

அன்னமையா தன்னுடைய பாடல்களைப் பெருமானின் திருவடிகட்குச் செய்கின்ற பூஜையாகவும், புகழ் வடிவமான அழகிய மலர்களாகவும் குறிப்பிடுகின்றார்.

பெருமானே! நான் எழுதிய இந்தக் கீர்த்தனைகள் உன்னுடைய திருவடிகளுக்கு நான் செய்த பூஜைகள். இது உன்னுடைய புகழ் வடிவத்தில் இருக்கின்ற மலர்கள். ஆகையால் இவற்றைப் பாதுகாத்துக்கொள்.

நான் பாடிய பல்லாயிரம் பாடல்களிலே என்னை உயர்விக்க ஒரு பாடலே போதும். மற்றவைகளை உன்னுடையப் பெட்டகத்தில் மறைத்து வை. உன்னுடைய திருநாமம் கிடைப்பது அரிது. அதன் பலன் அதிகம். இந்தப் பாடல்களைப் பாடியதினால் நீ எனக்கு வழிகாட்டியாக இருந்து என்னைக் காப்பாற்றினாய். உன்னுடைய சங்கீர்த்தனைகள் எனக்குக் குறையாத செல்வங்கள்.

நீ பல கீர்த்தனைகளை என் நாவின் மூலம் உன்னைத் துதிக்கச் செய்தாய். ஆயிரம் நாமங்கள் பொருந்திய பெருமானே! உன்னைத் துதிப்பதற்கு எனக்கு என்ன தகுதி இருக்கிறது. நீயே என்மேல் அருள்புரிந்து எனக்கு இப்புண்ணியத்தைத் தந்தாய்.

நான் இந்த வார்த்தைகளைக் கர்வத்துடன் கூறவில்லை. நான் உன்னுடைய மகிமையைப் புகழ்ந்து பாடினேனேத் தவிர என்னுடைய பெருமையைக் கூறுவதற்கு அல்ல. தவறாமல் உன்னைத் தினந்தோறும் பாடிக்கொண்டிருக்கிறேன். என்னுடைய தவறுகளை எண்ணாதத் திருவேங்கடவா நான் என்றும் உன்னுடைய அடியவன்.

# கீர்த்தனை - 103

1 1 1 1 4 1 1
கண்டிரா விண்டிரா கமலநாபுநி ஸக்தி
1 1 1 1
ஒண்டி நீதனி ஸரண மொகடே உபாயமு (பல்லவி)

1 4 1 3 1 3
ஈதனி நாபி பொடமே யெக்குவைன ப்ரம்ஹயூ
1 3 3 3 3
ஈதடே ரட்சிஞ்சிநாடு இந்த்ராதுல
1 3 1 3 1 1 3
ஈத டாகுமீத தேலே நேகார்ணவமு நாடு
1 3 1 1 3 1 3
ஈதடே போ ஹரி மனகந்தரிகி தைவமு (1)

1 3 3 4 1
ஈதடே யஸுரபாத லின்னியு பரிஹரிஞ்சே
1
ஈதனி மூடடுகுலே ஈலோகாலு
1 3 1 1 3
ஈதடே மூலமண்டே நேதெஞ்சி கரிகாசே
1 1 1 1 1 1
ஈதனி கண்டே வேல்புலிக மரி கலரா? (2)

1 3 1 2 4 3 1 1 2
ஈதடே வைகுண்ட நாது டீதடே ரமாநாது
3 1 3 3 1 1
டீதடே வேதோக்த தைவா மின்னிடா தானே
1 3 1 1
ஈதடே அந்தர்யாமி யீ சராசரமுலகு
1 3 1 1 3 1 4
ஈதடே ஸ்ரீவேங்கடேஸு டீஹ பர தனமு (3)

வேதங்கள் போற்றும் திருவேங்கடவன் ஒருவரே பிரம்மன், இந்திரன் போன்ற தேவர்களைக் காத்து அசுரர்களின் கொடுமைகளை நீக்கியவர். அவருடைய கருணை கிடைக்க வேண்டுமென்றால் அவரைச் சரணாகதி அடைவதுதான் ஒரேவழி என்று இப்பாடலில் அன்னமையா குறிப்பிடுகின்றார்.

பார்த்தீர்களா! கேட்டீர்களா! பத்மநாபனுடைய மகிமையை. அவரைச் சரணம் அடைவதுதான் ஒரே வழி.

இவருடைய உந்தியிலிருந்துதான் தேவர்களுக்கும் பெருந்தலைவரான பிரம்மா தோன்றினார். இந்திரன் போன்ற தேவர்களையும் காத்தவர் இவர்தான். யுகமுடிவில் உலகமே நீரில் மூழ்கியபோது ஆலிலையில் பள்ளிகொண்டவரும் இவர்தான். அனைவராலும் 'ஹரி' என்ற பெயரில் அழைக்கப்படும் கடவுள் இவர்தான்.

அரக்கர்களின் கொடுமையிலிருந்து அனைவரையும் காத்தவர் இவர்தான். உலகங்கள் அனைத்தையும் மூன்றடியில் அளந்தவரும் இவர்தான். பரம்பொருள் என்று யானை பிளிரிய உடனே அதனைக் காத்தவரும் இவர்தான். இவரைக்காட்டிலும் உயர்ந்த தேவாதிதேவர்கள் உள்ளார்களா ?

இவர்தான் வைகுண்டநாதன். லட்சுமியின் கணவரும் வேதங்கள் போற்றுகின்ற கடவுளும் இவர்தான். அனைத்து இடங்களிலும் பரவியிருக்கின்றவரும் இவர்தான். அனைத்துப் பொருட்களிலும் குடிகொண்டிருப்பவர் இவர்தான். திருவேங்கடவனான இவர்தான் இவ்வுலகிற்கும் பரலோகத்திற்கும் செல்வமாகத் திகழ்ந்தார்.

## கீர்த்தனை - 104

1 3 4 3
நீவேமி சேதுவய்யா நீவு தயாநிதி வெளதுவு
4 1 1 1 1 1
பாவிம்ப லேனிவாரி பாபமிந்தே கானி (பல்லவி)

1 1 3 3 1 1 3
பரமபத மொசகி பாப மடசேநனி
1 3 1 1 1 1
சரம ஸ்லோகமு நந்து சாடிதிவி தொலுதனே
1 4 1 1 3
நிரதி நீ பூமிலோன நீவல்ல தப்புலேது
1 3 1 1 1 1
பரக நம்மனிவாரி பாப மிந்தே கானி (1)

3 1 1 1
நீ பாதமுலகு நாகு நெய்யமைன லங்கேனி
1 3 1 1 1
ஏபுன த்வயாராமுன நிய்ய கொண்டிவி தொலுத
3 1 3 1 1 1 3 3
தாபுகா நீவல்ல நிங்கா தப்புலேது எஞ்சிசூட
1 1 1 1 1 1
பைபை நம்மனிவாரி பாப மிந்தே கானி (2)

3 1 4 1 4 3
பந்தி புராணமுலனு ப்க்த ஸ‾லபுடனி
1 1 3 1 1 1
அந்தராத்ம வீமாட ஆடிதிவி தொலுதனே
1 1 1 1 1
இந்தட ஸ்ரீவேங்கடேஸ ஏமி ஸேதுவய்யா நீவு
1 1 1 1 1 1
பந்தான நம்மனிவாரி பாபமிந்தே கானி (3)

பாவங்களை நீக்கி மோட்சத்தை அளிப்பேன் என்று இறைவன் பல இடங்களில் பலமுறை கூறியும் அதனைப் பொருட்படுத்தாது வாழ்கின்ற மக்களைப் பற்றி அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகின்றார்.

திருவேங்கடவா! கருணையின் பிறப்பிடமாக இருக்கின்றாய். நீ என்ன செய்ய முடியும்? உன்னை நினைக்காதவர்களுக்குத்தான் பாவம் உண்டாகின்றதே தவிர உன்னிடத்தில் எந்தக் குறையும் இல்லை.

திருவேங்கடவனே! நீ முதன் முதலில் பாவங்கள் எல்லாமே நீங்கச் செய்து மோட்சத்தை அளிப்பேன் என்று சரம சுலோகத்தில்[1] பறையறைந்து கூறினாய். உன்னை நம்பாதவர்களுக்குத்தான் குறை உள்ளதே தவிர உன்னிடத்தில் எந்தத் தவறும் இல்லை.

முதன்முதலில் உன்னுடைய பாதங்களுக்கும் அடியார்களுக்கும் ஓர் அன்புச்சங்கிலி உள்ளது என்று 'த்வய' மந்திரத்தில்[2] கூறினாய். நினைத்துப் பார்த்தால் உன்னை நம்பாதவர்களுக்கு பாவம் வந்து சேருமே தவிர உன்னிடத்தில் எந்தத் தவறும் இல்லை.

புராணங்களில் முதன்முதலில் பக்தர்களுக்கு நான் இனிமையானவன் என்று கூறினாய். நீ அவ்வாறு கூறியும் உன்னை நம்பாதவர்களுக்குத்தான் பாவம் வந்து சேருமே தவிர நீ என்ன செய்வாய்?

1. சரமஸ்லோகம் : ஸர்வ தர்மான் பரித்யஜ்ய
மாமேகம் சரணம் வ்ரஜ
அஹம் த்வா சர்வ பாபேப்யோ
மோட்சயிஷ்யாமி மா ஸுசஹா

2. த்வயமந்திரம் :

ஸ்ரீமதே நாராயணாய நமஹா
ஸ்ரீமன் நாராயண சரணௌ சரணம் ப்ரபத்யே

# கீர்த்தனை - 105

## *ராகம் : பௌலி ராமக்ரியா*

1 3 1 3 1 1 1 1 1 1 3
நேனொக்கட லேகுண்டிதே நீ க்ரபகு பாத்ர மேதி?
1 1 1
பூனி நாவல்லனே கீர்த்தி பொந்தேவு மீநீவு

1 4 3 3
அதி மூடுல லோன நக்ரேஸருட நேனு
1 1 4 3 1 1
ப்ரதிலேனி கனகர்வ பர்வதமனு
1 1 1 3 4 1 3
ததி பஞ்சேந்திரியமுலு தனவந்துடனு நேனு
3 1 1 3
வெதகி நாவண்டி வானி விடுவக செல்லுனா? (1)

1 3
மஹிலோ ஸம்ஸாரபு ஸாம்ராஜ்ய மேலேவாட நேனு
1 1 1 1
இஹமுன கர்மவஹி கெக்கிதி நேனு
1 3 1 3
பஹுயோனி கூபஸம்பத தேலே வாட நேனு
1 1 1
வஹிங்சுக நாவண்டி வானி தேநோபேனா? (2)

4 1 3 1 3 3
பாவிஞ்சி நாவண்டி நீசு பட்டி காசி நப்புடு கா
1 1 1 4
ஏவங்க நீ கீர்த்தி கடுநெந்தாதுருலு புவி
1 1 3
நாவல்ல நீகு புன்யம் நீவல்ல நே ப்ரதுகுது
1 1 3
ஸ்ரீவேங்கடேஸுட இந்தசேரே சும்மி மேலு (3)

பல பாவங்களைச் செய்த என்னைக் காப்பாற்றி நீ புகழுடன் விளங்குகின்றாய் என்று நகைச்சுவையாக அன்னமையா இப்பாடலில் குறிப்பிடுகின்றார்.

திருவேங்கடவா! நான் ஒருவன் இல்லாவிட்டால் நீ யாரிடம் அருள்காட்டுவாய்? என்னால்தான் நீ புகழுடன் திகழ்கின்றாய்.

அறியாமை என்னும் இருளிலே முழுவதும் மூழ்கியவன் நான். மலைபோன்று ஈடு இணையில்லாத மிகுந்த கர்வத்தைக் கொண்டவன் நான். ஐந்து வகைப்பட்ட இந்திரியங்கள் என்ற செல்வத்தைப் படைத்தவன் நான். இப்படிப்பட்ட என்னை காத்து அருளாமல் விட்டுவிடுவது உனக்குத் தகுமா?

இந்த உலகிலே இல்லற வாழ்க்கை என்ற சாம்ராஜ்யத்தை ஆள்கின்றவன் நான். தீய கர்மங்களை மிகுதியாகப் பெற்றவன் நான். பிறவி என்ற சக்கரத்தில் சுழன்று இன்பமடைந்திருப்பவன் நான். இப்படிப்பட்ட என்னை ஆளாமல் இருப்பது தகுமோ?

என்போன்ற கொடிய பாவியை காத்ததினால் தான் உன்னுடைய புகழைப் போற்றுகிறார்கள். என்னால் உனக்குப் புண்ணியம் உண்டாயிற்று. உன்னால் நான் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். திருவேங்கடவனே! இதுபோன்று நாம் இருவரும் பயன் அடைந்து கொண்டிருக்கிறோம்.

## கீர்த்தனை - 106

### *ராகம் : ஸாளங்கநாட்டா*

1 3 1 1 1 1
எக்கடி நரகமுலு எக்கடி ப்ருத்யூவு மாகு
3 1 3 1 3 1
தக்கி நீ திவ்ய நாமாம்ருதமு ஜுரொ கொண்டிமி (பல்லவி)

1 1 1 1 3 1 3
தமிதோ ஸ்ரீபதி நீ தாஸுல சேரி நப்புடே
1 1 4 3 1
யமகிங்கர பயமு லணகி போயே
4 2 1 3
ஜமலி நீ ஆயுத லாஞ்சனமு மோசிநப்புடே
1 3 1
அமர கால தண்டமு லவி எல்ல பொலிஸே (1)

3 1 3 1 3
முனு நீ நகரி த்ரோவ மொகமைன யப்புடே
4 3 3 3
கன யாம்ய மார்கமு கட்டு வடியே
1 1 1 1 1 1 3
ஒனர நீ திருப்பதி நொக ராத்ரி உன்னபுடே
1 1 1 3 4 1 1
கனலு கால ஸூத்ராதி காதலெல்லா பூடே (2)

3 1 1 1 1 3
யெட்ரை நீ மந்த்ர ஜப மெஞ்சு கொன்ன யப்புடே
1 3 1 1 3 3
கடு சித்ரகுப்துநி லெக்கலு கடசே
3 3 1 1
வடிகா ஸ்ரீவேங்கடேஸ்வர மீ ஸரணனகா
3 1 2 1
அடரி வைகுண்டமு மா யரசேதா நிலிசே (3)

இப்பாடலில் அன்னமையா பெருமாளுடைய திருநாமத்தின் மகிமை, பாகவதர்களின் மேல் காட்ட வேண்டிய அன்பு, திருமண் காப்பு அணிதல், அவரது திவ்ய தேசத்தின் பெருமை போன்றவற்றை வர்ணிக்கின்றார்.

திருவேங்கடவனே! உன்னுடைய திவ்ய நாமம் என்ற அமுதினை நாங்கள் பருகினோம். இனி எங்களுக்கு நரக பயமும் இல்லை, மரண பயமும் இல்லை.

மாதவனே! ஆர்வத்துடன் உன்னுடைய அடியார்களின் கூட்டத்தில் சேர்ந்த உடனே எமதூதர்களுடைய பயம் நீங்கியது. மகிழ்ச்சியுடன் சங்குச் சக்கரங்களைப் பொறித்த உடனே நாங்கள் செய்த தவறுகளுக்கு உண்டான தண்டனை விலகியது.

உன்னுடைய திவ்ய தேசத்திற்குச் செல்ல வேண்டுமென்று அடியெடுத்து வைத்த உடனே அச்சந்தரக்கூடிய எமலோகத்திற்குக் கொண்டு செல்லும் வழி மறைந்தது. உன்னுடைய புனிதமான திருப்பதியில் ஓர் இரவில் தங்கியதனால் நரக பாதையில் உண்டான காயங்கள் அனைத்தும் மறைந்து போயின.

உன்னுடைய திருமந்திரத்தை ஜெபிக்க வேண்டுமென்று நினைத்த உடனே சித்திரகுப்த எழுதிய கணக்குகள் அனைத்துமே அழிந்துவிட்டன. திருவேங்கடவனே! நான் உன்னிடம் 'சரணம்' என்று சொன்ன உடனே பவித்திரமான வைகுண்டமே எனது கைவசமாயிற்று.

## கீர்த்தனை - 107

3 1 3 1 3
சூடரம்மா ஸதுலாலா ஸோபான பாடரம்மா
1 3 1 1 3 1 3 1
கூடுன்னதி பதி சூடிகுடுத்த நாஞ்சாரி (பல்லவி)

1 3 1 3
ஸ்ரீமஹாலட்சுமியட ஸிங்காரலகே மருது
1 1 1 3 1 3
காமுனி தல்லியட சக்கதனாலா கே மருது
1 3 1 1 1 1 3
ஸோமுனி தோபுட்டுவட களலகே மருது
1 3 3 1 3 1
கோமலாங்கி ஈ சூடி குடுத்த நாஞ்சாரி (1)

1 3 4 1 1 1 3 4 1 3
கலஸாப்தி கூதுரடா கம்பீரால கேமருது
1 1 1 1 1 3 3
தலப லோகமாதாயட தய மரி மேமருது
1 3 3
ஜலஜ நிவாஸினியட சல்லதன மே மருது
1 3 3 1 3 1
கொலதி மீர ஈ சூடி குடுத்த நாஞ்சாரி (2)

3 1 1 1 3
அமரவந்தித யட அட்டே மஹிம யேமருது
1 1 1 3 1 3
அம்ருதமு சுட்டமட ஆனந்தால கே மருது
1 1 1 1 1 1 3 3
தமிதோ ஸ்ரீவேங்கடேஸு தானெவச்சி பெண்ட்லாடே
3 1 3 1
கொமர வயஸு ஈ சூடிகுடுத்த நாஞ்சாரி (3)

அன்னமாச்சார்யார் பாடிய ஆண்டாள் பற்றிய பாடல்களில் இது சிறப்புடையதாக அமைந்துள்ளது. இப்பாடலில் அன்னமையா சூடிக்கொடுத்த சுடர்கொடியாகிய நாச்சியாரின் பெருமையையும் சிறப்பினையும் வாழ்த்துகின்றார்.

ஓ பெண்களே காண்பீர்களாக! பெண்களே மங்கள வாழ்த்தினால் பாடுவீர்களாக! சூடிக்கொடுத்த நாச்சியாராகிய இவள் தன்னுடைய கணவனுடன் காட்சியளிக்கின்றாள்.

ஸ்ரீ மகாலட்சுமியாய்த் திகழ்கின்ற தாயாருக்கு அலங்காரங்களுக்கு என்ன குறை? மன்மதனுக்கே தாயாக விளங்குகின்ற அவளுக்கு அழகுக்கு என்ன குறை? சந்திரனின் உடன் பிறந்தவளாகிய அவளுக்கு சிங்காரம் எதற்கு? மென்மையான அங்கங்களுடன் திகழ்கின்றவள் சூடிக்கொடுத்த நாச்சியார்.

கடலுக்கு மகளான அவளுக்கு மாட்சிமைக்கு என்ன குறை? உலகத்திற்கே தாயாகத் திகழ்கின்ற இவளுக்கு கருணைக்கு என்ன குறை? தாமரையை உறைவிடமாகக் கொண்ட இவளுக்கு குளுமைத் தன்மைக்கு என்ன குறை? எல்லையே இல்லாமல் திகழ்கின்றவள் இந்தச் சூடிக்கொடுத்த நாச்சியார்.

தேவர்களால் வணங்கப்படுகின்ற அவளுக்கு புகழுக்கு என்ன குறை? அமுதத்துடன் உறவு கொண்டவளான அவளுக்கு மகிழ்ச்சிக்கு என்ன குறை? திருவேங்கடவன் ஆசையுடன் தானாகவே வந்து இளம்பெண்ணாகிய சூடிக் கொடுத்த நாச்சியாரை திருமணம் செய்து கொண்டார்.

# கீர்த்தனை - 108

*ராகம் : லலிதா*

மங்களமு கோவிந்துனகு ஜெயமங்களமு கருடத்வஜுனகு
மங்களமு ஸர்வாத்மகுனகு தர்மஸ்வருபுனகு ஜெயஜெய
(பல்லவி)

ஆதிகி நாதைன தேவுன கச்யுதுன கம்போஜ நாபுன
காதி கூர்மம்பைன ஜகதாதார மூர்த்திகினி
வேதரட்சகுனகுனு ஸந்தத வேதமார்க்க விஹருனகு பலி
பேதிகினி ஸாமாதிகான ப்ரிய விஹா ருனகு (1)

ஹரிகி பரமேஸ்வருனகு ஸ்ரீதருனகுனு காலாந்தகுனகுனு
பரம புருஷோத்தமுனகு பஹுபந்த தூருனகுனு
ஸுரமுனி ஸ்தோத்ருரனகு தேவாஸுரகண ஸ்ரேஷ்டுனகு
கருணா
கருனகுனு காத்யாயினீஸுத கலித நாமுனகு (2)

பங்கஜாஸன வரதுனகு பவபங்க விச்சேதுனகு பவுனகு
ஸங்கருனா கவ்யக்துனகு நாஸசர்ய ரூபுனகு
வேங்கடாசல வல்லபுனகு விஸ்வமூர்த்திகி
நீஸ்வருனகுனு
பங்கஜா குசகும்பா குங்கும பங்கலோலுனகு
ஜெயஜெய (3)

திருவேங்கடவனின் எண்ணற்ற கல்யாண குணங்களைப் போற்றியும் அப்பெருமானின் நற்சிறப்பினைப் போற்றியும் பல்லாண்டு பாடுகிறார் அன்னமையா.

பல்லாண்டு கோவிந்தனுக்குப் பல்லாயிரத்தாண்டு கருடனைக் கொடியாகக் கொண்டவனுக்கு. அனைவரின் உள்ளத்திலும் குடிகொண்டிருக்கின்ற பரமாத்மாவிற்குப் பல்லாண்டு. தர்மமே வடிவாகக் கொண்ட பெருமானுக்குப் பலகோடிப் பல்லாண்டு.

மூலப்பொருளுக்கெல்லாம் மூலமாகத் திகழ்ந்த பெருமானுக்கு, அழிவில்லாத பத்மநாபனுக்கு ஆமை வடிவெடுத்து இந்த உலகினைக் காத்த பரந்தாமனுக்கு, வேதங்களைக் காத்தருளியவனுக்கு, வேதங்களில் கூறப்பட்ட வழிகளில் எப்பொழுதும் நடப்பவனுக்கு, மகாபலியினால் ஏற்பட்ட இடர்களை நீக்கியவனுக்கு, சாமகானத்தை விரும்பி மகிழ்ச்சியுடன் கேட்பவனுக்குப் பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு.

ஸ்ரீஹரிக்கு, பரமேஸ்வரனுக்கு, காலத்தைக் கடந்தவனுக்கு புருஷோத்தமனுக்கு, பந்தத்திலிருந்து முற்றிலும் விடுபட்டு இருப்பவனுக்கு, தேவரிஷிகளால் போற்றப்படுபவனுக்கு, தேவர்களில் சிறந்தவனுக்கு, கருணையின் இருப்பிடமாக இருப்பவனுக்கு, பார்வதியினால் போற்றப்படுகின்ற நாமத்தை உடையவனுக்குப் பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு.

பிரம்மாவிற்கு வரங்களை அளித்தவனுக்கு, பிறப்பு என்ற துயர்த்தைப் போக்கியவனுக்கு, பிரம்மன், சிவன் போன்றோர்களால் அறிந்துகொள்ள இயலாமல் இருப்பவனுக்கு, வியக்கத்தக்க வடிவத்தினைக் கொண்டிருப்பவனுக்கு, திருவேங்கட மலைக்கு அரசனாக இருப்பவனுக்கு, உலகங்கள் அனைத்திற்கும் தெய்வமாக இருப்பவனுக்கு, உலகங்கள் அனைத்தையும் தனது ஆளுகைக்கு உட்படுத்தி இருக்கின்ற ஈஸ்வரனுக்கு, லட்சுமியின் கொங்கையில் அணிந்திருக்கின்ற குங்குமத்தில் மயங்கி இருந்த பெருமானுக்குப் பல்லாண்டு பல்லாயிரத்தாண்டு.

# கீர்த்தனைகளின் அகர வரிசை

தெலுங்கில் மட்டுமின்றி தென்னிந்திய இலக்கியங்களிலேயே முதன்முதலாக கீர்த்தனை இலக்கிய வகைக்கு வித்திட்டவர் மகாகவி அன்னமாச்சார்யர் ஆவார். 15-ம் நூற்றாண்டைச் சேர்ந்த இவர் புரந்தரதாஸர், தியாகராஜர் போன்ற கவிஞர்களுக்கு ஒரு வழிகாட்டியாக திகழ்ந்தார். அன்னமாச்சார்யார் 32,000 கீர்த்தனைகள் எழுதியதாக கூறுவர். எனினும் தற்போது 13,000 கீர்த்தனைகள் மட்டுமே கிடைத்துள்ளன.

அன்னமாச்சார்யரின் அனைத்துப் பாடல்களும் செப்பேடுகளில் எழுதப்பட்டு அவை திருமலையில் உள்ள திருவேங்கடவனின் திருக்கோவிலின் ஓர் அறையில் பாதுகாக்கப்பட்டுள்ளன. வடமொழி நூல்களில் உள்ள வைணவக் கருத்துக்களைப் பாமர மக்களும் புரிந்து கொள்ளும் வகையில் மக்கள் மொழியில் அன்னமய்யா தந்துள்ளார்.

நம்மாழ்வாரை 'வேதம் தமிழ் செய்த வித்தகன்' என்று போற்றுவதைப் போனறு அன்னமாச்சார்யரை 'திராவிட ஆகமச் சக்கரவர்த்தி' என்று போற்றுகின்றனர். திருநாவுக்கரசரை திருநீற்றறையில் இட்டபோது 'மாசில் வீணையும்....' என்று இறைவனை நினைத்து பாடியபோது அதில் உள்ள வெம்மை நீங்கி, குளிர்ச்சி உண்டாகி இறைவனது திருவருள் கிடைத்தது. இதனைப் போன்று அன்னமய்யாவை விலங்கிட்டபோது 'பசி வந்த போதும்...' என்ற பாடலை இறைவனை நினைத்து பாடினார். அப்பொழுது விலங்குகள் அறுபட்டு வேங்கடநாதனின் திருவருள் அவருக்குக் கிடைத்தது.

ஆழ்வார் பாடல்களில் அமைந்துள்ள இறையுணர்வும் கருத்தும் அன்னமய்யா பாடல்களில் காணப்படுகின்றன. ஆழ்வார் பாடல்களோடு அன்னமாச்சார்யரின் பாடல்களை ஒப்பிட்டு ஆய்வோருக்கு இப்புத்தகம் ஒரு வழிகாட்டியாக அமைந்து துணை நிற்கும்.